# ஆடு ஜீவிதம்

பென்யாமின்

தமிழில்: எஸ்.ராமன்



# ஆடு ஜீவிதம்

## பென்யாமின்

தமிழில்

## எஸ். ராமன்



உயிர்மை
பதிப்பகம்

விலை ரூ. 140

உயிர்மை பதிப்பக வெளியீடு : 347

ஆடு ஜீவிதம் ⁄ மொழிபெயர்ப்பு நாவல் ⁄ மலையாள மூலம் : பென்யாமின் ⁄ தமிழில்: எஸ். ராமன் ⁄ © பென்யாமின் ⁄ முதல் பதிப்பு : டிசம்பர் 2010 ⁄ வெளியீடு : உயிர்மை பதிப்பகம், 11/29 சுப்பிரமணியம் தெரு, அபிராமபுரம், சென்னை –600 018 தொலைபேசி : 91 – 44 – 24993448, மின்னஞ்சல் : uyirmmai@gmail.com, இணையதளம் : www.uyirmmai.com ⁄ அட்டை வடிவமைப்பு: ஸ்ரீபதி பத்மநாபா ⁄ அச்சாக்கம் : பத்மாவதி ஆஃப்செட், சென்னை 600 005

Aadu Jeevithaml ⁄ Translated Novel from Malayalam ⁄ Author : Benyamin ⁄ © Benyamin ⁄ Translated by S.Raman ⁄ Language: Tamil ⁄ First Edition : Oct. 2010 ⁄ Demy 1x8 ⁄ Paper : 18.6 kg maplitho ⁄ Pages : 240 ⁄ Published by : Uyirmmai Pathippagam, 11/29 Subramaniam Street, Abiramapuram, Chennai - 600 018, India. Tele/Fax : 91-44 -24993448, e-mail : uyirmmai@gmail.com Website: www.uyirmmai.com ⁄ Cover Designed by Shreepathy Padhmanabha ⁄ Printed at Padmavathi Offset, Chennai 600 005 ⁄ Price : Rs.140

ISBN : 978-93-81095-36-2



## பென்யாமின்

பென்யாமின் கேரள மாநிலம், பத்தனம்திட்டா மாவட்டம், குலநடா என்ற ஊரைச் சேந்தவர். மலையாளத்தின் புகழ் பெற்ற நாவலாசிரியராகவும் சிறுகதையாசிரியராகவும் திகழ் கிறார். கடந்த 18 வருடங்களாக பஹ்ரைனில் வசித்து வருகிறார். இவருடைய 'ஆடு ஜீவிதம்' என்ற இந்த நாவல் கேரள சாகித்திய அகாதெமி விருது, அபுதாபி சக்தி நாவல் விருது ஆகியவற்றை பெற்றிருப்பதுடன் கேரளப்பல்கலைக் கழகம், கோழிக்கோடு பல்கலைக்கழகம், பாண்டிச்சேரி பல்கலைக்கழகம் மற்றும் கேரள மாநில பத்தாம் வகுப்பு ஆகியவற்றில் பாடப்புத்தகமாக தேர்வு செய்யப்பட்டுள்ளது. வெகுவிரைவில் திரைப்படமாக வரவிருக்கிறது.

இவருடைய பிற நூல்கள்:

சிறுகதைகள்: யுதானஸியா, பெண்மாறாட்டம், இ.எம்.எஸ் ஸும் பெண் குட்டியும்,

நாவல்கள்: அபீசகின், பிரவாசகன்மாருடெ ரெண்டாம் புஸ்தகம், அக்கப்போரின்றெ இருபது நஸ்ராணி வர்ஷங்கள்

கட்டுரை: இருண்ட வனஸ்தலிகள்.

பிற விருதுகள்: அபுதாபி மலையாளி சமாஜம் விருது, அட்லஸ்-கைரளி விருது (இரண்டு முறை), கே.ஏ. கொடுங் கல்லூர் கதா புரஸ்காரம்.

## எஸ். ராமன்

எஸ். ராமன் - பத்திரிகையாளர், மொழிபெயர்ப்பாளர், கன்னியாகுமரி மாவட்டம், சுசீந்திரத்தின் அருகே ஆஸ்ராமம் என்னும் சிற்றூரில் பிறந்தவர். கடந்த இருபது வருடங்களாக *மலையாள மனோரமா* பத்திரிகையில் பணியாற்றி வருகிறார். மலையாளத்தின் சிறந்த படைப்புகளைத் தமிழுக்குக் கொண்டுவரும் முயற்சியில் புனத்தில் குஞ்ஞப்துல்லாவின் *மருந்து* (நாவல்) இவரது முதல் மொழிபெயர்ப்பு நூல். இது இரண்டாவது மொழிபெயர்ப்பு.

இவரது படைப்புகளும், மொழிபெயர்ப்புகளும் தமிழ்ச் சிறு பத்திரிகைகளில் ஏற்கனவே வெளியாகியிருக்கின்றன.

# ஒரு வார்த்தை...

வழக்கம்போலவே அன்றும் ஏதோவொரு விஷயமாக நண்பருடன் பேசிக்கொண்டு இருந்தபோது, அவரது மேஜையின் மீது சிதறிக்கிடந்த புத்தகங்களில் ஒன்று என் கவனத்தை ஈர்த்தது. காரணம் புரியவில்லை.

ஒருவேளை மனித முகமும், ஆட்டு உடலும் கொண்ட வினோத மான அந்த அட்டைப் படமாக இருந்திருக்கலாம்.

ஆர்வம் மேலிட அதைக் கையிலெடுத்தேன்.

புத்தகத்தைப் புரட்டத்தொடங்கியபோது என்னையுமறியாமல் அந்த புத்தகத்தில் கரைந்துபோனேன்.

அந்த தாள்களுக்குள், வயிற்றுப் பிழைப்புக்காக வீட்டையும் நாட்டையும் பிரிந்து, விதியின் அலட்சியத்தால் சுட்டெரிக்கும் பாலைவனத்துக்குள் சென்று அகப்பட்டுக்கொண்ட இந்த கதையின் நாயகன் நஜீபைப் போல் என்னாலும் அந்த புத்தகத்திலிருந்து தப்பித்து வெளியேற முடியவில்லை.

மனிதச் சுவடுகளை முற்றிலுமாக பறிகொடுத்துவிட்டு, ஒரு முரட்டு அரபியின் ஆட்டுக்கிடைக்குள் மாட்டிக்கொண்ட ஒரு மனித ஆட்டின் இந்த அனுபவக்கதை என்னை முற்றிலும் புதிய ஒரு உலகத்துக்குள் இழுத்துக்கொண்டு போய்விட்டது.

அந்த அனுபவத்தின் தமிழ் வடிவம்தான் இந்தக்கதை.

பொதுவாக நமக்கு பாலைவனத்துடனான தொடர்பு மிகக்குறைவு தான். கடல் அனுபவங்களைப்பற்றியும், கானகப் பயணங்களைக் குறித்தும் தமிழில் படிக்கக் கிடைக்கின்றன.

ஆனால் வெம்மை தகிக்கும் வறண்ட பாலைவன அனுபவங்களைக் கூறும் நூல்கள் தமிழில் குறைவே. (சங்க இலக்கியங்களின் பாலைத் திணை குறித்த பாடல்களைச் சொல்லவில்லை.)

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் திணைப் பாகு பாட்டில் கடைசியாக வரும் பாலை, செழிப்பான தமிழ்ப் பரப்பில்

தன்னை முழுமையாக வெளிப்படுத்த அதிகம் வாய்ப்பில்லை. மட்டுமல்ல, அண்டை வீட்டு மலையாளிகளைப் போல் தமிழருக்கு பாலைவனப் பரப்பான வளைகுடாவுடன் அத்தனை நெருக்கமும் இல்லை.

பஹ்ரைனில் பணிபுரியம் பென்யாமின் மலையாளத்தில் எழுதிய இந்த பாலைவனக் கதை, அந்தக் குறையை ஓரளவு போக்கும் என்று நம்புகிறேன்.

ரியாத் ஏர்போர்ட்டிலிருந்து அர்பாபுவுடன் பிக்–அப் வேனில் ஏறிப்போகும் நஜீப், நம்மையும் கூடவே இழுத்துச் சென்றுவிடுகிறான். திக்கு தெரியாத வெட்டவெளி பாலைவனத்தில், ஆடுகளுடன் ஆடாக (ஆட்டுக்காவது சந்தை மதிப்புண்டு) வாழும் நிலைக்கு தள்ளப்பட்ட நஜீப், தனது வேதனைகளையும், துயரங்களையும் நம்மிடம் பகிர்ந்துகொள்ளும் அதேவேளையில், அற்புதமான வாழ்க்கைப் பாடத்தை மெல்லிய நகைச்சுவை இழையோட நமக்கு கற்றுத் தருகிறான்.

விளிம்புநிலை மனிதர்களுக்கு நஜீபின் வாழ்க்கை ஒரு அனுபவப் பாடம்.

இந்த மொழிபெயர்ப்பின் செம்மையாக்கத்தில், தமிழ் பதிப்புலகின் முக்கியமானவர்களில் ஒருவராக நான் கருதும், எனது மதிப்பிற்குரிய, என் குழந்தைகளால் ‘தாத்தா’ என்று வாஞ்சையுடன் அழைக்கப்படும் ‘எம்.எஸ்.’ சார் அவர்களின் வியர்வைத்துளிகள் உண்டு.

மொழியின் உயிர்ப்பு நீர்த்துப்போய்விடாமல் எனக்கு தோள் கொடுத்து வரும் என் மனைவி கோமதிக்கும், ஆர்வத்துடன் கேள்விகள் கேட்டு இந்த மொழிபெயர்ப்பின் மீது எனக்கு அக்கறை ஏற்படுத்திய என் இரு மகள்களுக்கும் இதில் பங்குண்டு.

நண்பர் ஆரிஃப் அளித்த ஆக்கப்பூர்வமான உழைப்பு நூலின் ஒவ்வொரு பக்கத்திலும் ஒளிந்து கிடக்கிறது.

அச்சுக்கோர்த்த தம்பி ‘கல்லூர்’ எம். மகாராஜன் என் நன்றிக்கு உரியவர்.

தனது அனுபவ வீச்சுகளை அருமையான ஆலோசனைகளாக வழங்கி, நூலை நல்ல முறையில் வெளியிட்ட உயிர்மை மனுஷ்ய புத்திரன் அவர்களுக்கு எனது நன்றிகள்.

அன்புடன்,

**எஸ். ராமன்**

**டிசம்பர், 2010**

# ஆடு ஜீவிதம்

பத்தா நகரத்திலிருந்த அந்த சின்னஞ்சிறிய போலீஸ் ஸ்டேஷனின் முன்னால் தோற்றவர்களைப்போல நின்று கொண்டிருந்தோம் நானும் ஹமீதும்.

வாசல் கேட்டோடு சேர்ந்திருந்த கூண்டுக்குள் இரண்டு போலீஸ் காரர்கள்.

ஒருத்தன் எதையோ படித்துக்கொண்டிருக்கிறான்.

அவன் உட்கார்ந்திருந்த விதமும், அவனுடைய தலையசைப்பும், லயிப்பில் செருகியிருந்த கண்களும் அவன் ஏதோவொரு மத கிரந்தத்தைத்தான் வாசித்துக்கொண்டிருக்கிறான் என்பதை உறுதிப் படுத்தின.

மற்றொருவன் தொலைபேசிக் கொண்டிருந்தான். அவனுடைய பேச்சும், சிரிப்பும், அட்டகாசமும் இங்கே நாங்கள் நிற்கும் இந்த ரோடு வரையிலும் வந்து தெறிக்கிறது.

அருகருகே இருந்தபோதிலும் அவர்களிருவரும் வேறுவேறு உலகத்தில்.

அந்த இரண்டு உலகமுமே எங்களைப் பொருட்படுத்தவில்லை.

செக்யூரிட்டி கூண்டுக்கு சற்று தொலைவில் பாதையோரமாக ஒரு காட்டு எலுமிச்சை வளைந்து நிற்கிறது. அதன் நிழலில் நாங்களிருவரும் குத்துக்காலிட்டு சாய்ந்திருந்தோம்.

அந்த இரண்டு பாராக்காரர்களில் யாரேனும் ஒருவனாவது எங்களைப் பார்த்துவிட மாட்டானா என்னும் ஏக்கத்துடன், காலையிலிருந்து அப்படியே இருந்ததால் ஏற்பட்ட முதுகு வலியையும் பொருட்படுத்தாமல், நாங்கள் அங்கேயே உட்கார்ந்திருந்தோம்.

அதற்கிடையே சில அரபிகள் போலீஸ் ஸ்டேஷனுக்குள் வேகமாகப் போவதும் வருவதுமாக இருந்தார்கள். அந்த அவசரத்தில் அவர்கள் எங்கள் பக்கமாகப் பார்ப்பதற்கு வாய்ப்பே இல்லை.

அப்போது ஸ்டேஷன் காம்பவுண்டுக்குள்ளேயிருந்து ஒரு போலீஸ் வேன் வேகமாக வெளியே பாய்ந்து வந்தது. அதைப் பார்த்ததும் ஆர்வம் மேலிட நாங்களிருவரும் சாலையை நோக்கி ஓடினோம்.

ஆனால் பிரதான சாலையில் வண்டி ஏதேனும் வருகிறதா என்று பார்ப்பதற்காக சற்றே வேகத்தைக் குறைத்த வேன், பின்னர் மீண்டும் அசுர வேகமெடுத்து சாலையில் போய் மறைந்தது.

ஏமாற்றத்துடன் நாங்கள் மீண்டும் மரத்தடிக்கே திரும்பினோம்.

முதல் பாராக்காரன் பேசிமுடித்துவிட்டதாகத் தோன்றும் போதெல் லாம் நாங்கள் அவசரமாக எழுந்து, ஒரு வித நப்பாசையுடன் செக் யூரிட்டி கூண்டு வரை நடப்போம்.

ஆனால் அதனால் ஒரு பிரயோஜனமும் இல்லை. அவன் ஒரு நிமிஷம்கூட இடைவெளி விடாமல் அடுத்தடுத்து பல்வேறு அழைப்பு களுக்குள் மூழ்கிப் போய்க் கொண்டிருந்தான்.

புத்தகத்தைப் புரட்டிக் கொண்டிருந்தவனோ இப்போதைக்கெல் லாம் படித்து முடிப்பதாகத் தெரியவில்லை.

பொறுமையிழந்த நாங்கள், அவர்களின் கவனத்தைத் திருப்பு வதற்காக செக்யூரிட்டி கூண்டுக்கு முன்பாக அங்குமிங்குமாக பல தடவை நடந்து பார்த்தோம்.

அவர்களோ எங்களைத் திரும்பிக்கூட பார்க்கவில்லை. மட்டுமல்ல, எங்களிடம் ஒரு 'போலீஸ் கேள்வி' கூட கேட்கவில்லை.

ஏதோவொரு அவசரத்தில் அடையாள அட்டையை அறைக்குள் வைத்துவிட்டு வெளியே வந்துவிடும் துர்பாக்கியசாலிகள் பலரை சந்தையிலும், பொதுவிடங்களிலும், மஸூதிக்கு முன்னிலும் கையும் களவுமாகப் பிடித்து ஜெயிலில் அடைத்த கதைகள் பலவற்றை நாங்கள் கேட்டிருக்கிறோம். அதற்கு ஆசைப்பட்டுதானே நாங்களிரு வரும் இத்தனை நாட்களாக இந்தச் சந்தைக்குள்ளேயும், நாற்றம் பிடித்த மீன் தெருவுக்குள்ளேயும், பொது வழிகளிலும் அலைந்து கொண்டிருக்கிறோம்.

எத்தனையோ முத்தவல்லிகள் (ஷரியத் சட்டத்தை அமல் படுத்தும் மத போதகர்கள்) எங்களைக் கடந்து போகிறார்கள். அவர்களில் ஒருத்தர்கூட எங்களைத் தடுக்கவில்லையே. எவ்வளவு போலீஸ் காரர்களின் முன்னால் நாங்களாகவே போய் நின்றிருப்போம். அவர் களில் ஒருத்தன் கூட எங்களைத் திரும்பிப் பார்க்கவில்லையே.

அதிகம் சொல்வானேன்... தொழுகை நேரத்தில் எத்தனையோ மஸூதிகளுக்கு முன்னால் சந்தேகப்படும் விதமாக நாங்கள் நடந்து திரிந்திருக்கிறோம். ஆனாலும் எங்கள் முயற்சி ஒருமுறைகூட பலிக்க

வில்லையே. அங்கேயிருந்த ஒருத்தருக்குக் கூடவா எங்கள் மீது சந்தேகம் வரவில்லை?

ஒரு நாள் எப்படியாவது எங்களை கவனிக்கட்டும் என்ற முடிவுடன், ஒரு போலீஸ்காரரின் காலில் இடறி கீழே விழுவது போல் பாசாங்கு கூட செய்து பார்த்தேன்.

ஆனால் அவனோ என்னிடம் விசாரணை நடத்துவதற்குப் பதிலாக என்னை கை தூக்கிவிட்டு, அல்லாஹுவின் திருநாமத்திடம் மன்னிப்புக் கேட்டபடியே எனக்கு ஆறுதலும் சொல்லி அனுப்பி வைத்தான்.

நாம் விரும்பும்போது துரதிர்ஷ்டம் கூட நம்மை வந்து சேரத் தயங்குகிறது. உண்மையிலேயே இது பரிதாபகரமானதுதான்.

வேறு வழியெதுவும் தெரியாமல்தான் கடைசியாக இதோ இந்த போலீஸ் ஸ்டேஷனுக்கு முன்னால் வந்து நிற்கிறோம்.

ஆனாலும் என்ன சொல்ல! இங்கும் நிலைமை அப்படித்தானே இருக்கிறது?

சலித்துப்போன நாங்கள் கடைசியாக செக்யூரிட்டி கூண்டைத் தாண்டி நேரடியாக போலீஸ் ஸ்டேஷனுக்குள்ளேயே நுழைவது என்று முடிவு செய்தோம்.

ஹமீதிடமிருந்து இப்படியொரு யோசனை வந்ததுமே, அதற்காகவே காத்திருந்தவனைப் போல் நான் சடாரென்று எழுந்து நடக்கத் தொடங்கினேன்.

இதற்கு மேலும் என்னால் காத்திருக்க முடியாது... கேட்டின் குறுக்காகப் பாவியிருந்த இரும்பு உருளைகளைத் தாண்டும் போது, புத்தகம் படித்துக் கொண்டிருந்த பாராக்காரன் கண்ணுயர்த்தி எங்களை பின்னாலிருந்து கூப்பிட்டான்.

'போலீஸ் அதிகாரி முதீரைப் பார்க்க வேண்டும்' என்று சொல்லிக் கொண்டே நான் செக்யூரிட்டி கூண்டை நோக்கி திரும்பினேன்.

ஆனால் அவனோ உள்ளே போகும்படி சைகை செய்துவிட்டு மீண்டும் புத்தகத்தைப் புரட்டத் தொடங்கினான்.

நீண்ட படிக்கட்டுகளையும், குரான் வாசகங்கள் எழுதப்பட்டிருந்த அகலமான வாசல்களையும் தாண்டி நாங்கள் ஸ்டேஷனுக்குள் நுழைந்தோம்.

தோரணங்கள் போல் ஏராளமான காகிதங்கள் குத்தப்பட்டிருந்த ஒரு நோட்டீஸ் போர்டின் கீழ் சில போலீஸ்காரர்கள் குபூஸும், காவாவும் குடித்தபடியே சளசளவென்று பேசிக் கொண்டிருந்தார்கள்.

அங்கிருந்த ஒரு கவுண்டரின் முன்னால் நாங்கள் தயங்கி நின்றோம். சாப்பாட்டிற்கிடையே எப்போதோ ஒரு முறை திரும்பிப் பார்த்த ஒரு போலீஸ்காரன், சாப்பிடுவதை நிறுத்தாமலேயே 'என்ன?' என்று தன் புருவத்தை உயர்த்திக் கேட்டான்.

'மொழி தெரியாது' என்று சொல்லும் விதத்தில் நான் சில சைகைகளைக் காட்டினேன்.

கையில் ஒரு காவா கோப்பையுடன் வந்த வேறொரு போலீஸ்காரன் எங்களிடம், 'அடையாள அட்டை இருக்கிறதா?' என்று கேட்டான். (அப்பாடி... கடைசியாக ஒருவன் கேட்டே விட்டான்!)

நாங்கள் 'இல்லை'யென்று பரிதாபமாகத் தலையாட்டினோம்.

காவா கோப்பையை மேஜையின் மீது வைத்துவிட்டு, மேஜைக் குள்ளேயிருந்து ஒரு டிஷ்யூ பேப்பரையெடுத்து தன் கையையும் வாயையும் துடைத்தபடி அவன், உள்பக்கமாக நடந்து கொண்டே தன்னைப் பின்தொடருமாறு சைகை செய்தான்.

அந்த போலீஸ்காரன் எங்களை முதீரின் அறைக்குக் கூட்டிக் கொண்டு போனான். கம்ப்யூட்டரில் ஏதோ செய்து கொண்டிருந்த முதீர் எங்களைப் பார்த்ததும் நிமிர்ந்து உட்கார்ந்தான்.

எங்களை அழைத்துப் போன போலீஸ்காரன் முதீரிடம் ஏதோ சொல்ல, முதீர் எங்கள் பக்கம் திரும்பி ஏதேதோ கேள்விகள் கேட்டான்.

நாங்களோ எதுவும் புரியாதவர்களாய் மலங்க விழித்தோம்.

அது நடிப்பில்லை. உண்மையிலேயே அவர்கள் பேசியது, முதீர் எங்களிடம் கேட்டது எதுவுமே எனக்கு புரியவில்லை.

ஆனால் ஹமீது தனக்கு எதுவும் புரியவில்லை என்று காட்டியது வெறும் பாசாங்குதான். அவன் அரபியில் சரளமாகப் பேசுவதை நானே பலதடவை கேட்டிருக்கிறேன்.

முதீரும் அந்த போலீஸ்காரனும் தங்களுக்குள் மீண்டும் ஏதோ பேசிக்கொண்டார்கள்.

அதற்கிடையே நான் முதீரின் அறைக்குள் என் கண்களை ஒரு முறை ஓடவிட்டேன்.

அதுவொரு பெரிய அறை. குரான் வாசகங்களும், சுல்தான்களின் புகைப்படங்களும், கஃஅபாவின் படமும் சுவர்களை அலங்கரித்தன. முதீரின் இடதுபுறம் ஒரு டி.வி.யும், வலதுபக்கம் ஒரு கம்ப்யூட்டரும் வைக்கப்பட்டிருந்தன. சற்று தள்ளி இரண்டு சோபாவும் ஒரு டீபாயும். அதற்கருகில் ஒரு பூந்தொட்டி. அதற்குள் சில பிளாஸ்டிக் பூக்கள்.

எதிர்ச்சுவரில் ஒரு போர்டு. அதில் ஏராளமான புகைப்படங்கள் ஒட்டப்பட்டிருந்தன. நான் இலக்கில்லாமல் அவற்றையே வெறுமையாக பார்த்துக்கொண்டிருந்தேன். உயிரற்ற மீனைப் போன்ற கண்களைக் கொண்ட தாடிக்காரர்கள், அரபி அங்கி போர்த்தியிருந்த கருப்பர்கள், ஆட்டுத்தாடியும் கூர்மையான கண்களும் கொண்ட ஆப்பிரிக்க இனத்தவர்...

புகைப்படங்களின் கீழே அது என்ன? சிறிய எழுத்துக்களில்... பெயர்களாக இருக்கவேண்டும். ஒவ்வொரு புகைப்படத்தின் கீழிலும் அரபியில் ஒரு சின்னஞ்சிறு அடிக்குறிப்பு.

புகைப்படங்களை அப்படியே பார்த்துக்கொண்டு வரும் போது, நான்காவது வரிசையில் மூன்றாவதாக இருந்த நபரைப் பார்த்ததும் நான் அதிர்ச்சியில் உறைந்து போனேன், துருவப் பிரதேச பனிப்பாறை போல.

கண்களைக் கசக்கிக்கொண்டு மீண்டும் ஒரு முறை அந்த படத்தையே உற்றுப் பார்த்தேன். எனது சந்தேகம் வலுத்தது. திடீரென்று என் இதயம் வேகமாகத் துடிக்கத் தொடங்கியது. அதுவரையில்லாத ஏதோவொரு பீதி என்னிடம் பரவியது. தன்னிலை மறந்த நான் அந்த போர்டை நோக்கி நடந்தேன்.

இப்ராஹிம் காதரி!

என்னையுமறியாமல் நான் நெஞ்சைப் பிடித்தேன்.

'என்ன, உனக்கு இவனைத் தெரியுமா...?' வெகு அருகிலிருந்து வந்த அந்த போலீஸ் குரலைக் கேட்டு நான் திடுக்கிட்டேன்.

என்னுடைய முகக் குறிப்பு எவருமே எளிதில் புரிந்து கொள்ளும் படியாகத்தான் இருந்தது.

ஆனாலும் நான், 'எனக்குத் தெரியாது' என்று தலையை அங்குமிங்குமாக அசைத்தேன்.

அதைப் பார்த்த முதீர் என்னை பக்கத்தில் வருமாறு சைகை காட்டினான்.

தயங்கிக்கொண்டே நான் அருகில் போனதுதான் தாமதம், நாற்காலியைப் பின்னுக்கு ஓர் உதை உதைத்துவிட்டு வேகமாக எழுந்த முதீர் எனது செவிட்டில் ஓங்கி ஓர் அறை விட்டான்.

வலிமிகுந்த ஒரு வெப்பக்காற்று ஒரு காதிலிருந்து புறப்பட்டு மறு காது வழியாக வெளியேறிப் போனது மட்டுமே இப்போது என் நினைவிலிருக்கிறது.

'பின் நீ எதுக்கடா அந்த போட்டோவ பாக்கப்போன...?' முதீர் கோபத்தில் அலறினான்.

நான் பதில் எதுவும் சொல்லாமல் தலைகுனிந்தபடியே நின்றேன். அவன் மீண்டும் அரபியில் ஏதேதோ கேட்டான். எதற்குமே நான் பதில் சொல்லவில்லை.

கோபம் குறையாத முதீர் என் செவியில் மீண்டும் ஓர் அறை அறைந்துவிட்டு நாற்காலியில் போய் உட்கார்ந்தான்.

நான் அழவில்லை. ஆனால் ஹமீதோ ஒப்பாரியே வைத்துவிட்டான்.

அதனால்தானோ என்னவோ அவன் பக்கம் அடியொன்றும் விழவில்லை.

அப்போது அந்த போலீஸ்காரனிடம் முதீர் ஏதோ ஆணை பிறப்பித்தான். அதையடுத்து நாங்கள் பக்கத்து அறையிலிருந்து வேறொரு போலீஸ்காரனிடம் அழைத்துச் செல்லப்பட்டோம்.

அங்கிருந்தவன் சுவரிலிருந்த அலமாரியைத் திறந்து இரண்டு கைவிலங்குகளை வெளியே எடுத்து எங்கள் கைகளை பூட்டினான். பின் எங்களை அங்கே மூலையில் கிடந்த ஒரு பெஞ்சில் போய் உட்காரும்படி சொன்னான்.

அங்கே எங்களைப் போலவே கை விலங்குடன் வேறு சிலரும் உட்கார்ந்திருந்தார்கள்.

ஆனால் உண்மையைச் சொன்னால், எங்களுடைய முகத்தில் இருந்த ரகசிய சந்தோஷம் அவர்களிடமும் இருந்ததா என்று எனக்குத் தெரியவில்லை.

மதியத்திற்கு மேல் எங்கள் கையிலிருந்த விலங்கைக் கழற்றிவிட்டு, அங்கேயிருந்த ஒரு செல்லிற்குள் எங்களை அடைத்தார்கள். மூன்று பேர் சிரமத்துடன் இருக்கக்கூடிய அந்த செல்லில் நாங்கள் ஆறுபேர்.

அந்த கூட்டத்தில் குமார் என்ற ஒரு மலையாளியும் இருந்தான். எங்களது அனுபவங்களிலிருந்து வித்தியாசமானது அவனுடையது.

ஒரு காய்கறிக் கடையில் வேலைபார்த்த அவனை கடை முதலாளியான அரபியே திருட்டுக் குற்றம் சாட்டி போலீசில் ஒப்படைத்திருக்கிறான்.

ஏனைய இருவர் அரபிகள். மற்றொருவன் பாகிஸ்தானி. அவர்கள் மீது சுமத்தப்பட்ட குற்றம் என்னவென்று தெரியவில்லை.

கூட்டம் பிதுங்கி வழியும் இரவு நேர ரெயில்பெட்டிக்குள் இருப்பது போன்ற அந்த நெரிசலில், அன்று இரவு எங்களால் உறங்கவே முடியவில்லை. இரண்டு அரபிகளும் முதலிலேயே வசதியாக கால் நீட்டி உட்கார்ந்துவிட்டதால், எஞ்சிய எங்கள் நால்வர் பாடும் மகா சிரமமாக இருந்தது.

ஆனாலும் நான் அனுபவித்த வாழ்க்கையுடன் ஒப்பிடும்போது நெரிசல் மிகுந்த அந்த செல் கூட ஒரு சொர்க்கலோகம் போலத்தான் எனக்குத் தோன்றியது.

மறுநாள் காலையில் ஆளுக்கொரு டீயைத் தந்துவிட்டு, கைவிலங்குடன் எங்களை ஒரு வண்டியில் ஏற்றி வெளியே எங்கோ கொண்டு போனார்கள்.

வண்டியில் எங்களுடன் வேறு சில விலங்குதாரிகளும் இருந்தார்கள். அவர்கள் விரைவிலேயே தங்களுக்குள் பரஸ்பரம் அறிமுகம் செய்து கொண்டு, செய்த குற்றங்களைப் பற்றியும், சொந்த ஊரைப்பற்றியும் பேச ஆரம்பித்தார்கள். ஹமீதும் அவர்களுடன் சேர்ந்து கொண்டான். நான் மட்டும் எதுவுமே பேசாமல் தலை குனிந்தபடியே இருந்தேன்.

நெடுந்தூரம் ஓடிய வண்டி கடைசியில் அந்த நாட்டின் மிகப்பெரிய ஜெயிலான ஸுமேஸி சிறையின் உயர்ந்த மதில் சுவருக்குள் போய் நின்றது. நாட்டின் மூலை முடுக்குகளிலிருந்தெல்லாம் ஏராளமான வண்டிகள் அங்கே வந்து குவிந்தவண்ணம் இருந்தன. அவற்றிற்குள்ளே

யிருந்து நூற்றுக்கணக்கான 'குற்றவாளிகள்' சாரை சாரையாக இறங்கிக் கொண்டிருந்தார்கள்.

ஏனென்று தெரியவில்லை. சம்பந்தமே இல்லாமல் எனக்கு அப்போது ஊரிலுள்ள ஒரு கல்யாண மண்டபமும், அங்கே பயணக் களைப்புடன் வந்து சேரும் மணமகன் வீட்டுக்காரர்களுமே நினைவுக்கு வந்தார்கள். அவர்களில் ஒருவனாக நானும்.

எங்களை வண்டியில் இருந்து இறக்கி வார்டனின் அலுவலகத்துக்கு கொண்டு போனார்கள்.

அறை வாசலில் மிகப்பெரிய கூட்டம்.

போலீஸ்காரர்கள் சாரி சாரியாக வருவதும், போவதுமாக இருந்தார்கள்.

வக்கீல்கள், முத்தவல்லி ஆகியோருடன் முகம் தெரியாத பல்வேறு அரபிகளும் அங்குமிங்குமாக பரபரப்புடன் நடந்து கொண்டிருந் தார்கள்.

ஒருவிதத்தில் அது நம்முடைய ஒரு நீதிமன்ற வராந்தாவைப் போலிருந்தது. வார்டன் அலுவலகத்தின் முன்னால் மிகப்பெரிய க்யூ நீண்டு கிடந்தது. நாங்கள் ஓடிப்போய் அதன் வாலில் ஒட்டிக் கொண்டோம்.

உடன் வந்த போலீஸ்காரர்கள் நிழல் தேடி சற்றுத் தள்ளியிருந்த வராந்தாவில் போய் உட்கார்ந்து கொண்டார்கள்.

கைதிகள் ஒவ்வொருவராக உள்ளே அழைக்கப்பட்டுக் கொண்டி ருந்தார்கள்.

ஆனாலும் க்யூ மிக மெதுவாகவே நகர்ந்தது.

ஜெயிலுக்குள் அடைபடப் போகிறோம் என்ற உணர்வு இருந்த போதிலும், அங்கே படப்போகும் சிரமங்களைப் பற்றி சதா ஒரு மனக்கிலேசம் மனதுக்குள் நெருடிக் கொண்டிருந்த போதும், முதன் முதலாக ஓட்டுப்போட வாக்குச் சாவடிக்கு வெளியே காத்துக் கிடக்கும் போது ஏற்படும் ஒருவித ஆர்வம் கலந்த குறுகுறுப்பே அப்போது என்னிடம் நிறைந்திருந்தது.

அதைப்பற்றி நான் ஹமீதின் காதில் ரகசியமாக கிசுகிசுக்கவும் செய்தேன்.

க்யூ மெதுவாக நகர்ந்து... நகர்ந்து... ஒரு வழியாக என்னுடைய முறையும் வந்து சேர்ந்தது. இனி மூன்றே மூன்று நிமிடங்கள்தான். க்யூவின் முன்னால் நிற்கும் மெல்லிய பதட்டம் எனக்குள்.

கடைசியாக நான் உள்ளே அழைக்கப்பட்டேன். அப்போது எங்களுடன் வந்த போலீஸ்காரர்களில் ஒருத்தனும் என்னுடன் உள்ளே வந்தான்.

வார்டனின் முன்னால் ஒரு பெரிய ரெஜிஸ்தர் திறந்து கிடந்தது. போலீஸ்காரன் கொடுத்த பேப்பரைப் படித்துவிட்டு, மேற்கொண்டும்

விசாரித்த வார்டன், எங்களுக்குப் புரியாத அவனிடம் ஏதோ தகவல்களால் ரெஜிஸ்தரை நிரப்பினார். பின்பு அதில் காலியாக இருந்த இடது பக்க கட்டத்தில் என் கையெழுத்தையும் வாங்கினார். அதன்பின் அந்த அறையின் மற்றொரு மூலையில் கிடந்த மேஜைக்கு முன்னால் கால்நீட்டி சாய்ந்திருந்த ஒரு போலீஸ்காரனிடம் என்னை அனுப்பி வைத்தார்கள்.

அவன் எனது கையில் ஏதோ ஒரு வகை மையினால் சில அரபி எண்களை பச்சை குத்தினான். சிறுவயதில் மதரசா வகுப்பு களுக்குப் போயிருந்ததால் அது 13858 என்று நான் வேகமாகவே வாசித்தேன். அன்றைய மதரசா படிப்பிலிருந்து வாழ்க்கையில் எனக்கு கிடைத்த ஒரே பயன் அதுதான்.

அடுத்து நாங்கள் சென்றது வினோதமான ஒரு ஹாலுக்குள்.

ஹாலின் ஒரு முனையிலிருந்து மறுமுனை வரை பார்பர்களின் நீண்ட வரிசை. வாசலில் நின்ற போலீஸ்காரன், வரிசையில் ஆளில் லாமல் இருந்த ஒரு பார்பரிடம் என்னை அனுப்பி வைத்தான்.

பார்பர்கள் படுவேகத்துடன் வேலை செய்து கொண்டிருந்தார்கள். அவர்கள் கையிலிருந்த சவரக்கத்தி நம் தலையில் இறங்குவதை மட்டுமே நம்மால் உணரமுடியும். இரண்டே இரண்டு நிமிடங்கள் தான். அதற்குள் கத்தி தன் வேலையை சுத்தமாக செய்து முடித் திருக்கும்.

அந்த பார்பரின் கத்திக்கு நான் தலைகொடுத்தபோது, ஹமீது எனக்கு அடுத்து இருந்தவனிடம் வந்து உட்காருவதை நான் ஓரக் கண்ணால் கவனித்தேன்.

வேலை முடிந்து ஏறக்குறைய ஒரே நேரத்தில் எழுந்த நாங்களிரு வரும், ஒருவர் முகத்தை ஒருவர் ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டோம். இரண்டு முழு மொட்டைகள்!

வெட்கத்துடன் உதிர்ந்தது ஒரு சிரிப்பு, இருவரிடமிருந்தும்.! வேதனைகளின் நடுவே எழுந்த சிரிப்புக் கணங்கள்.

அதன்பின் ஜெயிலுக்குள்ளேயிருந்த பெரிய கட்டிடத்திற்குள் எங்களைக் கொண்டு போனார்கள்.

பெரிய கட்டிடம் என்றால் அது நமது கற்பனைக்கும் அப்பாற் பட்டது. சுமார் 3 கிலோ மீட்டர் தெலைவிற்கு நீண்டு கிடந்த மிகப் பெரிய கட்டிடம்.

அது தனித்தனி பிளாக்குகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. பிளாக்கு களும் மிகப்பெரியதாகத்தான் இருந்தன.

ஒவ்வொரு நாட்டுக்காரனுக்கும் ஒரு பிளாக். அரபிகள், பாகிஸ்தானி, சூடானி, எத்தியோப்பியன், வங்காளி, பிலிப்பைன்ஸ், மொராக்கோ காரர்கள், இலங்கைவாசிகள்.... என்ற வரிசையில் கடைசியாக இந்தியருக்கும் ஒரு பிளாக் ஒதுக்கப்பட்டிருந்தது. அதில் பெரும்பாலான வர்கள் மலையாளிகள்தான் என்று சொல்லத் தேவையில்லை.

வழக்கப்படியே எங்களை இந்திய பிளாக்குக்குக் கூட்டிக் கொண்டு போனார்கள்.

அந்த பிளாக் முழுவதுமே மொட்டை மற்றும் குறு மயிர்த்தலை களால் நிரம்பிக் கிடந்தது. போய்ச்சேரும் நாளுக்கு ஏற்ப குறு மயிர்கள் பல்வேறு உயரத்தில் வளர்ந்து விறைப்பாக நின்றன. கண் கொள்ளாக்காட்சி! மொட்டைத் தலையர்கள் நிறைந்த ஒரு சந்தை போலிருந்தது அது. அந்த அளவுக்கு பிளாக்கில் கூச்சலும் குழப்பமும். ஜெயில் என்று கேட்டவுடனேயே நம் மனக்கண்ணில் தோன்றும் கட்டுப்பாட்டையும், பீதி நிறைந்த அமைதியையும் அங்கு பார்க்கவே முடியவில்லை.

அந்த கூச்சலுக்கும் குழப்பத்திற்கும் இடையில், முதன் முதலாக நகரத்துக்குள் காலடி எடுத்து வைக்கும் இரண்டு கிராமத்தான்களைப் போல நானும் ஹமீதும் மிரட்சியுடன் நின்று கொண்டிருந்தோம்.

நாங்கள் வந்திருப்பது சிறைக்குள் என்னும் உண்மை புரிபட எனக்கு வெகுநேரம் பிடித்தது.

அப்போது காரணமே புரியாமல் திடீரென்று நான் உடைந்து அழுதேன், வெகுநேரமாக..... குலுங்கி... குலுங்கி....

பலநாள் சிந்தனைக்கும், ஆலோசனைகளுக்கும், கணக்கு கூட்டல் களுக்கும் முடிவில்தான் ஜெயிலுக்குள் அடைபடும் இந்த முடிவுக்கு நான் வந்தேன்.

இது மிக ஆபத்தான முடிவுதான். என்றாலும் இப்போது நான் இருக்கும் நிலைமையில் எனது வாழ்க்கையைத் தொடர இதைத்தவிர வேறு நல்ல வழியொன்றும் என் கண்ணுக்குத் தெரியவில்லை.

ஆம், உண்மைதான். வாழ்வதற்காக நான் தேர்ந்தெடுத்த இடம் ஜெயில்தான்!

ஒருவன் தானே முன்வந்து ஜெயிலுக்குள் அடைபட விரும்புகிறான் என்றால், அதற்குமுன் அவன் எந்த அளவுக்கு வேதனை என்னும் தீ நாளாங்களால் சுட்டெரிக்கப்பட்டிருக்க வேண்டும் என்பதை உங்களால் ஊகிக்க முடியுமா?

# 2

கொஞ்ச நேரத்திலேயே அந்த ஜெயில் எங்களுக்குப் பழகிப்போய் விட்டது.

மதியச் சாப்பாடு முடிந்துகொண்டிருந்த போது தான் நாங்கள் சிறைக்குப் போய் சேர்ந்தோம். அதனால் அந்த கடைசி நேரத்தின் பரபரப்பை அங்கே பார்க்க முடிந்தது. சாப்பிட்டு முடித்த எச்சில் பாத்திரங்களை எடுப்பதும், தரையைச் சுத்தம் செய்வதுமாக பரபரப்புடன் ஓடிக்கொண்டிருந்தார்கள் ஜெயில் ஊழியர்கள்.

பொதுவாக 'ளுகர்' (மதிய நேரத்) தொழுகை முடிந்த உடனேயே மதிய உணவு போட்டுவிடுவார்கள். நாங்கள் போய் சேர தாமதமாகி விட்டதால் எங்களுக்கு உணவு கிடைக்கவில்லை.

எனது கடந்த கால வாழ்க்கையோடு ஒப்பிட்டுப் பார்த்தால், தவறிப்போன இந்த ஒரு நேரச் சாப்பாட்டைப் பற்றி நான் கவலைப் படுவது வேடிக்கையானது.

ஜெயிலில் சந்தடி மெதுவாகக் குறையத் தொடங்கியது. உண்ட மயக்கத்தில் பலரும் கண்ணயரத் தொடங்கியிருந்தார்கள். அந்த பிளாக்கில் கட்டிலோ, பாயோ, தலையணையோ எதுவுமில்லை. வெறும் தரையில் நமக்கு விருப்பமான ஒரு மூலையைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்.

ஒரு சாதாரண மனிதனுக்கு வியர்க்கும் அளவுக்கு உஷ்ணம் இருந்தது. சுவரின் உச்சியில் சில ஏ.சி. மெஷின்கள் உறுமிக் கொண்டிருந்தன. அவை உண்மையிலேயே வேலை செய்து கொண்டிருந்தனவா என சந்தேகமாக இருந்தது.

எங்களுடைய பிளாக்கில் மட்டுமே குறைந்த பட்சம் இருநூற்றியம்பது பேர் வரை இருப்போம். கால்மாடு தலைமாடாகக் கிடந்து

உறங்கும் அவர்களைக் கண்டால் ஏதோவொரு இயற்கைப் பேரழிவில் உயிரிழந்தவர்களின் சடலங்கள் தாறுமாறாகக் கிடப்பது போலிருந்தது.

அவர்களுக்கிடையே ஒரு சிலர் மட்டும் உறங்காமல் அங்குமிங்குமாக சிறுசிறு கூட்டமாக உட்கார்ந்து கதை பேசிக்கொண்டிருந்தார்கள்.

புதிதாக வந்த எங்களைப் பார்த்ததும் மலையாளிகள் எனத் தோன்றிய கூட்டத்திலிருந்த ஒருத்தன், 'பயப்படாதீங்க, இங்க பெரும்பாலும் மலையாளிங்கதான். உங்களுக்கு தோதுபடும் கூட்டத்தோடு போய் சேர்ந்துக்கோங்க' என்று சொல்லிவிட்டு தனது பேச்சைத் தொடர்ந்தான்.

நாங்கள் இருவரும் ஒரு கூட்டத்திலும் சேராமல், எங்களுக்கென்று ஒரு மூலையைத் தேர்ந்தெடுத்து அங்கே போய் உட்கார்ந்தோம். முதல்நாள் ராத்திரி உறக்கமே இல்லாததாலும், நீண்ட தூரம் பயணித்து வந்ததாலும் மூலையில் உட்கார்ந்த உடனேயே நாங்கள் உறங்கிப்போனோம்.

சற்று நேரம் கூட கண்ணயர்ந்திருக்க மாட்டோம். திடீரென்று 'அஸர்' தொழுகைக்கான பாங்கு முழங்கத் தொடங்கியது. படுத்திருந்தவர்களெல்லாம் சோம்பலுடன் எழுந்தார்கள். அவர்களுடன் நாங்களும் சேர்ந்து கொண்டோம்.

அந்த பிளாக்கிற்குள்ளேயே ஒரு தனி மூலை தொழுகைக்காக ஒதுக்கப்பட்டிருந்தது. அங்கு முண்டியடித்த கூட்டத்திற்குள் நாங்களும் கருணைமயமான அல்லாஹ்வைத் தொழுவதற்காக கஃஅபாவை நோக்கி மண்டியிட்டோம்.

பிஸ்மில்லாஹ் ஹிர் ரஹ்மான் னிர் ரஹீம்...

அந்த பிரார்த்தனையில், கடந்து போன நாட்களில் நான் அனுபவித்த எல்லா துயரங்களும் ஒரு நதி போல் என்னைவிட்டு விலகிச் செல்வதாக நான் உணர்ந்தேன். அந்த நெருக்கடிகளிலிருந்தெல்லாம் என்னைக் காத்து அரவணைத்த கருணை நிறைந்த அல்லாஹ்வின் அன்பை நினைத்து நான் கதறி அழுதேன்.

வேதனை என்னும் மிக நீண்ட மணல் பரப்பிலிருந்து வெளியேறி வர, எனக்கு வலிமை தந்து உதவியதற்கான சந்தோஷக் கண்ணீர் அது!

எனது துயரங்களையும், சந்தோஷங்களையும் அல்லாஹ்விடம் சொல்லி, மண்டியிட்டு வணங்கி எழுந்தபோது எங்கேயோ ஒரு மணி அலறியது.

படுத்துக்கிடந்தவர்கள் பரபரப்புடன் பிளாக்கின் மற்றொரு மூலையில் நீண்டு நின்ற க்யூவில் இடம் பிடிக்க ஓடினார்கள். என்னவென்றே தெரியாமல் நாங்களும் ஓடிப்போய் க்யூவில் நின்றோம்.

க்யூ மெதுவாக நகர்ந்தபோது ஒரு பெரிய தேநீர்ப் பாத்திரம் என் கண்ணில் பட்டது. சற்று ஓரமாகக் கிடந்த மேஜையின் மேல் ஏராளமான கோப்பைகள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன.

அவற்றிலிருந்து ஒரு கோப்பையெடுத்து அதில் தேவையான அளவுக்கு

தேநீரை நிரப்பிக்கொண்டு, பக்கத்திலிருந்த வேறொரு மேஜையின் மீது வைக்கப்பட்டிருந்த பிஸ்கட்டுகளிலிருந்து ஒன்றோ இரண்டோ வாங்கிக்கொண்டு ஏதாவதொரு மூலையில் போயிருந்து அனுபவித்து குடிக்கலாம்.

குடித்து முடித்தபின் கோப்பையை நன்றாக தேய்த்துக் கழுவி மறுபடியும் அதே மேஜை மீது கொண்டு போய் வைக்க வேண்டும்.

ஒரு ஜெயிலின் சாயலை அங்கு எங்குமே பார்க்க முடியவில்லை.

ஏதோவொரு அகதி முகாமுக்குள் இருப்பது போலத்தான் இருந்தது.

பிளாக்கிற்குள் அங்குமிங்குமாக சுதந்திரமாக நடக்கலாம். கட்டுப் பாடுகள் எதுவுமில்லாமல் பேசிக்கொண்டேயிருக்கலாம்.

அதுதான் கடந்த மூணு நாலு மாத கால என்னுடைய மிகப்பெரிய தாகம். யாருடனாவது கொஞ்சம் பேச வேண்டும். அதனால்தானோ என்னவோ நான் ஹமீதுடன் வாய் ஓயாமல் பேசிக் கொண்டேயிருந்தேன்.

பதில் சொல்ல ஹமீதுக்கு இடம் கொடுக்கவேயில்லை. வெறி பிடித்தவன் போல் நான் பேசிக்கொண்டேயிருந்தேன். என்னுடைய நாக்கு ஒரு கணம் கூட ஓய்ந்திருக்கவில்லை.

கடந்த சில நாட்களுக்குள் என்னை நன்றாகப் புரிந்து கொண்ட ஹமீது நான் பேசியதையெல்லாம் பொறுமையாக கேட்டுக்கொண்டிருந்தான். ஒரு வேளை இந்த இடைப்பட்ட நாட்களில் எப்போதோ நான் அந்தக் கதைகளை ஹமீதிடம் பலதடவை சொல்லியிருக்கலாம். ஆனாலும் என்னுடைய தாகம் இன்னும் அடங்கவில்லை.

இருட்டிய பின் பக்கத்திலிருந்த இந்தியன் பிளாக்கிலிருந்து என்னைப் பார்க்க ஒருவன் வந்தான். அவன் பெயர் இப்போது என் நினைவில் இல்லை.

என்னை பார்த்ததும் அவன் ஓடி வந்து என் கைகளிரண்டையும் சேர்த்து பிடித்துக்கொண்டு 'அல்லாஹ் எவ்வளவு கருணையுள்ளவன்' என்று தனக்குத்தானே சொல்லிக்கொண்டான்.

அதன் பின் 'குஞ்சிக்காயின்' கடைக்கு வந்த ஆள்தானே என்று விசாரித்தான்.

நான் 'ஆமாம்' என்று தலையசைத்தேன்.

'எனக்குத்தெரியும். உங்களைப் பாப்பததற்காக நான் ஒரு நாள் உங்க ரூமுக்கு வந்திருந்தேன். அப்போ நீங்க நல்ல உறக்கத்திலிருந்தீங்க. அதனால் நான் உங்களை தொந்தரவு செய்யல.'

சொல்லிவிட்டு அவன் மீண்டும் என் கைகளைப் பிடித்துக்கொண்டான். 'அல்லாஹ் கருணையுள்ளவன்' என்று மீண்டும் ஒரு தடவை சொன்னான்.

'நான் இங்க வந்து ரெண்டு நாள் தான் ஆகுது. ஸ்பான்ஸரோடு ஒரு சின்ன சண்டை. அவன் என்னப் பிடிச்சு உள்ளே போட்டுட்டான்.

பரவாயில்லை, குஞ்சிக்கா வந்து இறக்கிக் கொண்டு போவார்'.

அவன் நிறுத்தாமல் பேசிக்கொண்டேயிருந்தான்.

இடையிடையே அவன் என் கைகளைப் பிடித்துக்கொண்டு அல்லாஹுவுக்கு நூறு நமஸ்காரங்கள் சொல்லவும் தவறவில்லை. அப்போது என்னையுமறியாமல் என் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தது.

ஏனென்று தெரியவில்லை, அவனும் என்னுடன் சேர்ந்து அழுதான்.

அதன்பின் அவன் அல்லாஹுவை வணங்கிக்கொண்டு தன்னுடைய பிளாக்கிற்குத் திரும்பி போனான்.

அதற்குப்பின் அவனுடைய பிளாக்கிலிருந்து வேறு சிலரும் என்னைப் பார்ப்பதற்காக வந்தார்கள். ஆனால் அவர்களில் எவருமே என்னிடம் ஒரு வார்த்தை கூட பேசவில்லை.

அவனிடமிருந்து என்னுடைய முழுக் கதையையும் அவர்கள் கேட்டுத்தெரிந்திருக்கவேண்டும். என்னை ஒரு தடவை நேரில் பார்க்கும் ஆசையில்தான் அவர்கள் வந்திருந்தார்கள் என்று எனக்குப் புரிந்தது.

என்னை ஆச்சரியத்தோடு பார்த்துக்கொண்டிருந்த அந்தக் கூட்டத்திலிருந்து சிலர் அவனைப்போலவே என்னுடைய கைகளை சேர்த்துப் பிடித்து தங்களது ஆறுதலை வெளிப்படுத்தினார்கள்.

அப்படி வந்து போனவர்களிடமிருந்து என்னுடைய பிளாக்கிலும் எனது கதை மெதுவாகப் பரவத் தொடங்கியது.

சற்று நேரத்தில் தங்களுடைய பேச்சை முடித்துக்கொண்டு பெரும்பாலான மலையாளிகள் என்னைச் சுற்றி வந்து உட்கார்ந்தார்கள். சிலர் ஒரு அதிசயப் பிறவியைப் பார்ப்பது போல் என்னை ஆச்சரியத்துடன் பார்த்தார்கள். வேறு சிலர் மரியாதையுடனும், மற்றும் சிலர் ஆறுதலுடனும் என்னை பார்த்துச் சிரித்தார்கள். இன்னும் சிலரோ சந்தேகத்துடன் சற்று விலகியே நின்றார்கள்.

எப்படியிருந்தாலும் ஜெயிலுக்கு வந்த சில மணி நேரங்களுக்குள்ளேயே நான் ஜெயிலில் இருந்த மலையாளிக் கைதிகளுக்கிடையே ஒரு பேச்சுப் பொருளாகிவிட்டேன் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடிந்தது.

அதற்கடுத்த நாட்களில் என்னைப் பார்க்க வந்த பலரும், என்னை நீண்ட நேரம் பேசவைக்க முயற்சி செய்தார்கள். நான் அவர்களில் எவரையும் புண்படுத்தவில்லை.

எனது அபார பேச்சுத்திறனை நான் அவர்கள் மீது வீசியெறிந்தேன். ஓராயிரம் முறை நான் எனது கதையின் ஒவ்வொரு நிமிடத்தின் மீதும் இதயப்பூர்வமாக நடந்துபோனேன். அப்போதெல்லாம் என்னுடைய மனதும், கால் பாதங்களும் சூடான மணல் துகள்கள் மீது நடப்பதைப்போல வெந்து பொசுங்கின.

அன்றிரவு மக்ரிபு முடிந்து இரவு உணவு உண்ணும் போது அந்த பிளாக்கிலிருந்த அத்தனை மலையாளிகளும் என்னைச் சுற்றி கூடியிருந்தார்கள். அவர்களது அன்பிற்கு ஈடாகத் திருப்பிக் கொடுக்க சூடான கண்ணீரைத் தவிர என்னிடம் வேறெதுவும் இல்லை.

# 3

ஜெயிலில் எல்லா சாப்பாடுமே தொழுகை நேரங்களோடு தொடர்புள்ளவை.

அதிகாலையில் ஸுப்ஹ் தொழுகை முடிந்தவுடன் எல்லோருக்கும் ஒரு கப் பால்!

அதற்கடுத்து ஒன்பது மணிக்கு காலைச் சாப்பாடு வரும் வரை விருப்பம் போல் குடிக்க இதமான சூட்டில் தேநீர்.

குபூஸும் பருப்புக் கறியும் தான் காலையுணவு.

பன்னிரெண்டு மணிக்கு மதிய உணவு ரெடியாகி விடும். ளுஹர் முடிந்த உடனேயே மதியச்சாப்பாடு. கப்ஸ், மஜ்பூஸ் என்றெல்லாம் சொல்லப்படும் ஒருவித அரபி பிரியாணி தான் எல்லா நாட்களும்.

ஒரு பெரிய பாத்திரத்தில் பத்து பதினஞ்சு பேர் சேர்ந்திருந்து சாப்பிடும் அளவுக்கு சாப்பாடு தருவார்கள். அரபி வழக்கப்படி எல்லோரும் வட்டமாக சுற்றியிருந்து ஒரே பாத்திரத்திலிருந்து தான் எடுத்து சாப்பிட வேண்டும்.

கோழி, ஆடு, ஒட்டகம் என்று ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு மாமிசம் பரிமாறப்படும். அதில் ஆட்டிறைச்சி வரும் நாட்களில் மட்டும் நான் எதுவுமே சாப்பிடமாட்டேன்.

'நடந்தது நடந்தாச்சு, அதையெல்லாம் மறந்துட்டு எதையாவது சாப்பிடப் பார். நம்ம உடம்ப வளர்க்க ஜெயிலைப் போல வேற நல்ல இடம் எதுவும் இல்லை. வந்தது போலவாவது நாம திரும்பிப் போகாண்டமா? ஊருக்குப் போகும் போது நம்முடைய கோலத்தைப் பார்த்து பொஞ்சாதி நெஞ்சில் அடித்து ஒப்பாரி வைக்க இடம் கொடுக்கவேண்டாம். நாம அனுபவிச்சது நமக்குள்ளேயே இருந்துட்டு போகட்டும்' என்று ஹமீது எப்போதும் என்னை நச்சரித்துக்

கொண்டேயிருப்பான்.

ஆனாலும் யார் என்ன சமாதானம் சொன்னாலும் என்னால் அதை மட்டும் ஜீரணிக்கவே முடியவில்லை. ஆட்டிறைச்சி என்று சொல்லும்போதே என்னுடைய கண்களில் குபுக்கென்று கண்ணீர் ஊறிவிடும்...

தொடக்கத்தில் நல்ல பசியோடு போய் சாப்பாட்டில் கை வைக்கும் போது தான் தெரியும் அன்றைக்கு ஆட்டிறைச்சி என்று. எதுவுமே பேசாமல் நான் கையை உதறிவிட்டு மௌனமாக எழுந்து போய் விடுவேன்.

நாட்கள் போகப்போக அன்று என்ன பிரியாணி என்று முன்பே கேட்டு வைத்துக்கொள்வேன். ஆடு என்ற தெரிந்தால் அன்று நான் சாப்பாட்டுப் பக்கமே போக மாட்டேன்.

அன்றைக்கு அசருக்குப் பிறகு வரும் டீயிலும் பிஸ்கட்டிலுமே என்னுடைய உணவு முடிந்துவிடும். இரவிலும் அதுதான் நிலைமை.

மக்ரிபுக்கும் இஷா தொழுகைக்குமிடையில்தான் இரவு சாப்பாடு. அப்போதும் குபூஸும் இறைச்சிக்கறியும்தான். அதிலும் ஆட்டிறைச்சி தான் என்றால் நான் சாப்பாட்டிலேயே கை வைக்க மாட்டேன்.

தாங்கமுடியாத பசி இருந்தால் மட்டும் ஒரு குபூஸை தண்ணீரில் நனைத்து விழுங்குவேன். தொட்டுக் கொள்ள கறி எதுவும் இல்லை யென்று நான் வருத்தப்பட்டதேயில்லை.

எத்தனையோ காலமாக எனக்குப் பழகிப்போன விஷயமல்லவா அது!

ஜெயிலுக்கென்று நாம் கேள்விப்பட்ட அடையாளங்கள் எதுவுமே ஸுமேஸி ஜெயிலில் இல்லை. அந்த அளவுக்கு பிளாக்கில் எங்களு டைய வாழ்க்கை சுதந்திரமாக இருந்தது.

விசா இல்லாதவர், விசாவைப் புதுப்பிக்காதவர், அடையாள அட்டை இல்லாதவர், தொழுகையில் கலந்து கொள்ளாமல் பொது இடத்திலிருந்து பிடிபட்ட முஸ்லீம்கள், ரமலான் வேளையில் சமையல் செய்தவர், பொது இடத்தில் புகை பிடித்தவர், சூழ்ச்சிக்காரர்கள், வஞ்சனை புரிந்தவர்கள், அரபிகளுடன் சின்னச்சின்னச் சச்சரவுகளில் ஈடுபட்டவர்கள் என்று சட்டத்தை மீறிய பலரும் எங்களுடைய பிளாக்கில் அடைக்கப்பட்டிருந்தார்கள்.

அதி பயங்கர கிரிமினல் குற்றம் செய்தவர்கள் மட்டும் வேறு பிளாக்கிலோ அல்லது வேறு ஜெயிலிலோதான் அடைக்கப்பட்டிருக்க வேண்டும்.

அதனால்தான் இங்கே எங்களுக்கு இந்த அளவுக்கு சுதந்திரம். இந்த அளவுக்கு மனநிறைவான வாழ்க்கையை நான் இதற்கு முன்னால் அனுபவித்ததேயில்லை.

வேளாவேளைக்கு சாப்பாடு, தொழுகை... தேவைக்கும், ஏன்

அதற்கு மேலும் உறக்கம்... இலக்கில்லாத சிந்தனை... சலிக்கும் வரை பேச்சு... வாழ்க்கையைப் பற்றிய புதுப்புது கற்பனைகள்... என்று எங்கள் தினசரி ஜெயில் வாழ்க்கை சுகமாகவே போய்க்கொண்டிருந்தது.

உலகத்துக்கு எங்களைத் தெரியாது. அதைப்போல் எங்களுக்கும் உலகத்தைத் தெரியாது. உண்மையிலேயே அதுதானே ஜெயில்.... இல்லையா?

ஜெயிலில் குளிப்பதற்கு மட்டும் வசதியே இல்லை. அது ஒன்றுதான் ஹமீதின் ஒரே புகார். துவக்கத்தில் எப்படியே சில நாட்கள் கழிந்து போனது.

ஒரு வாரம் முடிந்த போது உடம்பில் ஏற்பட்ட வியர்வை பிசுபிசுப்பையும், துர்நாற்றத்தைப் பற்றியும் ஹமீது அதிகமாகப் புலம்பத் தொடங்கினான்.

அதைக்கேட்டு மனதுக்குள் சிரிக்கும் நான், பின்பு என் விரல்களை மடக்கி கணக்கு போட்டு பார்ப்பேன். மூணு வருடம், நாலு மாசம், ஒன்பது நாட்கள்! அதை நினைக்கும்போது நான் வாய் விட்டு சிரிப்பேன்.

ஒரு வேளை ஹமீதுக்குகூட எனது அந்த சிரிப்பின் அர்த்தம் புரிந்திருக்காது.

சிறைக்குள் இருந்த ஒவ்வொருவருக்குமே என்னைப் போலவே இருந்தன பல்வேறு கதைகள், சொல்வதற்கு. வேதனை, சங்கடம், துயரம், கண்ணீர், அப்பாவித்தனம்... இவற்றுடன் இயலாமையும் நிரம்பி வழியும் கதைகள்.

ஒரு வேளை இவற்றின் சாயல் கொண்ட கதைகளைப் பற்றி நீங்கள் வேறெங்கேயோ கேட்டிருக்கலாம். என் நண்பர்களின் துயரத்தைக் குறைத்து மதிப்பிட நான் விரும்பவில்லை. ஒவ்வொருவருக்குமே அவரவர் கடந்துவந்த பாதை மிகக் கடினமானதுதான். வாழ்க்கையில் அவர்கள் இழந்தவற்றை வேறெவராலுமே ஈடு செய்ய முடியாது.

வேறு சிலருடைய துயரக் கதைகளைக்கேட்ட போது என்னுடைய கஷ்டங்கள் மிக அற்பமானவையாக எனக்குத் தோன்றியது. அவற்றில் சிலரின் கதைகளோ, எனக்கு என்னுடைய சொந்த துயரத்திலிருந்து வெளியேற பெரிதும் உதவியாக இருந்தன என்பதே உண்மை.

இப்படியொரு கதையை உங்களிடம் எடுத்துச் சொல்லும் அளவுக்கு வாழ்க்கை மீது எனக்குப் பிடிப்பு ஏற்பட என்னைத் தூண்டியவை ஜெயிலில் நான் கேட்ட அந்தக் கதைகள் தான் என்று நான் மனப்பூர்வமாக நம்புகிறேன். இல்லையென்றால் எனது துயரத்தின் சுமை தாங்காமல் ஒரு வேளை நான் தற்கொலை கூட செய்திருப்பேன். எப்படிப்பட்ட துயரத்திலிருந்தும் கரையேறுவதற்கான ஒரே வழி நம்மை விடவும் அதிக துயரம் அனுபவித்தவர்களின் கதையைக் கேட்பதுதான்.

வாரத்திற்கொருமுறை ஜெயிலில் ஒரு அடையாள அணிவகுப்பு நடக்கும். தங்களிடமிருந்து ஓடிப்போன தொழிலாளிகளைத் தேடிப் பிடிப்பதற்காக அரபிகளுக்கு வழங்கப்படும் ஒரு சிறப்பு தினம். எங்களுக்கோ வாரம்தோறும் நடக்கும் கண்ணீர் தினம்.

அன்று காலை உணவு முடிந்த உடனேயே எல்லோரையும் பிளாக்கிலிருந்து வெளியேற்றி வரிசையாக நிற்க வைப்பார்கள். குற்றவாளியை அடையாளம் காட்ட வரும் சாட்சிக்காரனைப் போல அரபிகள் எங்களை மேலும் கீழுமாகப் பார்த்துக் கொண்டே அங்குமிங்குமாக நடப்பார்கள்.

ஒவ்வொரு வாரமும் எப்படியாவது ஒரு துர்பாக்கியசாலி அகப் பட்டுவிடுவான். ஆளைக் கண்டுபிடித்ததும் கன்னத்தில் ஓங்கி ஒரு அறை.

அதுவே அரபி ஆத்திரத்தின் முதல் சுவடு. வேறு சிலரோ இடுப்பில் கட்டியிருக்கும் பெல்ட்டை அவிழ்த்து கோபம் தீரும் வரை 'வாங்கு வாங்கு' என்று வாங்கி விடுவார்கள்.

சற்று தள்ளி நிற்கும் போலீஸ்காரர்கள் இதைக் கண்டும் காணாதது போல் நிற்பார்கள்.

நிலைமை இப்படியிருப்பதால் தொலைவில் ஸ்பான்ஸர் வரும் போதே சிலர் ஒப்பாரி வைக்க ஆரம்பித்துவிடுவார்கள்.

எதுவும் செய்ய முடியாத போது, பரிதாப ஜீவன்கள் எந்த அளவுக்கு மனமொடிந்து போவார்கள் என்பதை நான் புரிந்து கொண்ட நேரம் அது.

இத்தனை நாட்களாக பட்டபாட்டிலிருந்து ஒரு வழியாக விடுதலை பெற்று விட்டோம் என்னும் திருப்தியுடன் ஜெயிலில் வாழ்க்கையைத் தள்ளிக்கொண்டிருப்பவனை, மீண்டும் அதே அரபியின் – அவனைக் குரூரமாக வதைத்த அதே அரபியின் – கைகளில் பிடித்துக் கொடுப் பதைப்போன்ற கொடுமை இவ்வுலகில் வேறெதுவும் இல்லை.

அந்த அளவுக்கு பல கொடுமையான கட்டங்களைத் தாண்டி வந்தவர்கள் அவர்கள்.

ஆனால் அடிமையைத் தேடிவரும் அரபியிடம் எந்தவிதமான கருணையையும் எதிர்பார்க்க முடியாது.

இவன் என்னுடைய பணத்தைத் திருடிவிட்டு ஓடிப்போனவன். எனது மகளை பலாத்காரம் செய்ய முயன்றவன், என்னைக் கொலை செய்ய முயற்சித்தவன்... என்று மனதில் தோன்றிய ஏதோவொரு காரணத்தைச் சொல்லி அவனை தரதரவென்று இழுத்துச் செல்வான் அரபி.

அப்போது பலி பீடத்திற்கு இழுத்துச்செல்லப்படும் ஆட்டைப் போல் அவனது முகம் அச்சத்தால் விறைத்துப்போயிருக்கும். அவனது கதறல் ஜெயில் சுவர்களையும் தாண்டி அலையடிக்கும். தான்

நிரபராதி என்று அவன் வாய்விட்டு புலம்பினாலும் அதை கவனிக்க அங்கு யார் இருக்கிறார்கள்? அரபி தனது நீதியை தனது விருப்பம் போல் செயல்படுத்துவான்.

ஓர் அன்னிய நாட்டு ஜெயிலில் நாங்கள் எந்த அளவுக்கு சுதந்திரத்தை அனுபவித்தோமோ, அதைவிடவும் அதிகமான சுதந்திரத்தை தன் சொந்த நாட்டு ஜெயிலில் ஓர் அரபி அனுபவிக்கிறான் என்ற அளவில் நீங்கள் இதை புரிந்து கொண்டால் போதும்.

போலீஸ் ஸ்டேஷனில் புகார் கொடுத்த ஒரு துண்டுக் காகிதம் கையிலிருந்தால் போதும், எந்த அரபிக்கும் அன்றைய தினம் ஸுமேஸி ஜெயிலுக்குள் விருப்பம் போல் உலாத்தலாம்.

ஓடிப்போன தனது 'அடிமையை' கண்டுபிடித்தால் அவனை ஜெயில் வார்டனின் முன்னால் நெட்டித் தள்ளலாம். அவனைப் பற்றிய 'உண்மையான புகாரை' விளக்கிச் சொல்லலாம்.

அதன்பின் வழக்கின் போக்கே திசை மாறிப்போகும். சாதாரண குற்றத்திற்காக ஜெயிலுக்குள் வந்தவன் இப்போது கிரிமினல் குற்றவாளியாகி விடுவான்.

அதன்பின் சட்டம், நீதி, ஷரியத், கோர்ட், தண்டனை...

சில அரபிகள் அவனை நாடு கடத்துமாறு கேட்கலாம். அப்படி நடந்தால் அவன் பிழைத்தான்.

அதற்கு பதிலாக அரபி அவனைத் தன்னுடன் இழுத்துக் கொண்டு போனால்...? பின்பு அவன் கதி அதோகதி தான்.

ஓடிப்போன கோபத்திலிருக்கும் அரபி இனிமேல் அவனிடம் எத்தனை குரூரமாக இருப்பான் என்பதை என் சொந்த வாழ்க்கை அனுபவத்தோடு நினைத்துப் பார்த்த போது என் உடல் நடுங்கியது.

இந்த துயரத்தையும் தாண்டிவர அந்த துர்பாக்கியசாலிக்கு வலிமையைக் கொடு என்று அல்லாஹுவை பிரார்த்திப்பதைத் தவிர என்னால் வேறு என்ன செய்ய முடியும்!

அதன்பின், அன்றை தினம் முழுவதும் ஜெயில் ஒருவித அமைதியில் மூழ்கிப்போகும். சற்று நேரத்துக்கு முன்பு வரையில் எங்களுடன் ஒரே பிளாக்கில் கை கோர்த்து பேசித் திரிந்த, சொந்த ஊரைப் பற்றி கனவுகள் கண்டு, விளையாடிச் சிரித்து, ஒன்றாகக் கூடியிருந்து, சாப்பாட்டை பகிர்ந்து கொண்ட ஒருவனின் பிரிவுத்துயரத்தால் மனம் கனத்துப்போகும்.

மெயின் ஹாலையும் தாண்டி வழியும் அவனது அலறல் சத்தத்தால் காதுகள் அடைத்துக்கொள்ளும். அதன்பின் சாப்பாடு இறங்காது. எதுவும் பேசத்தோன்றாது. உறங்கப்பிடிக்காது.

வேதனை நிரம்பிய அந்த அவஸ்தையிலிருந்து மெதுவாக விடுபட்டு வரும்போது, மீண்டும் வந்துவிடும் அடுத்தவாரம்.

அன்றும் ஏதாவதொரு நிரபராதிக்கு 'லாட்டரி விழும்.'

ஜெயில் என்பது அப்படியொன்றும் சுகமானதில்லையோ...?

மதியச் சாப்பாடு வரை நீண்டு போகும் அந்த இரண்டு மணி நேரத்திற்குள் நூற்றுக்கணக்கான அரபிகள் எங்கள் அணிவகுப்பைப் பார்வையிடுவார்கள். ஆரம்பத்தில் எனக்கும், ஹமீதுக்கும் மனமெல்லாம் பதறும்.

சாட்டையடி சுளீரென்று வந்திறங்கும் கணத்தை நினைத்தபடியே அந்த இரண்டு மணி நேரத்தையும் நாங்கள் நடுக்கத்துடன் கழிப்போம்.

எங்களுடைய அரபியின் சாயலில் எவராவது தென்பட்டுவிட்டால் போதும், வயிற்றுக்குள்ளிருந்து ஒரு தீப்பந்து உருண்டு வந்து நெஞ்சைப் பொசுக்கும். அவன் எங்களுக்கு அறிமுகமில்லாதவன் என்று தெரிந்த பின்னால்தான் அந்த எரிச்சல் தணியும்.

பல துர்பாக்கியசாலிகளின் கண்ணீரைத் தாண்டித்தான் நாங்கள் வந்திருக்கிறோம். என்றாலும், எங்களை முள்முனையில் நிறுத்தும் அந்த இரண்டு மணிநேரம் முடியும் போது என்னவென்றே புரியாத ஒருவித அமைதியில் மனம் அமிழ்வதை என்னால் உணரமுடிந்தது.

அந்த சுயநலத்துக்காக நான் வெட்கப்படுகிறேன். என்னைத் தேடி எவரும் வரவில்லையே என்னும் நிம்மதி என் அடிமனதில் எப்போதும் அலையாடும்.

முதல் சில வாரங்கள் முடிந்தபோது என்னுடைய பதட்டம் மெதுவாகத் தணியத் தொடங்கியிருந்தது. அதற்குக் காரணம் பீதியுடன் போராடிப் போராடி முடிவில் அது மரத்து போனதாக இருக்கலாம். அல்லது அரபி என்னைத்தேடி வருவதற்கான காலம் கடந்து போய் விட்டது என்னும் நம்பிக்கை வலுவடைந்ததாக இருக்கலாம்.

ஸ்பான்ஸரிடமிருந்து தப்பிக்கும் எவருமே ஒரு பதினைந்து நாட்களுக்குள், அதிகம் போனால் ஒரு மாதத்திற்குள், போலீஸ் பிடிக்குள் அகப்பட்டு விடுவார்கள்.

இல்லையென்றால் அதற்குள் ஒரு தற்காலிக பாதுகாப்பிடத்தை யாவது அவன் கண்டு பிடித்திருப்பான். அப்படி ஏதும் நடந்து விட்டால், பின்பு அவனைக் கண்டுபிடிப்பதென்பது அரபிக்கு குதிரைக் கொம்பு தான்.

அப்படியாக எந்தவித தடயமும் இல்லாமல் நாட்களைக் கடத்துவோர் கல்ஃபில் நிறைபேர் இருக்கிறார்கள்.

இதெல்லாம் தெரிந்ததால்தானோ என்னவோ, ஒன்றோ இரண்டே மாதத்திற்குள் அரபிகள் தமது தேடலை முடித்துக் கொண்டு விடுவார்கள். அதன்பின் போலீஸில் ஒரு கேஸ். எப்போதாவது ஆள் அகப்பட்டால் அரபியின் அதிர்ஷ்டம். அவ்வளவுதான்.

அந்தக்கால அளவு முடிந்த போனதையடுத்து எங்களுக்குள் ஒரு தைரியம். இனி எங்களைத்தேடி எவருமே வரப்போவதில்லை. அதனால்தானோ என்னவோ அதன் பிறகு அந்த அணிவகுப்பில் போய்

நிற்பதென்பது எங்களுக்கு ஒரு வேடிக்கையான விஷயமாக மாறிப் போய்விட்டது.

அந்த இரண்டு மணி நேரமும் கிண்டலும் கேலியுமாகவே நகர்ந்தது. ஜெயிலுக்குள் வந்து நான்கைந்து மாதங்களைத் தாண்டியவர்களெல்லோருமே இப்படித்தான் இருந்தார்கள்.

பதட்டத்துடன் ஒருவிதமான சமரசத் தீர்வு. அதைத்தான் வாழ்க்கையின் பல கட்டத்திலும் நாம் சந்தித்து வருகிறோம், வாழ்க்கை எத்தனை கடினமாக இருந்தபோதிலும்!

பயணிகள் வந்து போகும் ஒரு ரெயில்வே ஸ்டேஷன் போலிருந்தது. எங்களுடைய பிளாக். இங்கே நிலையாகத் தங்குபவர்கள் என்று எவருமேயில்லை. பழைய முகங்கள் வெளியேறிக் கொண்டிருக்கும் போதே, புதிய முகங்கள் உள்ளே வந்து கொண்டிருக்கும்.

பொதுவாக சிறைக்கு பெருங்கூட்டமாகவொன்றும் ஆட்கள் வருவதில்லை. நாட்டின் நாலா பக்கங்களிலிருந்தும், பல்வேறு போலீஸ் ஸ்டேஷன்களிலிருந்தும் ஒவ்வொருத்தராகத்தான் உள்ளே வருவார்கள்.

பல நாட்களாக, பல நேரங்களிலாக மெல்ல நிரம்பும் அந்த வருகையை நம்மால் உணரக்கூட முடியாது. ஆனால் வெளியேற்றமோ ஸ்டேஷனில் ரெயில் வந்து நிற்கும்போது ஒரேயடியாக ஒட்டுமொத்த பிளாட்ஃபார்மே காலியாவதைப்போல், சில நேரங்களில் ஒட்டுமொத்தமாக பலர் வெளியேறிப் போவார்கள்.

அரபிகள் பரிசோதனைக்கு வந்து போகும் தினத்துக்கு அடுத்த நாள் எம்பஸிகளின் தினம். ஒவ்வொரு நாட்டு எம்பஸி பணியாளர்களும், தத்தமது நாட்டு ஜெயில் புள்ளிகளை விடுவிப்பதற்கான விடுதலை ஆவணங்களுடன் ஜெயிலுக்கு வருவார்கள்.

முந்தைய நாள் கண்ணீரின் தினமென்றால், அடுத்தநாள் சந்தோஷத்தின் தினம்.

அ றும் வழக்கம்போல் எங்கள் எல்லோரையும் வரிசையாக அணிவகுத்து நிற்கச் செய்வார்கள். எம்பஸி ஊழியர்கள் வரிசைக்கு முன்னால் வந்து 'எக்ஸிட் பாஸ்' தயாரானவர்களின் பெயர்களை ஒவ்வொன்றாக வாசிப்பார்கள்.

பெயர் வாசிக்கப்பட்டவர்கள் வரிசையிலிருந்து வெளியே வந்து முன்பக்கமாக வந்து நிற்பார்கள், கண்களில் ஆர்வம் மின்ன.

அது, உலக அழகிப்பட்டத்திற்கான போட்டி முடிவுகள் அறிவிக்கப் படுவதற்காக காத்து நிற்கும் அழகியின் ஆர்வத்துடிப்பைப் போன்றது என்று, பிற்பாடு நான் பலதடவை அதைப்பற்றி வேடிக்கையாக நினைத்துப்பார்த்திருக்கிறேன்.

தனது பெயர் அறிவிக்கப்படும் கணத்தில் உலக அழகியின் முகத்தில் ஒரு சந்தோஷக் கீற்று சட்டென தெறித்துவிழுமே. அது போலொரு மகிழ்ச்சித் தெறிப்பு– பெயர் வாசிக்கப்படும் ஒவ்வொருவரின் உள்ளத்

திலும் மலர்ந்து தெறித்திருக்கவேண்டும்.

ஆனால் எவருமே அதை வெளிப்படையாகக் காட்டிக்கொள்வ தில்லை.

எத்தனையோ கால வேதனைகளிலிருந்து விடுதலை அளிக்கும் இறுதி அழைப்பு அது.

'இப்போ எம் பேரைக் கூப்பிடுவார்கள்... அடுத்து எம் பேருதான்' என்று ஆர்வத்துடனும், எதிர்பார்ப்புடனும் காத்து நின்ற தினங்கள்.

அழைக்கப்பட்ட பெயர்களில் தனது பெயர் இல்லையென்று தெரியும் போது எஞ்சியவர்களின் முகத்தில் ஒருவித நிராசை வந்து கவியும். பல மாதங்களாகக் காத்துக் கிடப்பவர்களில் சிலர் வாய்விட்டு கதறிவிடுவார்கள்.

பெயர் அழைப்பு முடிந்து எம்பஸி பணியாளர்கள் ஜெயில் அதிகாரிகளின் அறைக்குத் திரும்பிப்போய் ஆவணங்களை சரிசெய்யும் அந்த ஐந்து நிமிடம் தான் எங்களுக்குக் கிடைத்த வழியனுப்பு-வாழ்த்து நேரம்.

கடந்த பல நாட்களாக ஒன்று சேர்ந்து இருந்ததாலும், துயரங்களை ஒருவருக்கொருவர் பங்கு வைத்திருந்ததாலும் ஏற்படும் ஒரு சிறு சங்கடம் எல்லோரிடத்தும். ஆனாலும் புறப்பட இருப்பவரை முழு மகிழ்ச்சியுடனேயே வழியனுப்பி வைப்பார்கள். எல்லோரிடமும் சொல்லிக்கொண்டு போக நேரம் இருக்காது.

நகரத் தொடங்கும் ரெயில் வண்டியின் ஊளைச் சத்தத்தைப் போல் போலீஸ்காரர்களின் விசில் சத்தம் எந்த நேரமும் கேட்கலாம். விசில் சத்தம் கேட்டதும் அழைக்கப்பட்டவர்கள் எல்லோரும் போலீஸ் காரர்களை நோக்கி வேகமாக ஓடுவார்கள்.

போவதற்கு முன்னால் போலீஸ்காரனிடம் பெல்ட்டடி வாங்க யார் தான் விரும்புவார்கள்...?

# 4

ஜெயில் வாழ்க்கை இப்படியாக ஓடிக்கொண்டிருந்த போது, ஒரு நாள் இனம் புரியாத ஏதோவொரு தவிப்புக்கு ஆனானேன் நான்.

எனக்கு முன்னால் சிறைக்கு வந்தவர்கள், எனக்கு பின்னால் வந்தவர்கள் என்று பலரும் அவரவர் ஊருக்குத் திரும்பிப் போய் விட்டார்கள்.

என்னுடைய பேப்பர்கள் மட்டும் இன்னும் ஏன் சரியாகாமலேயே இருக்கிறது?

எனக்குத் தெரியும், அவர்களிடம் பாஸ்போர்ட் அல்லது அது போன்ற ஏதாவதொரு ஆவணமாவது கைவசம் இருந்திருக்குமென்று. அதனால் அவர்களைப்போல் அத்தனை வேகமாக என்னுடைய விஷயங்களும் நடக்க வேண்டும் என்று நான் எதிர்பார்ப்பது சரி யில்லைதான்.

ஆனால் எதற்கும் ஒரு கால அளவு இருக்கிறதே? இப்போதே நான்கைந்து மாதங்கள் உருண்டோடிப் போய்விட்டன. ஆனாலும் ஒரு சின்ன ஆறுதல், இந்த அதிர்ஷடக் கட்டைக்குக் துணையாக ஹமீதாவது உடனிருக்கிறானே என்று. அவனுடைய பேப்பர்களும் கூட இன்னமும் சரியாகவில்லை.

எம்பஸி ஆட்கள் வரும்போதேல்லாம் எங்கள் நம்பிக்கை துளிர்விடு வதும், பின்பு அவர்கள் போனதும் நிராசையில் வாடுவதுமாக எங்கள் நாட்கள் நகர்ந்தன.

'ஒண்ணும் பயப்படாதே, நான் பாத்துக்கிறேன்' என்று குஞ்சிக்கா சொன்னதை நம்பித்தான் இப்படி நாங்களே வந்து போலீஸ் பிடியில் மாட்டியிருக்கிறோம்.

ம்... எல்லாம் சரியாகும். குஞ்சிக்காவை நம்பலாம்.

'என்னைப் படைத்த இறைவா, குஞ்சிக்காவை நம்பாமல் இந்த உலகத்தில் இனி நான் யாரை நம்புவேன். உனது திருநாமத்தால் அவர் எனக்குச் செய்த உதவிகளை ஒருகணம் மறந்து போனதற்கும், விரக்தியின் உச்சத்தில் ஒரு நிமிடம் அவரை நான் சந்தேகப்பட்ட தற்கும், கருணைமயமான அல்லாஹுவே என்னை நீ மன்னிக்க வேண்டும்.'

இனி எம்பஸி விஷயங்கள் எப்படி நடக்குமோ அப்படியே நடக்கட்டும். அதுவரையிலும், பொறுமையாக இருப்போம். இத்தனை நாட்களாக அப்படித்தானே இருந்தோம். அதிகம் போனால் இன்னும் கொஞ்ச நாட்கள். கருணை நிறைந்த அல்லாஹ் எனக்காக நிச்சயித்த வேளை இன்னமும் வரவில்லையோ என்னவோ?

அன்று அரபிகள் வரும் நாள். இப்போது நானும் ஹமீதும் ஜெயிலில் சீனியர்களாகி விட்டோம்.

அரபிகள் வருகிறார்கள் என்று கேட்டதுமே புதுமுகங்கள் எல் லோரும் கலவரமடையத் தொடங்கி விடுவார்கள். அவர்களை யெல்லாம் சமாதானப்படுத்துவது எங்களைப் போன்ற சீனியர்கள்தான்.

அன்றும் அப்படித்தான். அவர்களையெல்லாம் ஒருவிதமாக சமாதானப்படுத்தி விட்டு நானும் ஹமீதும் வரிசையின் பின்பக்கமாக போய் நின்றோம். இப்போது ஜெயிலில் போலீஸ்காரர்களும் எங்களுக்கு ஓரளவு பழக்கமாகி விட்டிருந்தார்கள்.

என்னுடைய கதையைக் கேட்டு அவர்களுக்கும் என்மீது ஏதோ ஒருவித பரிதாபம் ஏற்பட்டிருக்க வேண்டும். அதனால் வரிசையில் புதுமுகங்களை விரட்டுவதைப்போல் அவர்கள் எங்களை விரட்டு வதில்லை.

வரிசையில் நின்றபடியே பேசுவது, காரணமில்லாமல் சிரிப்பது, கிண்டல் செய்வது என்று நாங்கள் முதிர்ச்சியடைந்திருந்தோம். அன்று அப்படித்தான் ஏதோவொரு விஷயத்தைப் பற்றி ஹமீதிடம் நான் பேசிக் கொண்டிருந்தபோது, சட்டென்று அவன் பார்வை ஏதோ வொரு இடத்தில் நிலைகுத்தி நின்றது.

'என்ன ஆனது அவனுக்கு?' நான் அவன் முகத்தையே உற்றுப் பார்த்தேன்.

அதில் ஈயாடவில்லை.

சற்றைக்கெல்லாம் 'நஜீபே...' என்னும் தீனமான அழைப்பு அவனிடமிருந்து வெளிப்பட்டது.

அந்தக்குரலில் கலந்திருந்த உணர்வுகள் எவையென்று என்னால் இனம் காணமுடியவில்லை. துயரம், பீதி, வேதனை, கண்ணீர், நடுக்கம் என்று பல்வேறு உணர்வுகளின் கலவையாக இருந்தது அது.

ஒரே சொல்லில், ஒரே அழைப்பில் இத்தனை விதமான உணர்வு

களைக் கலந்து வெளிப்படுத்த முடியும் என்பதை அப்போதுதான் நான் தெரிந்து கொண்டேன். இவ்வுலகில் எந்தவொரு கலைஞனாலுமே வெளிப்படுத்த முடியாத, வாழ்க்கையைப் பற்றிய அப்பட்டமான உணர்ச்சிக் குவியல் அது.

அதற்குமேல் ஹமீது என்னிடம் எதையுமே சொல்லவேண்டிய அவசியம் வரவில்லை.

அவனுடைய கண்கள் நிலைகுத்தியிருந்த திசையை நோக்கி நான் திரும்பினேன்.

அங்கே... ஓர் அரபி எங்களை நோக்கி வேகமாக நடந்து வந்து கொண்டிருந்தான். அவன் எங்களுக்கருகில் வருவதற்கு முன்பாகவே ஹமீது வாய்விட்டு அழ ஆரம்பித்து விட்டான்.

அது 'இரை'யைத் தேடி வந்த அரபிக்கு வசதியாகப் போய்விட்டது. அவன் தேடிவந்தவன் இதோ அவன் கண்முன்னாலேயே நிற்கிறான்.

ஹமீதைப் பார்த்ததும் அரபி ஒரு சிறுத்தையைப் போல் பாய்ந்து வந்து அவனை நையப் புடைத்தான். கைகள் களைத்தபோது இடுப்பில் கட்டியிருந்த பெல்ட்டாலும், தலையில் முறுக்கிச் சுற்றப் பட்டிருந்த இவானாலும் அவன் கோபம் தணியும் வரை விளாசித் தள்ளினான்.

இதைப்பார்த்து நானும், பிளாக்கிலிருந்த சகாக்களும் விக்கித்துப் போனோம்.

'எனக்கு என் சொந்த நாட்டுக்குப் போகணும். என்னால் இங்க இருக்க முடியல. நான் போகட்டுமா...? ஐயா, என்ன விட்டுடுங்க...' அழுகையும் அரற்றலுமாக வெளிவந்தது ஹமீதின் குரல்.

ஆனால் அரபியோ அதையெல்லாம் காதிலேயே வாங்காமல் அவனைத் தர தரவென இழுத்துக்கொண்டே வார்டனின் அறையை நோக்கிப் போனான்.

அதுதான் ஹமீதை நான் கடைசியாகப் பார்த்தது. அதன் பிறகு அவனைப் பற்றிய எந்த விபரத்தையும் என்னால் தெரிந்து கொள்ள முடியவில்லை. அவனது எஞ்சிய வாழ்க்கை என்னவானது என்றறிய என்மனம் கிடந்து தவித்தது.

இப்படி பாதிவழியிலேயே முடிந்து போகும் வாழ்க்கைகள் தான் எத்தனை! தமது சுய வாழ்க்கையை எவரோடும் பகிர்ந்து கொள்ள முடியாமல் தமக்குள்ளேயே முடங்கிப்போகும் பரிதாப ஜீவன்கள் அவை!

கொஞ்ச நாள் பழக்கம்தான். ஆனால் அதற்குள்ளேயே ஹமீது என்னுடன் நெருக்கமாகிப் போயிருந்தான்.

அரபியின் தோட்டத்தில் கூலி வேலை அவனுக்கு. இருட்டும் வரை வேலை. குறைந்த கூலி. தாராளமாக அடி உதை. பொறுக்க முடியாமல் ஒரு கட்டத்தில் ஹமீது அங்கிருந்து தப்பியோடி விட்டான்.

ஜெயிலுக்குள் வரும் போது நான் அடைந்த சந்தோஷத்தை விடவும் பல மடங்கு சந்தோஷத்துடனிருந்தான் அவன்.

'நாம் தான் இப்போது அரசாங்கத்தின் பாதுகாப்பிற்குள் வந்து விட்டோமே, இனிமேல் அரபியால் என்னை கண்டுபிடிக்கவே முடியாது' என்று உறுதியாக நம்பிக்கொண்டிருந்தான் அவன்.

ஆனாலும் விதியை என்ன சொல்வது? ஒரு நாளிலேயே எல்லாம் தலைகீழாகிப் போய்விட்டதே...!

அன்று பிளாக் முழுவதுமே நிசப்தமாக இருந்தது. ஹமீது எல்லோருக்கும் பிரியமானவன். கிண்டலும், கேலியுமாக எல்லோரிடமும் மகிழ்ச்சியாகப் பழகினான். ஒரு மூத்த சகோதரனைப் போல பலருக்கும் ஆறுதல் சொன்னான். இறுதியில் கண்ணீர்க் கதறலோடு அவன் இழுத்துச் செல்லப்படுவதை நாங்கள் இயலாமையோடு பார்த்துக் கொண்டிருக்க வேண்டியதாயிற்று. இத்தனை வீறிட்ட அழுகையுடன் வேறெவருமே சமீபத்தில் அரபியுடன் போனதாக நினைவில்லை.

மறுநாள் அதைவிடவும் பெரிய துயரச் சம்பவமொன்று அங்கு அரங்கேற்றியது.

அன்று எம்பஸி ஆட்கள் வந்து முதல் முதலில் கூப்பிட்டது ஹமீதின் பெயரைத்தான்.

'கடவுளே... என்ன கொடுமை இது?' கடந்த வாரமே இந்த பெயரைக் கூப்பிட உன் திருவுள்ளம் கனியவில்லையே. அப்படி மட்டும் நடந்திருந்தால் அவனுடைய வாழ்க்கை எவ்வளவு சந்தோஷமாக மாறிப் போயிருக்கும்.

இல்லையில்லை... நான் உனது முடிவை விமர்சிக்க முயலவில்லை. உனது பேருளை இன்னமும் உறுதியாக நம்புகிறேன். நீ அவனுக்காக விதித்த துயரங்களின் நாட்கள் முடிவடைய இன்னமும் சில காலம் இருக்கிறது என்பதை மட்டும் நீ அவனுக்கு புரிய வைத்து விடு அதுபோதும்.

ஹமீது போனதோடு ஜெயிலில் நான் தனிமைப்பட்டுபோனேன். புதிதாக வருபவர்களிடம் என்னால் அதிக நெருக்கம் காட்ட முடியவில்லை. யாரிடமும் பேசாமல் ஒரு மூலையிலேயே முடங்கிக் கிடந்தேன். எப்போதாவது சாப்பிடுவேன். பல நாட்கள் எதுவுமே சாப்பிடாமலும் இருந்ததுண்டு. ஹமீதின் இழப்பு எனது உற்சாகத்தை வடியச் செய்துவிட்டது.

வாரம் ஒருமுறை எம்பஸிக்காரர்கள் வரும் போது மட்டும் நான் சற்றே உற்சாகமாவேன், எப்போது எனது பெயரைக் கூப்பிடுவார்கள் என்னும் தவிப்பு நிறைந்த காத்திருப்புடன். ஆனால் அப்படி ஒரு சம்பவம் நிகழவேயில்லை.

அவர்களைக் கெஞ்சிக் கூத்தாடி விபரம் கேட்கும்போது இன்னும் சரியாகவேண்டிய சிக்கல் நிறைந்த பேப்பர்களைப் பற்றி பல்வேறு கதைகள் சொல்வார்கள். என்றாலும் அடுத்த வாரம் எல்லாம்

சரியாக விடும் என்னும் நம்பிக்கையை விதைத்துவிட்டுத்தான் அவர்கள் போவார்கள்.

அப்படியாக நான் ஒவ்வொரு வாரமும் நம்பிக்கையில் துளிர்விட்டு, நிராசையில் வாடிப்போய்க்கொண்டிருந்தேன்.

ஜெயில் வாழ்க்கை இப்படியாக உருண்டு போய்கொண்டிருந்த போதுதான், அரபி பரிசோதனைக்கு வரும் அந்த நாளும் வந்தது.

பீதியோ, எதிர்பார்ப்போ, நிராசையோ எதுவுமில்லாமல் மனதில் வெறுமையுடன் நான் வரிசையில் நின்று கொண்டிருந்தேன். ஏராள மான அரபிகள் எங்களைக் கடந்து போய்க்கொண்டிருக்கிறார்கள்.

திடீரென்று வரிசையின் மூலையில் ஒரு அரபியின் முகம் வெளிப் பட்டது. அந்த முகத்தைப் பார்த்ததும் எனக்குள் ஒரு பேரிடி வெடித்துச் சிதறியது!

சில நாட்களுக்கு முன்னால் ஹமீது அலறியது போல் நானும் மனதுக்குள் அலறினேன்.

'அல்லாஹூவே...!'

இனிமேல் என்றுமே பார்க்கப்போவதில்லை என்றும், இனி ஒரு போதுமே என்னைத் தேடி வரமாட்டான் என்றும் நான் உறுதியாக நம்பியிருந்த என்னுடைய சொந்த அர்பாபு அது!

அர்பாபு! சுமார் நான்கு வருஷங்களுக்கு முன்னால் ரியாத் ஏர் போர்ட்டில் நான் முதன் முதலாகப் பார்த்த என்னுடைய அர்பாபு!

பீதியால் எனக்கு தலைசுற்றுவது போல் இருந்தது.

கீழே விழுந்துவிடாமலிருக்க நான் என் பக்கத்தில் நின்றவனின் கையை பலமாகப் பிடித்துக்கொண்டேன்.

# 5

ஒன்றாம் இராக் போர் வளைகுடா பகுதியில் ஏற்படுத்தியிருந்த பீதியின் நிழல்கள் மெதுவாக அடங்கிக்கொண்டிருந்த வேளை. ஒரு சிறிய பின்னடைவுக்குப் பின் எண்ணெய் வள நாடுகளில் வேலைவாய்ப்புகள் கொழித்துக்கொண்டிருந்த காலம்.

'ஒரு 'விசா' இருக்கு. யாருக்காவது வேணும்னா சொல்லு."

வழியில் பார்த்த கருவாற்றுக்கார நண்பனொருவன் எதேச்சையாக சொன்னபோது, அது வரையில்லாமலிருந்த ஒரு சிறு ஆசை முணுக் கென்று எனக்குள் எட்டிப்பார்த்தது.

எவ்வளவு காலந்தான் இப்படியே தண்ணிக்குள் முங்கி எழுந்து கொண்டிருப்பது. ஒரு தடவை வெளியே போனால் தான் என்ன? ரொம்ப நாள் ஒண்ணும் இருக்க வேண்டாம். அந்த அளவுக்கு பேராசை யும் இல்லை. சில்லறைக் கடன்கள் சிலதை அடைக்கணும். வீட்டில் மேலும் ஒரு அறை கட்டணும்.

எல்லா மலையாளிகளுக்கும் சாதாரணமாக வரும் ஆசைதான் அது. மட்டுமல்ல ஆற்றில் மணல் எடுப்பதற்கு பல கெடுபிடிகள் வரப்போவதாக ஒரு பேச்சும் இருக்கிறது. ஆற்று மணலும் இல்லாமல் போனால் பின் வேறெந்த வேலைக்குப் போகமுடியும்...? பட்டினி கிடக்க முடியுமா? முன்பாக இருந்தால் பட்டினி கிடந்திருக்கலாம். அப்படி பட்டினியும் கிடந்திருக்கிறோம்.

இப்போதோ உம்மாவின் நச்சரிப்பு தாங்காமல் ஒரு கல்யாணமும் கட்டியாச்சு. அவளுக்கு இப்போ நாலு மாசம்.

செலவுகள் மணல் குவியல் போல் குவிந்து வருகிறது. மட்டுமல்ல இப்போது சில நாட்களாக காய்ச்சலும் இருமலும் வேறு விட்டு,

விட்டு வந்து கொண்டிருக்கிறது. தினமும் தண்ணீருக்குள் ஊறிக்கிடப்பதால் இருக்கும். இப்படியே போனால் நிமோனியாவில் தான் கொண்டு போய்விடும். அதற்காக தண்ணீருக்குள் கால் நனைக்காமல் இருக்க முடியுமா?

இது இறைவன் கொண்டு வந்த வாய்ப்புதான். அதை விட்டுவிடக் கூடாது.

'யாராவது இருந்தா சொல்லு, இது என் மச்சான் வழியா வந்திருக்கு. மச்சான் லீவில வந்திருக்கான். இப்போ பைசா கொடுத்து விட்டா, ரெண்டு மாசத்துல விசா அனுப்பி வைப்பான்.'

கருவாற்றா நண்பன் இப்படிச் சொன்னபோது, ஸைனுவின் நச்சரிப்பு தாங்காமல் கொஞ்ச நாட்களுக்கு முன்னால் எடுத்து வைத்திருந்த பாஸ்போர்ட் என் கண்ணில் நிழலாடியது.

'ஒரு ஆள் இருக்கான். வேற யாருக்கும் கொடுத்துடாண்டாம்'. நான் அப்போதைக்கு சொல்லி வைத்தேன்.

'அப்படீன்னா நீ நாளைக்கு வீட்டுப் பக்கம் வா. நாம ரெண்டு பேரும் போய் மச்சானப் பார்ப்போம். பாக்கி காரியங்களை நீங்களே பேசிக்கோங்க.'

நண்பன் போனபிறகு மனதுக்குள் கில்லியாட்டம். என்ன செய்வது? இது வேணுமா... வேண்டாமா?

ரொம்ப நேரமாக மனதுக்குள் ஊறப்போட்டு ஆலோசித்தும் கரைகாண முடியாமல் தவித்தபோதுதான், கடைசியில் வேறு வழியெதுவும் தெரியாமல் ஸைனுவிடம் நான் மெதுவாக விஷயத்தைச் சொன்னேன்.

அதைக்கேட்டதும் எல்லாப் பெண்களையும் போல் அவளும் சந்தோஷத்தில் மிதந்தாள்.

'மச்சான், இது படச்சோன் கொண்டு வந்த சந்தர்ப்பமாக்கும். விட்டுடாதீங்க. இத்தன நாளா நான் எங்க அண்ணன்மார்களிடம் சொல்லிக்கிட்டே இருந்தேனே. ஒண்ணும் நடக்கலயே.'

ஸைனுவின் இரண்டு சகோதரர்களும் ரொம்ப நாட்களாக கல்ஃபில் இருக்கிறார்கள்.

'ஆனா ஸைனு, ரொம்ப பைசா கொடுக்கேண்டி வருமே. நம்ம கையில சல்லிக் காசு கூட இல்லயே.' நான் புலம்பினேன்.

'மனசிருந்தா எல்லாந் தானே வரும், மச்சான். இங்க எல்லாரும் கையில பைசா வச்சுகிட்டா புறப்படுறாங்க. நீங்க தைரியமா போயி அந்த கருவாற்றாக்காரனப் பாருங்க...'

ஸைனு எப்போதுமே அப்படித்தான். அவளிடமிருந்து நிராசை பூண்ட ஒரு வார்த்தை கூட வெளியே வராது. இல்லாமையிலும் எல்லாம் இருக்கிறது என்று காட்டுவதில் திறமைசாலி.

'பெண்களாக இருந்தால் இப்படித்தான் இருக்கணும்' என்று மனதுக்குள் ரகசியமாக நான் பலமுறை பெருமைப்பட்டிருக்கிறேன்.

எங்களுக்குள் கல்யாணம் முடிந்து கொஞ்ச காலம்தான் ஆகியிருக்கிறது. ஆனாலும் அதற்குள் பலதடவை இப்படி பெருமைப்படும் சந்தர்ப்பம் எனக்கு வாய்த்திருக்கிறது.

அடுத்த நாளே நண்பனையும் கூட்டிக்கொண்டு 'அந்த மச்சானை'ப் போய் பார்த்தேன்.

முப்பதினாயிரம் ரூபாய் கேட்டான். அதில் இருபது, மச்சான் இரண்டு வாரம் கழிந்து கல்ஃபுக்கு திரும்பிப்போவதற்கு முன்னால் கொடுக்கவேண்டும்.

அதை அரபியிடம் கொடுத்தால்தான் விசா சரியாகும். பாக்கியுள்ள பத்து, விமான டிக்கெட்டுக்கும் வேறு செலவுகளுக்குமாக, விசா கிடைத்தபின் பம்பாயில் ஏஜென்டிடம் கொடுத்தால் போதும்.

இவ்வளவு பெரிய தொகையை என்னால் புரட்ட முடியாதுதான். ஆனாலும் அப்போதைய அவசரத்தில் நான் சரியென்று தலையாட்டி வைத்தேன்.

அதற்கு அடுத்த ஒரு வாரமும் பணத்துக்காக அங்குமிங்குமாக ஒரே ஓட்டமும் நடையும் தான்.

வெளிநாட்டுக்குக் கூட்டிக்கொண்டு போக நெருங்கிய சொந்தங்கள் எவரும் இல்லாத ஒவ்வொரு மலையாளியின் வாழ்க்கையிலும் இப்படியொரு ஓட்டத்தின் கதை நிச்சயமாக இருக்கும்.

ஸைனுவின் கழுத்தில் எல்லாம் போக மிஞ்சிக் கிடந்த செயினை அடகு வைத்தும், வீட்டுப்பத்திரத்தை பாங்கில் அடமானம் வைத்தும், மணல் அள்ளும் சகபாடிகளின் கைகளில் இருந்ததையெல்லாம் பொறுக்கியெடுத்தும், தெரிந்தவர்களிடமெல்லாம் ஐந்து பத்து என்று கைமாத்து வாங்கியும் எப்படியோ பணத்தை 'புரட்டி' விட்டேன்.

ஆமாம், 'புரட்டினேன்' என்று சொல்வதுதான் மிகச்சரியான வார்த்தை.

'மச்சான்' போவதற்கு முந்திய நாள் ராத்திரி எப்படியோ போய் பணத்தைக் கொடுத்துவிட்டு வந்தோம். (அபுதாபியிலிருக்கும் ஸைனுவின் அண்ணன்களிடம் கேட்டிருக்கலாம். ஆனால் அவளுக்கு அதில் துளிகூட விருப்பமில்லை. இத்தனை நாட்களாகத் தன்னைத் திரும்பிக் கூட பார்க்காத அவர்களிடம் போய் என்ன கேள்வி, என்னும் கோபம் அவளுக்கு.)

அதன்பின் கனவுகளும், காத்திருப்பும் நிறைந்த இரண்டு மாதங்கள். அதனுடனேயே பணம் புரட்டலும். ஏஜெண்டுக்குக் கொடுக்க வேண்டியிருந்த பாக்கித் தொகை பத்தாயிரம். பெரும்பாடுபட்டு எப்படியோ ஒரு வழியாக அதையும் புரட்டி விட்டோம்.

இதற்கிடையே மனம் முழுக்க கனவுகள்.

பதினான்கு லட்சத்துக்கும் அதிகமான கல்ஃப் மலையாளிகள் ஒவ்வொருவருமே அவர்கள் புறப்படுவதற்கு முன்னால் கண்டிருந்த பழமையான கனவுகள்.

கோல்டன் வாட்ச், ஃபிரிட்ஜ், டி.வி., கார், ஏ.ஸி, டி.வி.டி. தடிமனான முறுக்குச்செயின்... இரவு படுக்கையறையில் ஸைனுவுடன் அவற்றைப்பற்றித்தான் வெகு நேரம் பேசிக்கொண்டேயிருந்தேன்.

'ஒண்ணும் வேண்டாம் மச்சான். நம்முடைய பிள்ளைக்கு (அது மகனோ, மகளோ?) அவசியமான தொகை கையில் சேர்ந்ததும் திரும்பி வந்துடணும். என்னுடைய அண்ணன்மார்களைப் போல நமக்கொண்ணும் வாரி குவிக்க வேண்டாம். பங்களா படோடபம் ஒண்ணும் வேண்டாம். நாம எல்லோரும் ஒண்ணாயிருக்கும் அந்த வாழ்க்கை மட்டும் போதும்.'

கல்ஃபுக்கு புறப்படும் ஒவ்வொருத்தனிடமும் அவனுடைய மனைவி இப்படித்தான் சொல்லியிருக்கவேண்டும்.

ஆனாலும் ஏனோ அவர்கள் எல்லோருமே தங்கள் வாழ்க்கையின் பெரும்பகுதியையும் கல்ஃபிலேயே கழிக்க வேண்டியதாகிப் போகிறது.

அதற்கிடையே அப்படி என்னதான் நிகழ்ந்து விடுகிறது...?

அப்படியாக ஒரு நாள் விசாவும் வந்து சேர்ந்தது.

'பாக்கித் தொகையுடன் வந்து சேரவும்' –பம்பாயிலிருந்து ஏஜென்டின் தந்தி.

அப்போது நான் அடைந்த சந்தோஷம், இப்போது கல்ஃபிலிருக்கும் எந்தவொரு மலையாளியை விடவும் ஒருபடி அதிகமாகவே இருந்தது என்பதில் எந்தவித சந்தேகமுமில்லை.

அன்றிரவு நான் ஸைனுவைக் கட்டியணைத்ததைப் போல, வேறெவருமே தமது மனைவியைப் புணர்ந்திருக்கமாட்டார்கள்.

அப்போதெல்லாம் ஒரேயொரு துயரம்தான் என் மனதுக்குள் நெருடிக்கொண்டிருந்தது. என்னுடைய மகன்? மகள்? பிறக்கும் போது நான் ஸைனுவின் அருகில் இருக்கமாட்டேனே... பிரசவ வலியெடுத்து அவள் கதறும்போது என் ஸைனுவின் அருகிலிருந்து அவள் நெற்றியை வருடிக் கொடுக்க முடியாதே!

கழிவிரக்கம் மேலிட நான் உப்பிய ஸைனுவின் வயிற்றில் மூச்சு முட்டும்வரை முத்தம் கொடுத்தேன். என்னுடைய நபீலே! என்னுடைய ஸஃபியா! (எனது குழந்தைக்காக நான் தேர்ந்தெடுத்திருந்த பெயர்கள்) 'எனது குஞ்ஞீ! எனது சக்கீ!', (குழந்தையின் வீட்டுப்பெயர்), 'என் மகனே...! என் மகளே...! கண் சிமிட்டிக்கொண்டு நீ இந்த பூமிக்கு வரும் போது உன்னைப் பார்க்க, இதோ இந்த வாப்பா இங்கே இருக்கமாட்டேன். ஆனால் நான் திரும்பி வரும் போது உனக்காக கைநிறைய பரிசுகள் கொண்டு வருவேன்...'

அதையெல்லாம் இப்போது நினைத்துப் பார்க்கும் போது ஒரு

நாலாந்திர சினிமாக் காட்சியின் வயிற்றைக் குமட்டும் வாந்தி நெடி அதிலிருந்து புறப்பட்டு வருவதைப் போல் தோன்றியது. நம்மில் பலரின் வாழ்க்கை கூட சில வேளைகளில் சினிமாக் காட்சிகளை விடவும் கேலி நிறைந்ததாகிப் போய்விடுகிறதே...!

விசா வந்த விபரத்தைச் சொல்ல கருவாற்றக்கார நண்பனைப் பார்க்க போனபோதுதான் தெரிந்தது. தனுவச்சபுரத்தைச் சேர்ந்த வேறொரு பையனுக்கும் என்னைப் போலவே விசா வந்திருக்கிறதென்று. அதே 'மச்சான்' மூலமாக. இரண்டு பேருக்குமே ஒரே கம்பெனிதான். வெளியுலகமே தெரியாதே, இருவரும் சேர்ந்து போவதும் நல்லதுதான்.

நாங்கள் இருவரும் காயங்குளத்திலிருந்து ஜெயந்தி ஜனதாவில் புறப்பட்டோம். அப்போது தான் இன்னமும் மீசை கூட அரும்பாத மெலிந்த அந்த பையனைப் பார்த்தேன். பெயர் ஹக்கீம்.

'தம்பி! இவன் இதுவர வெளியிலெங்கேயும் போனதில்ல. உங்க கூடத்தான் அனுப்புறோம். கவனமா பாத்துக்கப்பா' ஹக்கீமின் உம்மா ஜன்னல் வழியாக உற்றுப்பார்த்து அழுதாள்.

ஸைனுவும் உம்மாவும் அழுது கொண்டிருந்த திசைப்பக்கமே நான் திரும்பவில்லை. அத்தனைப் பெருங்கூட்டத்தில் கண்ணீர்விட எனக்குக் கூச்சமாக இருந்தது.

சந்தோஷத்தை விட கவலையும், பதட்டமும் மிகுந்த பயணம் அது. பயணத்தின் சிரமம் பற்றிய கவலை, பெட்டிக்குள் பணமிருக்கிறது என்னும் பதட்டம், போய்ச்சேரும் நகரத்தைப் பற்றிய கவலை, ஏஜென்ஸிகள் செய்த ஏமாற்றுக் கதைகளை நினைத்த பரிதவிப்பு. பக்கத்து ஊரைச் சேர்ந்த எனது நண்பன் சசியிடம் விபரம் சொல்லியிருந்தேன். அவன் சரியான நேரத்துக்கு ஸ்டேஷனுக்கு வந்துவிடுவானா என்னும் தவிப்பு.

அந்த மூன்று நாள் பயணத்தில் இந்தக் கவலைகளும் என்னுடன் சேர்ந்தே பயணித்தன. என்னுடைய இந்த சுமைகளுடன் ஹக்கீமின் பொறுப்பும் சேர்ந்து கொண்டது. அவனோ இந்தக் கவலைகள் எதுவுமேயில்லாமல் மகிழ்ச்சியுடன் வெளியே வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான்.

பம்பாய் போய்ச் சேர்ந்ததுமே, அதுவரையில் என்னை பிடித்திருந்த கவலைகளெல்லாம் பறந்து போய்விட்டன. எல்லாவற்றையும் பார்த்துக் கொள்ள சசி கூடவேயிருந்தான். அந்த விதத்தில் பம்பாய் மலையாளிகளின் உள்ளன்பை பாராட்டியே ஆகவேண்டும். சசி எனக்காக இரண்டு நாள் லீவு கூட போட்டிருந்தான்.

ஒரிஜினல் விசாவை பார்த்த பிறகு தான் ஏஜெண்டிடம் பணத்தைக் கொடுத்தோம். சசியும் அவனுடைய கூட்டாளிகள் எட்டுபேரும் தங்கியிருந்த அறையில்தான் நாங்களும் தங்கினோம். எங்களையும் உள்ளே சேர்த்துக்கொள்ள அந்த அறை தயங்கவேயில்லை. மேலும் இரண்டு பேர் வந்தால் கூட அந்த அறை ஏற்றுக்கொள்ளும். அது

பம்பாய் மலையாளிகளுக்கு மட்டுமேயான விசால மனது.

இரண்டு வாரங்கள் நாங்கள் பம்பாயிலிருந்தோம். மிக நீண்ட இரண்டு வாரங்கள். ஒவ்வொரு நிமிடமும் ஒரு நூற்றாண்டாகவும், ஒவ்வொரு நாளும் ஒரு யுகமாகவும் நீண்டு கிடந்த இரு வாரங்கள்!

சசியும் கூட்டாளிகளும் வேலைக்குக் கிளம்பிப் போனதும் நானும் ஹக்கீமும் ஊர் சுற்றக் கிளம்புவோம், எந்த இலக்குமில்லாமல், கைவசம் பேச மொழியும் தெரியாமல். ஏதோவொரு தைரியம் மனதில்.

நாங்கள் தாராவி சேரிகள் வழியாக நடந்தோம். இடுங்கி நீண்ட சந்துகளைக் கடந்து அந்தேரி ரெயில்வே ஸ்டேஷனுக்குள் போயிருந்து, பயணிகள் அங்குமிங்குமாக பரபரப்புடன் போய்க்கொண்டிருப்பதை அமைதியாக வேடிக்கை பார்த்தோம்.

பாவ்பாஜி சாப்பிட்டோம். சர்பத் குடித்தோம், சினிமா பார்த்தோம். இரவில் சசியுடன் சேர்ந்து பீர் குடித்தோம். (ஹக்கீமுக்கு கூல்டிரிங்ஸ்.) டான்ஸ் பாருக்கு போய்விட்டு நேரம் காலம் தெரியாமல் அறைக்குத் திரும்பிய உல்லாசம் நிரம்பிய இரு வாரங்கள்.

கடைசியாக நாங்கள் புறப்படும் நாளும் வந்தது. என்னிடம் லக்கேஜ் ஒன்றும் அதிகமில்லை. உப்பிய வயிற்றுடன், அன்பில் புரட்டி ஸைனு வறுத்தத் தந்த சிப்ஸ், எலுமிச்சை ஊறுகாய்! அந்த தள்ளாமை யிலும் உம்மா இடித்துத்தந்த தவணைப்பொடி, ஆற்றுவாளை ஊறுகாய்! இவற்றுடன் இரண்டோ மூன்றோ டிரஸ்கள் மட்டுமே (எதுக்கு மச்சான் இத்தனை டிரெஸ்கள்? இஷ்டம்போல கிடைக்கும் நாட்டுக்குத்தானே போறீங்க!) ஒரு டவல், இரண்டு சோப்பு, ஒரு சிறிய பேஸ்ட், ஒரு பிரஷ். இவற்றுடன் பாஸ்போர்ட், டிக்கெட், கொஞ்சம் இந்திய ரூபாய் அவ்வளவுதான்.

ஆனால் ஹக்கீமோ ஒரு பெரிய மூட்டையையே கட்டிக்கொண்டு வந்திருந்தான். ஒரு குடும்பம் ஒரு நூற்றாண்டு காலம் முழுக்க சாப்பிடு வதற்கான அத்தனை சாமாச்சாரங்களும் அவன் பைக்குள் இருப்பதாக எனக்குத் தோன்றியது. அதைச் சொல்லி நானும் சசியும் அவனை கேலி செய்வோம். அப்போது அவன் முகம் வெட்கத்தால் சிவக்கும். அதைப் பார்ப்பதற்காகத்தானே இந்த கேலியும் கிண்டலும்.

சசியும் அறையிலிருந்த வேறொருத்தனும் ஏர்போர்ட்டுக்கு வந்திருந் தார்கள்.

'அங்கே போனதுமே அரபிக்கு சோப்பு போட்டு எப்படியாவது இரண்டு விசா எடுத்து உங்களுக்கு அனுப்புறேன்' என்று எல்லா கல்ஃப் மலையாளிகளும் தங்களுடைய நண்பர்களுக்கு ஏர்போர்ட்டில் வைத்து கொடுக்கும் ஒரு வாக்குறுதியை நானும் சசிக்கு கொடுத்தேன்.

இது போல எத்தனையோ கேட்டிருக்கிறேன் என்ற மட்டில் அவர் கள் மனதுக்குள் சிரித்திருக்க வேண்டும். என்றாலும் ஒரு சின்ன எதிர்பார்ப்பு கூடவா அவர்கள் உள்ளத்தில் முளைவிட்டிருக்காது?

இப்படிப்பட்ட சில நம்பிக்கைகளின் மீதுதான் பம்பாய் மலையாளி தனது துயர வாழ்க்கையை தள்ளிக்கொண்டிருக்கிறான்.

ஒரு வாரகாலம் எங்களைப் பராமரித்ததற்கு நன்றிக்கடனாக என்னுடைய கையில் கிடந்த வாட்சை அவிழ்த்து சசியிடம் கொடுத்தேன். (ஸைனுவின் அண்ணன் முதல் தடவை வந்தபோது எனக்குத் தந்தது.) அதன்பின் ஏர்போர்ட்டிலிருந்த ஒரு டெலிபோன் பூத்துக்கு போய், நெடுநேரம் முயன்று ஊரில் எனது பக்கத்து வீட்டு மாப்ளக் காரனின் வீட்டைக் கூப்பிட்டு என்னுடைய வீட்டில் தகவல் சொல்லுமாறு சொன்னேன்.

ஏர்போர்டில் எல்லாம் நல்லபடியாக முடிந்தன. எமிகிரேஷனில் மட்டும் ஏதோ சில கேள்விகள் கேட்டார்கள். எனக்கு ஹிந்தியும், கேட்டவனுக்கு மலையாளமும் தெரியாததாலும் நீட்டிய பாஸ்போர்ட்டுக்குள் ஒரு நூறு ரூபாய் தாளை வைத்து நீட்டியதாலும் அந்தத் தடையையும் வேகமாகக் கடந்தோம்.

ஏர் இந்தியா விமானம். நான்கரை மணி நேரம் பயணம். பம்பாய் டூ ரியாத். அப்படியாக 1992 ஏப்ரல் நாலாம் தேதி உள்ளூர் நேரப்படி சாயங்காலம் 4.30க்கு நான் ரியாத் ஏர்போர்ட்டில் போய் இறங்கினேன்.

எனது கனவுகளில் நகரமே! இதோ வந்துவிட்டேன். என்னை ஏற்றுக்கொள்!

# 6

நான் கனவில் பார்த்திருந்ததைவிடவும் அதிஅற்புதமான மாயா புரியாக இருந்தது 'என்னுடைய கல்ஃப்.'

அன்றைய அரபி உலகம் இப்போதைப்போல டிவியிலோ சினிமா விலோ அத்தனையொன்றும் பிரபலமாகக் காட்சிப்படுத்தப்பட்டி ருக்கவில்லை.

இதற்கு முன்னால் கல்ஃபுக்கு வந்து போனவர்கள் சொன்ன கதைகளைக் கேட்டுத்தான் அந்த உலகத்தைப் பற்றி எனக்குள்ளேயே ஒரு கற்பனை வடிவத்தை உருவாக்கி வைத்திருந்தேன். ஆனால் நான் நேரில் கண்ட ரியாதோ எனது கற்பனையையும் தாண்டி மிகக் கவர்ச்சியாக இருந்தது. அங்கே நான் பார்த்த ஒவ்வொரு காட்சியுமே எனக்கு புதுமையாகத் தெரிந்தது.

பம்பாய் எனக்கு ஒருவித எதிர்பார்ப்பளித்ததென்றால், ரியாத் எனக்கு அற்புதமூட்டியது. ஆனாலும் என்னால் இந்த அற்புத உலகத்தை நீண்ட நேரம் ஆசை தீரப் பார்த்துக்கொண்டிருக்க முடிய வில்லை.

எமிகிரேஷன் நடைமுறைகளை முடித்துவிட்டு நாங்கள் அவசர அவசரமாக விமான நிலையத்துக்கு வெளியே ஓடி வந்தோம், எங் களுக்காக ஸ்பான்ஸர் காத்திருப்பார் என்று. ஆனால் கொஞ்சநேரமாக அங்குமிங்குமாகத் தேடியும் எங்களை கூட்டிக்கொண்டு போக எவருமே வராததால் நாங்கள் சற்றே பதட்டமடைந்தோம்.

எங்களுடன் வந்தவர்களெல்லோருமே நண்பர்கள், உறவினர்கள், ஸ்பான்ஸர்கள் என்று ஏதோவொருவரின் காரில் ஏறிப் போய்க் கொண்டிருந்தார்கள். சிலர் கம்பெனி கார்களில் ஏறிப் பறந்தார்கள். எங்களைக் கூட்டிக்கொண்டு போக மட்டும் ஏனோ தெரியவில்லை, யாருமே வரவில்லை.

எங்களுடைய ஸ்பான்ஸர் ரியாத் விமான நிலையத்தில் எங்களுக்காக காத்துக் கொண்டிருப்பார் என்றுதான் பம்பாய் ஏஜென்சியில் சொல்லியிருந்தார்கள். எங்களுடைய விமானம் ஒரு மணி நேரம் தாமதமாகத்தான் ரியாத் வந்து சேர்ந்தது. அதற்குள் ஏர்போர்ட்டில் காத்திருந்த எங்கள் ஸ்பான்ஸர், எங்களைக் காணாமல் திரும்பிக் போயிருப்பாரோ? இல்லை எங்களைத்தேடி இந்த ஏர்போர்ட்டுக் குள்ளேயே அங்குமிங்குமாக அலைந்து கொண்டிருக்கிறாரோ? ஒன்றுமே தெரியவில்லையே...!

இந்த நெரிசலில் அவர் எங்களை எப்படிக் கண்டுபிடிப்பார்? பாஸ்போர்ட்டிலிருக்கும் என்னுடைய புகைப்படத்துக்கும் இப்போதைய என்னுடைய உருவத்துக்கும் சம்பந்தமே இருக்காது. அதனால் புகைப்படத்தைப் பார்த்து எங்களைக் கண்டு பிடிக்கலாம் என்பதெல்லாம் நடக்கவே நடக்காது. ஒரு வேளை அவர் நாங்கள் வரும் விஷயத்தையே மறந்து போய்விட்டாரா? அல்லது பம்பாய் ஏஜென்சி அவரிடம் தகவல் தெரிவிக்காமல் விட்டுவிட்டார்களா? பல்வேறு கேள்விகள் நெஞ்சுக்குள். காத்திருப்பு நேரம் அதிகரிப்பதற்கு ஏற்ப, கேள்விகளின் எண்ணிக்கையும் அடர்த்தியும் அதிகரித்து வந்தன.

ஆண்களும் பெண்களுமாக நூற்றுக்கணக்கான அரபிகள் எங்களைத் கடந்து போய்கொண்டிருக்கிறார்கள். இப்போது நானிருப்பது அண்டார்டிகாவில் என்றும், என் கண் முன்னால் நடந்து போய்க்கொண்டிருப்பது வெள்ளை மற்றும் கருப்பு நிற பெங்குயின்கள் என்றும் ஒரு வேடிக்கையான— அந்த சூழலுக்கு சற்றும் பொருந்தாத ஒரு சிந்தனை என் மனதில் எழுந்தது. அந்தப் பெங்குயின்களின் முகத்தையே (முகம் பார்க்க முடியாத பெண் பெங்குவின்களின் கண்களை) நான் ஆர்வம் ததும்ப பார்த்துக்கொண்டிருந்தேன்.

'நீங்கள் தேடிக்கொண்டிருக்கும் நஜீப் இதோ உங்கள் முன்னால் நிற்கிறான். என் பக்கத்தில் நிற்கும் இந்த நோஞ்சான் பயல்தான் ஹக்கீம்.'

கண்களாலும், பரிதாபகரமான உடல் பாவனைகளாலும் அங்கே போய்க்கொண்டிருந்தவர்களிடம் நான் என் கதையைத் திரும்பத் திரும்ப சொல்லிக்கொண்டிருந்தேன்.

ஆனால் அவர்களில் எவருமே என்னைத் திரும்பிக்கூட பார்க்கவில்லை. ஒவ்வொருவரும் அவரவர் அவசரத்துக்குள் ஓடிக்கொண்டிருந்தார்கள்.

எங்களுடைய காத்திருப்பு முடிவில்லாமல் தொடர்ந்து கொண்டிருந்தது. இதற்கிடையே மேலும் மேலும் விமானங்கள் வந்திறங்கிக் கொண்டிருந்தன.

அவற்றிலிருந்து பல நாட்டுக்காரர்கள், பல மொழிபேசுவோர், பல வேடதாரிகள் என்று நூற்றுக்கணக்கானவர்கள் சாரி சாரியாக

எங்களை கடந்து போய்க்கொண்டிருந்தார்கள். அவர்களில் பலரும் ஏர்போர்ட்டுக்கு வெளியே காத்துக்கிடந்த பலரகக் கார்களில் ஏறி மறைந்தார்கள்.

மக்ரிபு தொழுகைக்கான பாங்கு முழங்கியபோதுதான் நேரம் இருட்டிவிட்டதென்று எங்களுக்கு உறைத்தது. பிரார்த்தனை நேரம் முடிந்த பின்பும் எங்களைத் தேடி எவருமே வராததால் பார்ப்பதற்கு மலையாளி போலிருந்த ஒரு விமான நிலைய ஊழியரிடம் நான் என் நிலைமையை எடுத்துச்சொன்னேன். அவர் நான் இப்போது வந்துள்ள கம்பெனியின் பெயரைக் கேட்டார்.

பம்பாய் ஏஜென்டிடமிருந்து நான் அதை வாங்க மறந்து போயிருந் தேன். அப்படியானால் இங்கே ரியாத்தில் தெரிந்தவர்கள் எவருடைய தொலைபேசி எண்ணாவது இருக்கிறதா என்று கேட்டார்.

ரியாத்தில் எனக்குத் தெரிந்தவர்கள் யார் இருக்கிறார்கள்? ஆனால்... ஆம்... அந்த கருவாற்றக்கார மச்சானின் கம்பெனி முகவரி என்னிடமிருந்தது. ஆனால் அது ரியாத்திலிருந்து வெகு தொலை விருப்பதாகச் சொல்லி அவர் கவலைப்பட்டார்.

'சரி வந்தது வந்தாச்சு, இன்னும் கொஞ்ச நேரம் காத்திருந்து பாருங்கள். எப்படியும் உங்கள் அர்பாபு வந்துவிடுவார்' என்று எங்களுக்கு ஆறுதல் சொல்லிவிட்டு அவர் தமது வேலையைக் கவனிக்கப் போனார்.

அறிமுகமில்லாத அந்த மனிதரிடமிருந்துதான் நான் முதல் முதலாக அந்த அரபிச் சொல்லைக்கேட்டேன்– 'அர்பாபு.'

அர்பாபு! அர்பாபு! என் மனதுக்குள் அந்த சொல்லை நான் பல தடவை சொல்லிப் பார்த்தேன். கேட்பதற்கே மிக இனிமையாக இருக்கிறதே? யார் அந்த அர்பாபு? அவர் எப்படி இருப்பார்? என்ன செய்கிறார்? எப்படியிருந்தாலும் அந்த அர்பாபு வந்தால்தான் எங்களால் போக முடியும்.

'ஐயா அர்பாபு! நீங்கள் எங்கேயிருக்கிறீர்கள்? வேகமாக வாருங்கள். எத்தனை நேரமாகத்தான் நாங்கள் இங்கேயே காத்துக் கொண்டிருப்பது, வாருங்கள். இந்த இருட்டிலிருந்து எங்களை வெளியே கூட்டிக்கொண்டு போங்கள்.'

இரண்டு மணி நேரத்துக்கும் மேலாகியிருக்க வேண்டும். கையில் கிடந்த ஒரே வாட்சையும் கழற்றி சசியிடம் கொடுத்துவிட்டு வந்திருந் ததால், நேரம் என்ன என்று சரியாகத் தெரியவில்லை. விமான நிலையத்தை ஒரு சுற்று சுற்றி மணி பார்க்கலாம் என்றால் அதற்கும் தைரியம் இல்லை.

நாங்கள் ஒரு பக்கம் போக, அர்பாபு இந்தப் பக்கம் வந்துவிட்டால் என்ன செய்வது...?

விமான நிலையத்துக்கு வெளியே நகரம் இரவுக்குள் பிரகாசிக்கத் தொடங்கியது. எங்களுக்குள் மெல்லிய நடுக்கம் பரவ ஆரம்பித்தது.

அப்போது ஒரு பழைய வண்டி—அது காரா, வேனா, ஜீப்பா, லாரியா, என்று கணிக்க முடியாத அளவுக்கு வினோதமாக இருந்தது. – (அது 'பிக்–அப் வேன்' என்று பின்னால் எப்போதோ தான் தெரிந்து கொண்டேன்) வேகமாக வந்து விமான நிலையத்தின் பிரதான வாசலில் கீறிச்சிட்டு நின்றது.

'நோ பார்க்கிங்' என்ற அறிவிப்பு பலகையை அலட்சியப்படுத்தி, வண்டியை அங்கேயே நிறுத்தி விட்டு ஓர் அரபி அதிலிருந்து வெளியே குதித்தான். ஏனோ தெரியவில்லை. அவனைப் பார்த்ததும், 'நாங்கள் காத்துக்கொண்டிருந்த அர்பாபு இவர்தான்' என்று என் உள்ளுணர்வு சொன்னது.

அவன் யாரையோ தேடி பொறுமையில்லாமல் அந்த விமான நிலையத்தையே சுற்றிச் சுற்றி வந்தான். எங்களுடைய நான்கு கண்களும் அவனையே பின் தொடர்ந்தன. அவனோ எங்கள் பக்கம் ஒருமுறை கூட திரும்பிப் பார்க்கவில்லை. அவனுடைய நடையிலிருந்தே அவன் பொறுமையிழந்து கொண்டிருக்கிறான் என்பதை தொலைவில் நின்றபடியே நாங்கள் யூகித்தோம்.

அவனிடமே நேரடியாகப் போய் 'நீங்கள் தானே எங்களுடைய அர்பாபு?' என்று கேட்கவும் தயக்கமாக இருந்தது. அப்படியே பேசப் போனாலும் எங்களால் எந்த மொழியில் பேச முடியும்?

விமான நிலையத்தை இரண்டு மூன்று தடவை வலம் வந்த அவன் கடைசியாக எங்கள் பக்கமாக வந்தான். நாங்களும் தயங்கித் தயங்கி அவனை நோக்கி நடந்தோம்.

'அப்துல்லா...?' என் பக்கமாக கை நீட்டிக் கேட்டான் அவன். இப்படியொரு கரடுமுரடான குரலை நான் இதுவரை கேட்டதேயில்லை.

இல்லையென்று நான் தலையாட்டினேன்.

உடனே அவர் ஹக்கீமைப் பார்த்து 'அப்துல்லா...?' என்று கேட்டான்.

அவனும் இல்லையென்று தலையாட்டினான்.

அதன்பின் அவன் அரபியில் எங்களிடம் வேறு ஏதோ கேட்டான். அதில் கோபம் கலந்திருந்தது என்பதைத்தவிர வேறொன்றும் எனக்குப்புரியவில்லை.

எங்களை விட்டுவிட்டு அவன் மீண்டும் விமான நிலையத்தை சுற்றத் தொடங்கினான். எங்களைப் போலவே தனியாக நிற்பவர்களிடமிருந்து வலுக்கட்டாயமாக பாஸ்போர்ட்டை வாங்கி பரிசோதித்தவன் கடைசியாக மீண்டும் எங்களிடமே வந்தான்.

வந்தவன் என் கையிலிருந்த பாஸ்போர்ட்டை பறித்துப் பார்த்தான். பின்பு, ஹக்கீமின் பாஸ்போர்ட்டையும் பறித்துக்கொண்டு எதுவுமே பேசாமல் வேகமாக நடக்கத் தொடங்கினான்.

எங்கள் பைகளையும் தூக்கிக்கொண்டு நாங்கள் அவன் பின்னாலேயே ஓடினோம்.

பொதுவாகவே அரபி என்றால் நல்ல வாசனை மிகுந்த அத்தரும், ஸ்பிரேயும் பூசி கமகமவென்றிருப்பார்கள் என்றுதான் கேள்விப் பட்டிருக்கிறேன். விமான நிலையத்தில் எங்களைக் கடந்து போன அரபிகள் எல்லோரிடமும் அப்படித்தான் ஆளைத் தூக்கியடிக்கும் ஏதோவொரு நறுமணம் வீசிக்கொண்டிருந்தது.

தினந்தோறும் அத்தர் பூசும் அரபியின் மூத்திரத்திலிருந்து தான் புதியவகை ஸ்பிரேக்கள் தயாரிக்கிறார்கள் என்று சற்று முன்னால் தான் ஹக்கீமிடம் நான் பரிகாசமாகச் சொல்லியிருந்தேன்.

ஆனால் என்னவென்று தெரியவில்லை. எங்கள் அர்பாபுவிடமிருந்து நறுமணத்துக்குப் பதிலாக ஒரு கெட்ட வீச்சமே வீசிக்கொண்டிருந்தது. இனம் புரியாத ஒரு முடை நாற்றம். அது போலவே அங்கு நடமாடிக் கொண்டிருந்த எல்லா அரபிகளுமே நல்ல சுத்தமான ஆடைகளில் காட்சியளிக்க, எங்கள் அர்பாபுவோ அழுக்கடைந்து கசங்கிய உடையிலிருந்தார்.

எப்படியானால் என்ன? எனக்கும் ஒரு அர்பாபு கிடைத்துவிட் டாரே அது போதும். இப்போது நானும் ஒரு கல்ஃப் மலையாளி ஆகிவிட்டேன். எனக்கும் சொந்தமாக ஒரு அர்பாபு இருக்கிறார். எனது கனவுகளின் பாதுகாவலன் இதோ என் கண்முன்னால் நடந்து கொண்டிருக்கிறார். எனது ஆசைகளையெல்லாம் நிறைவேற்றித்தரும் என் கண்கண்ட தெய்வம் – என்னுடைய அர்பாபு.

அர்பாபு என்னும் அந்த சொல்லை அப்போது நான் விரும்பியது போல் இந்த உலகில் வேறொரு சொல்லை யாராவது அந்த அளவுக்கு விரும்பியிருப்பார்களா...?



இதுபோலொரு மோசமான வண்டியை நான் பார்த்ததேயில்லை. அதன் கதவு, பேனட், மேற்கூரை எல்லாமே துரு ஏறி உதிர்ந்து போய்க் கிடந்தது. காரின் கதவுகள் பூட்டுகளுக்குப் பதிலாக கயிற்றால் கட்டப்பட்டிருந்தன. உட்காரும் சீட்டில் குஷன்கள் பிய்ந்துபோய் சுருள் ஸ்பிரிங்குகள் பல்லிளித்துக்கொண்டிருந்தன.

நாங்கள் வண்டியின் பக்கத்தில் போனதுமே அர்பாபு ஓடிவந்து என் கையிலிருந்த பையைப் பறித்து வண்டிக்குள் அலட்சியமாக தூக்கியெறிந்தார்.

'ஐயோ, அர்பாபு! என்னுடைய உம்மா தந்துவிட்ட மீன் ஊறுகாய். என்னுடைய ஸைனுவின் எலுமிச்சை ஊறுகாய்...' எனக்கு தொண்டை அடைத்தது.

இதைப் பார்த்துக்கொண்டிருந்த ஹக்கீம் அவனுடைய பையை பறிப்பதற்கு முன்னால் தானே முந்திக்கொண்டு ஓடிப்போய் அதை வண்டியில் வைத்தான். அவனுடைய பையில் ஊறுகாய், தேங்காய் எண்ணெய் என்று ஏகப்பட்ட பாட்டில் சமாச்சாரங்கள் இருந்தன.

வண்டியைச் சுற்றி வந்த அர்பாபு வேகமாகப்போய் டிரைவர் சீட்டில் உட்கார்ந்தார். சொல்லப்போனால் வண்டிக்குள் டிரைவரைத் தவிர மேலும் ஒருவருக்கு மட்டுமே இடம் இருந்தது. அதில் நானும், ஹக்கீமும் எப்படி...?

ம்.. எப்படியாவது நெருக்கிப் பிடித்து உட்கார்ந்துவிட வேண்டியது தான். கதவை திறக்க கைப்பிடியில் கை வைத்ததுதான் தாமதம், அர்பாபு உரத்த குரலில் ஏதோ சொல்லி அலறினார்.

திடுக்கிட்ட நான் சட்டென்று கையை பின்னுக்கிழுத்தேன். வண்டியின் பின்பக்கமாக கைகாட்டி அர்பாபு ஏதோ சொன்னார். எதுவுமே புரியாமல் நான் கார்க் கதவின் பக்கத்திலேயே நின்று கொண்டிருந்தேன்.

அர்பாபு மறுபடியும் கைகாட்டிக்கொண்டே 'யா அல்லா...!' என்று உரக்க சத்தமிட்டார். பின் கடுங்கோபத்துடன் கதவைத் திறந்து கொண்டு வந்து என் கையைப் பிடித்திழுத்து வண்டியின் பின் பக்கமிருந்த திறந்த டிக்கிக்குள் நெட்டித் தள்ளினார்.

நடப்பதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த ஹக்கீமும் வேகமாக ஓடிவந்து வண்டியின் பின்னால் ஏறிக்கொண்டான்.

வண்டி ஒரு பெரிய உறுமலுடன் சீறிப்பாய்ந்தது.

திறந்த அந்த டிக்கிக்குள் ஒன்றிரண்டு அலுமினியப் பாத்திரங்களும், புல்கட்டுகளும், சில கோணிப்பைகளும் சிதறிக்கிடந்தன. வண்டியின் ஓரத்திலிருந்த கம்பியைப் பிடித்துக் கொண்டு எப்படியோ பேலன்ஸ் செய்து நாங்கள் டிக்கிக்குள் உட்கார்ந்தோம். வண்டி அரதப் பழசாக இருந்தாலும் நல்ல வேகத்துடன் சென்றது. ஆனால் அதன் உறுமலும், குலுக்கலும்தான் சகிக்க முடியவில்லை.

ஆனால் விமான நிலையத்திலிருந்து வெளியே வந்து, பிரதான சாலைக்குள் நுழைந்தபோதுதான் தெரிந்தது வண்டியின் உண்மையான லட்சணம். நூற்றுக்கணக்கான வண்டிகள் அதை சர்வ சாதாரணமாக கடந்து போய்கொண்டிருந்தன. அர்பாபுவின் வண்டியிலிருந்து வெறும் கரும் புகை மட்டுமே சீறிக்கொண்டிருந்தது.

கல்ஃப் தெருக்களில் என் முதல் பயணம் ஒரு திறந்த டிக்கிக்குள் ஆகிப்போனதே என்னும் வருத்தம் ஒருபுறமிருந்தாலும், ஒரு விதத்தில் அது எனக்கு சந்தோஷத்தையே தந்தது. அதனால்தானே சாலையின் இருபக்கமும் இப்படி வரிசையாக நின்று கொண்டிருக்கும் இந்த உயரமான கட்டிடங்களை அவற்றின் ஒரு சிறு அம்சம் கூட விட்டுப்போகமால் முழுமையாக பார்க்க முடிகிறது.

அர்பாபுவுடன் காரின் முன் சீட்டில் இருந்திருந்தால் இப்படி கல்ஃபின் முழு பிரம்மாண்டத்தையும் என்னால் பார்த்திருக்க முடியுமா? நாங்கள் போய்க்கொண்டிருந்த போதே இருட்டி விட்ட தால், டிக்கிக்குள் இருந்த எங்களை எவருமே கவனிக்கவில்லை.

அந்த டிக்கிப் பயணம் எத்தனை மணி நேரமாக நீண்டிருந்ததென்று என்னால் சரியாகச் சொல்ல முடியவில்லை. சற்று நேரத்தில் நகரத் தின் பிரகாசம் மெதுவாக குறையத் தொடங்கியது. நீண்ட பாதைகள் நாங்கள் நகரத்தை விட்டு வெளியேறிக்கொண்டிருக்கிறோம் என்பதை சொல்லாமல் சொல்லின.

எங்களை கடந்து செல்லும் வாகனங்களின் எண்ணிக்கையும் மெது வாக குறையத் தொடங்கியது. சாலையில் ஆங்காங்கே சில நியான் விளக்குகள் மட்டுமே கண் சிமிட்டிக்கொண்டிருந்தன. சற்று நேரத்

திற்குப்பின் எங்கள் வண்டி நெடுஞ்சாலையிலிருந்து பிரிந்து குண்டும் குழியுமான சிறிய சாலைக்குள் திரும்பியதை நான் உணர்ந்தேன். தொலைவில் எங்கோ சிறு வெளிச்சம் மின்னி மறைந்து கொண்டிருந்தது.

இதற்கிடையே நான் எப்போதோ ஹக்கீமின் பக்கம் திரும்பிப் பார்த்த போது அவன் உட்கார்ந்த நிலையிலேயே உறங்கிப் போயிருந்தான். பயணக் களைப்பு. பாவம் அவன் உறங்கட்டும். இப்போது வண்டி குறுகிய பாதையிலிருந்து விலகி புழுதி மண்பாதைக்குள் இறங்கி விட்டிருந்தது. வெளிச்சமேயில்லை. எங்கும் கும்மிருட்டு. புழுதியைக் கிளப்பியபடியே வண்டி மண் குன்றுகளின் மீது சீறிப் பாய்ந்தது.

விமானத்தில் வைத்து எப்போதோ குடித்த ஒரு குவளைத் தண்ணீர் தான் இதுவரையிலான அன்றைய எனது ஆகாரம். ஏதாவது சாப்பிட்டு விட்டு போ என்று சசி எவ்வளவோ வற்புறுத்தியபோதிலும் அன்றைய காலைநேர பயணப் பரபரப்பில் எனக்கு சாப்பிடவே தோன்றவில்லை.

விமானத்தில் பலவகையான உணவுகள் வந்து கொண்டிருந்த போதும், அவற்றை எப்படிச் சாப்பிடுவது எனத் தெரியாததால் ஒரு கப் தண்ணீர் மட்டும் குடித்து நான் பசியை அடக்கிக் கொண்டேன். இப்போது பசி வயிற்றைக் கிள்ளுகிறது. ஒரு தடவை ஆற்றில் முங்கி வெளியே வந்தால் ஏற்படுமே அது போன்றதொரு அகோரப்பசி.

விமான நிலையத்தில் வைத்து நான் பசியைப்பற்றி பேசிக்கொண்டிருந்த போது 'பசியால் நான் இப்போதே செத்துப்போய்விடுவேன்' என்று புலம்பிக்கொண்டிருந்தான் ஹக்கீம்.

'ஐயா அர்பாபு! கொஞ்சம் வண்டியை நிறுத்தி எங்களுக்கு சாப்பிட ஏதாவது வாங்கித் தாருங்களேன். குடிக்க ஒருவாய்த் தண்ணீராவது தாருங்கள்' என்று உரக்க சத்தமிடத் தோன்றியது.

ஆனால் சத்தம் தொண்டைக்குள்ளேயே சிக்கிக் கொண்டது.

மனம் முழுக்க பயம். நான் அப்படி கேட்பது அர்பாபுவுக்கு பிடிக்காமல் போய்விட்டால் என்ன செய்வது? மட்டுமல்ல அங்கே அந்த கனத்த இருட்டைத் தவிர வேறெதுவும் இருப்பதற்கான அறிகுறிகளே இல்லை.

வண்டி மண்பாதைக்குள் சஞ்சரிக்கத் தொடங்கி ஒரு மணி நேரத்திற்கும் மேலாகியிருக்க வேண்டும். வண்டியின் குலுக்கலில் எனக்கு முதுகு வலிக்கத் தொடங்கியது. மூச்சு விடவே சிரமப்படும் அளவுக்கு ஒரே தூசிப்படலம். 'கடவுளே! என்ன பயணம் இது?' என்னையுமறியாமல் நான் புலம்பினேன்.

அந்தக் கணம் முதல் இனம்புரியாத ஏதோவொரு பீதி, ஒரு குளவியைப் போல் என்னைச் சுற்றி வட்டமடிக்கத் தொடங்கியது. காரணமில்லாத ஏதோவொரு சந்தேகம் என் மனதைப் பிடித்து உலுக்கியது.

நான் ஆசைப்பட்டிருந்த, நான் கனவு கண்டிருந்த கல்ஃப் அல்ல இது என்றொரு நினைப்பு அடிமனதை அரிக்கத் தொடங்கியது. இது நிச்சயமாக நான் கேள்விப்பட்டிருந்த கல்ஃப் இல்லை. எங்கோ எதுவோ பிசகி விட்டது.

குழப்பத்தால் எனக்கு மூச்சு வாங்கியது. என்னுடைய சந்தேகத்தை ஹக்கீமிடம் சொன்னால் என்ன? ஆனால் அவனோ உறங்கிக் கொண்டல்லவா இருக்கிறான்? வேண்டாம் அவனை எழுப்ப வேண்டாம். அவன் உறங்கட்டும். மட்டுமல்ல என்னுடைய புலம்பலைக் கேட்டு ஒரு வேளை அவன் அங்கேயே தனது புலம்பலை ஆரம்பித்துவிடக் கூடும்.

மணி என்னவாச்சு என்று அறிய வழியேதும் இல்லை. சசியிடம் வாட்சைக் கழற்றி கொடுத்த அந்த நேரத்தை சபித்தேன். பொல்லாத நேரம்... போகும் போது போய்ச்சேருவோம். அப்படியே இந்த மணியைத் தெரிந்து கொண்டுதான் இப்போ என்ன ஆகப்போகிறது?

என்னுடைய அர்பாவுவின் வண்டியில்தானே நான் போய்க்கொண்டிருக்கிறேன். அவருடைய கையில் என்னுடைய வாழ்க்கை பாதுகாப்பாகவே இருக்கிறது. பின் ஏன் நான் அனாவசியமாக நேரத்தை நினைத்து கவலைப்படவேண்டும்.? வண்டியின் மூலையில் கிடந்த ஒரு புல் கட்டை இழுத்து தலைக்கு வைத்துக்கொண்டு நான் மெதுவாகப் படுத்தேன்.

தலைக்கு மேலே நட்சத்திரங்கள் நமது வெளிச்சக் கதவை மூடிக் கொண்டு உறங்கப்போயிருந்தன. இருண்ட அந்த ஆகாயத்தையே வெறுமையுடன் பார்த்துக்கொண்டு எத்தனை நேரமாக நான் அப்படியே கிடந்தேன் என்று தெரியவில்லை. வண்டியின் இரைச்சலும் குலுக்கலும் எனக்குத் தாலாட்டாயின. சற்று நேரத்தில் நான் அப்படியே கண்ணயர்ந்தேன்.



அர்பாபு என்னைத் தட்டி எழுப்பியபோது தான் நான் திடுக்கிட்டு எழுந்தேன்.

கண்ணைத் திறந்து பார்த்தபோது சுற்றிலும் இருள். வெறும் இருள் மட்டுமே. எங்கே வந்து சேர்ந்திருக்கிறோம் என்று ஒரு பிடியு மில்லை. கண், இருட்டுக்கு பழகி வர சற்று நேரம் பிடித்தது. ஹக்கீமோ அப்போதும் அடித்துப் போட்டது போல் உறங்கிக்கொண்டிருந்தான்.

அப்போது அர்பாபு கோபத்துடன் வண்டியின் கம்பிக் கதவில் படபடவென்று வேகமாகத் தட்டினார். அந்த சத்தத்தைக் கேட்டு ஹக்கீம் வாரிச்சுருட்டிக் கொண்டு எழுந்தான்.

கீழே நின்ற அர்பாபு வண்டியிலிருந்து இறங்குமாறு சைகை செய்தார். என்னுடைய பெட்டியைத் தேடிப்பிடித்து நான் இறங்கத் தொடங்கிய போது, 'நீயல்ல, ஹக்கீம்!' என்று அர்பாபு கை காட்டினார். தூக்கக் கலக்கத்துடனிருந்த ஹக்கீமுக்கோ ஒன்றுமே புரியவில்லை.

அர்பாபுவோ வெறிபிடித்த காட்டுப்பூனையைப் போல் காச் மூச்சென்று என்னவெல்லாமோ கத்தினார்.

ஐயா அர்பாபு! பாவப்பட்ட ஜென்மங்கள் நாங்கள். உலகம் தெரியாத இரண்டு அப்பாவிகள். எங்களிடம் இப்படி கோபத்தைக் காட்டினால் நாங்கள் என்ன செய்வோம். உங்களுக்குத் தெரியுமா பசி எங்கள் வயிற்றைக் குடைகிறதென்று. தாகமோ நெஞ்சை வறட்டு கிறது. எதுவுமே சாப்பிடாமல் முழுப்பட்டினியாக நாங்கள் ஒரு நாள் கூட கிடந்ததில்லை.

ம்... நல்ல வரவேற்புதான். இல்லையென்றாலும் நாங்கள் ஏன் இப்படி எங்கள் அர்பாபுவின் மேல் குறைபட்டுக்கொள்ளவேண்டும். அவருக்கும் இருக்குமே எங்களைப் போலவே களைப்பும், பசியும்,

தாகமும். ஏர்போர்ட்டிலிருந்து எங்களைக் கூட்டிக்கொண்டு வருவதற்காக அவர் எத்தனை மணிநேரத்திற்கு முன்பாக புறப்பட்டிருக்க வேண்டும்.

நாங்களாவது விமானத்தில் பறந்து வந்தோம். அவரோ இங்கிருந்து ஏர்போர்ட்டுக்கும், அங்கிருந்து இங்குமாக எத்தனை தொலைவு இந்த அரதப்பழைய வண்டியை ஓட்டிக்கொண்டு வந்திருக்கிறார். எவ்வளவு களைப்பாக இருந்திருக்கும். மட்டுமல்ல விமானத்திலும், வண்டியிலுமாக நாங்கள் சற்று நேரமாவது உறங்கியிருக்கிறோம். அவரோ ஒரு நிமிடம் கூட கண் அயரவில்லையே. எங்களை எங்காவது ஓரிடத்தில் கொண்டுபோய் சேர்த்த பிறகுதான் அவர் ஒரு வாய் தண்ணீர் குடிக்கவோ, ஏதாவது சாப்பிடவோ, சற்றே முதுகை சாய்க்கவோ செய்வார் போலும். பாவம்! கோபப்படுங்கள் அர்பாபு, உங்களுக்கு திருப்தி வரும் வரை எங்கள் மீது கோபப்படுங்கள். வண்டி நின்றதுகூட தெரியாமல் உறங்கிப்போன நாங்கள்தான் குற்றவாளிகள்.

அப்போது ஹக்கீம் தன்னுடைய பெட்டியையும் தூக்கிக்கொண்டு வண்டியிலிருந்து கீழே குதித்தான். நாங்கள் வந்திருப்பது புல் பூண்டு எதுவுமற்ற வெறும் வெட்டவெளி என்று எனக்குத் தோன்றியது. கண்ணுக்கெட்டிய தூரம் வரை கட்டிடங்களோ, மரங்களோ எதுவுமில்லை. தொலை தூரத்தில் இருண்ட ஆகாயத்தில் வரைந்த வரைபடம் போல ஒரு குன்றோ, பாறையோ ஏதோவொன்று சரிந்து நிற்பது மங்கலாகத் தெரிந்தது.

'கடவுளே! நான் எங்கே வந்து சேர்ந்திருக்கிறேன்!' என் நெஞ்சில் ஒரு பந்து வந்து அடைத்தது.

அந்த இருட்டுக்குப் பழக்கப்பட்டவர் போல அர்பாபு வேகமாக நடக்கத் தொடங்கினார். தயங்கித் தயங்கி ஹக்கீமும் பெட்டியுடன் அவர் பின்னால் நடந்தான்.

ஐயோ! என்ன இது? நானும் ஹக்கீமும் ஓரே கம்பெனியில் அல்லவா வேலை பார்க்க வந்திருக்கிறோம். நாங்களிருவரும் ஒன்றாகத் தானே போக வேண்டும்...? பின் ஏன் இந்த அர்பாபு என்னை மட்டும் இந்த வண்டியிலேயே இருக்கச்சொன்னார்?

இந்த நடுராத்திரியில் அவர் ஹக்கீமை எங்கே கூட்டிக்கொண்டு போகிறார்? கடவுளே அவனுடைய அம்மா என்னை நம்பியல்லவா அவனை அனுப்பியிருக்கிறாள். இப்போது நான் என்ன செய்வேன்?

'ஏ, சண்டாளா!, நீ அந்த அப்பாவியை எங்கே கூட்டிக்கொண்டு போகிறாய்?' ஏதோவொரு முடிவுக்கு வந்தவனாய் நான் வண்டியிலிருந்து கீழே குதித்தேன். பின்பு என்னுடைய பெட்டியையும் தூக்கிக்கொண்டு அவர்களின் பின்னால் ஒரே ஓட்டமாக ஓடினேன்.

அர்பாபு ஒரு தடவை திரும்பிப் பார்த்தார். அந்த அடர் இருட்டிலும் அவர் கண்கள் கோபத்தால் சிவந்து தகிப்பதைப் பார்க்க முடிந்தது.

நான் மலையாளத்தில் அவரிடம் என்னவெல்லாமோ கேள்விகள் கேட்டேன்.

அவரோ மிகுந்த கோபத்துடன் என்னை மீண்டும் வண்டிக்கு விரட்டினார். நான் பிடிவாதமாக போக மறுத்தேன்.

சட்டென்று அவர் தன்னுடைய இடுப்பில் சுற்றியிருந்த பெல்ட்டை உருவி வானத்தில் அங்குமிங்குமாகச் சுழற்றினார்.

காற்றில் மோதி அது எழுப்பிய ஷ்ஷ்... என்ற இரத்தத்தை உறைய வைக்கும் சத்தத்தில் நான் நடுங்கிப் போனேன்.

பின்னர் வேறு வழியெதுவும் தெரியாமல் நான் மீண்டும் வண்டிக்கே திரும்பினேன்.

எந்த கும்மிருட்டிலும் வெட்ட வெளிக்கென்று ஒரு வெளிச்சமுண்டு. வானத்திலும் பூமியின் பல முனைகளிலும் பட்டுத்தெறித்தது போக மிச்சமிருக்கும் ஒரு வெளிச்சக்கீற்று.

அந்த வெளிச்சத்துக்கு கண் பழக்கப்பட்ட போது என்னால் சற்று தொலைவு வரை பார்க்க முடிந்தது. கம்பி வேலியால் சுற்றப்பட்டிருந்த ஒரு மணல் வெளியின் இரும்பு கேட்டிற்கு முன்னால் அர்பாபு நின்று கொண்டிருக்கிறார்.

தன் நீண்ட அரபி சட்டையின் பாக்கெட்டிலிருந்து ஒரு சாவியைத் தேடியெடுத்து கேட்டைத் திறந்தவர், ஹக்கீமையும் கூட்டிக்கொண்டு உள்ளே போனார். உள்ளே என்ன நடக்கிறது என்று அறிய பயம் கலந்த ஆர்வம் என்னை உந்தித் தள்ளினாலும், உள்ளே பார்க்கும் அளவுக்கு வானத்தில் வெளிச்சமில்லை.

அந்த இடத்தில் என்னால் மிகச்சரியாக இனம் கண்டுபிடிக்க முடிந்தது ஒன்றேயொன்றைத்தான். இதுவரை நான் நுகர்ந்தறியாத என்னவென்றே புரியாத ஏதோவொரு வீச்சம். அர்பாபுவிடமிருந்து வெளிப்பட்ட அதே நாற்றம்.

ஒரு வறண்ட பாலைவனத்தின் வழியாகத் தான் நான் இத்தனை நேரமாக பயணம் செய்து வந்திருக்கிறேன் என்று எனது சாமானிய புத்திக்குக் கூட தெரிந்திருந்தது.

அப்படியானால் இது பாலைவனத்தின் வாடையா? பாலை வனத்துக்கென்று அப்படியொரு தனி வாடையுண்டா...? சலனமற்ற ஆழ்கடலுக்கு அப்படியொரு தனி வாடையுண்டென்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அது போன்றது தானா இதுவும்...?

அந்த சுற்றுப்புறம் முழுவதுமே அந்த வீச்சம் வியாபித்து நிற்கிறது. வண்டி வந்து நின்றதிலிருந்தே நான் அதை கவனிக்கிறேன். தொடக்கத்தில் இது வண்டியின் அழுக்குச் சக்கரங்கள் கிளப்பிய புழுதி வாடை என்று தான் நினைத்துக்கொண்டிருந்தேன்.

இப்போது அந்த வாடை எங்கிருந்து வருகிறது என்று எனக்கு மெதுவாக பிடிபட ஆரம்பித்தது. அர்பாபு ஹக்கீமையும் கூட்டிக்

கொண்டு போன அந்த கம்பி வேலிக்குள்ளிருந்துதான் அந்த முடை நாற்றம் கசிந்து வருகிறது.

எலும்புப் பொடியும், சாணமும் கலந்த ஒரு வகை நெடி. அப்படியானால் நாங்கள் எலும்புப்பொடி ஆலையில் வேலை செய்யவா வந்திருக்கிறோம்? ஆனால் இங்கே தொழிற்சாலைக்கான கட்டிடங்கள் எதுவுமேயில்லையே...? மெஷின்கள் எங்கே? எலும்புக் குவியல் எங்கே? உயரமான புகை போக்கிகள் எங்கே...? எதையுமே காணவில்லையே...!

அர்பாபுவின் வருகைக்காக நான் வண்டியிலேயே காத்திருந்தேன். அப்போது பயத்தால் என் உடல் நடுங்கிக்கொண்டிருந்தது.

ஏதோவொரு பெரிய ஆபத்தில் வந்து மாட்டிக்கொண்டோம் என்று உள்ளுணர்வு சொல்லிக்கொண்டேயிருந்தது.

அந்தச் சண்டாளன் அர்பாபுவின் கம்பிவேலிச் சிறைக்குள் ஹக்கீம் மாட்டிக் கொண்டதைப் போல, இதோ இன்னும் சிறிது நேரத்தில் நானும் உள்ளே போகப்போகிறேன். என்னை வேறு ஏதோவொரு சிறைக்குள் கொண்டு தள்ளுவதுதான் அவர் திட்டமோ? அதற்குள் இங்கிருந்து எப்படியாவது தப்பி ஓடிவிடவேண்டும். ஆனால் எங்கே போவது? சுற்றிலும் வெட்டவெளியைத் தவிர வேறெதுவுமேயில்லையே? அப்படியே தப்பி ஓடினாலும் கூட வழி தெரியாமல் இந்தப் பாலைவனத்துக்குள்ளேயே அலைந்து மடிய வேண்டியதுதான்.

இப்போதே தாங்காத பசியும் தாகமும். இப்படிப்பட்ட நிலையில் என்னால் எவ்வளவு தூரம்தான் வேகமாக ஓட முடியும்? ஓடிப்போக வேண்டும் என்னும் தவிப்பு ஒரு பக்கம். அதை செயல்படுத்தமுடியாத கழிவிரக்கம் மறுபக்கமாக நான் சோர்வுடன் வண்டிக்குள்ளேயே உட்கார்ந்திருந்தேன்.

சற்று நேரத்தில் அர்பாபு மட்டும் திரும்பி வந்தார். கேட்டை வெளிப்பக்கமாக பூட்டிக்கொண்டிருந்தவரை நோக்கி நான் வேகமாக ஓடினேன்.

'ஹக்கீம் எங்கே? அந்த சின்னப் பையன் எங்கே?'

அர்பாபுவோ பதிலெதுவும் சொல்லாமல் என்னைக் கடுமையாக ஒரு பார்வை பார்த்தார். பின்பு தன் வண்டியை நோக்கி வேகமாக நடக்கத் தொடங்கினார். அப்படிப் போகும் போதே அரபியில் ஏதேதோ சொல்லிக்கொண்டே போனார்.

எனக்கு எதுவுமே புரியவில்லை. திடீரென்று வண்டியை ஸ்டார்ட் செய்யும் சத்தம் கேட்டது. நான் வேகமாக ஓடிப்போய் அதன் பின்பக்கம் தொற்றிக் கொண்டேன்.

அதிக பட்சம் ஒரு கிலோ மீட்டர் தூரம் தான் போயிருக்கும். வண்டி நின்றது. கீழே இறங்கிய அர்பாபுவின் பின்னால் நானும் இறங்கினேன். அதுவும் ஒரு பொட்டல் வெளிதான்.

அர்பாபு சற்றுத் தொலைவிலிருந்து ஒரு கூடாரத்தை நோக்கி நடந்தார். என் பையை தூக்கிக் கொண்டு நானும் அவர் பின்னாலேயே நடந்தேன்.

பொட்டல் வெளியில் பரவி நின்ற வெளிச்சத்தைத்தவிர அந்த கூடாரத்தில் வேறு வெளிச்சமேயில்லை.

நாங்கள் கூடாரத்தை நெருங்கியபோது, அதற்குள்ளிருந்து அரபி உடையில் வேறொரு அர்பாபு வெளியே வந்தான்.

புராண அரபிக் கதையில் வரும் கன்னங்கரேலென்ற அர்பாபு. அவருடைய தோற்றமும் அவனிடமிருந்து வெளிப்பட்ட முடை நாற்றமும் எனது அர்பாபுவை விடவும் மோசமாக இருந்தது.

அவர்களிருவரும் அரபியில் தங்களுக்குள் ஏதோ பேசிக்கொண்டார் கள். பின் என்னை அந்த புது அர்பாபுவிடம் விட்டுவிட்டு என்னுடைய அர்பாபு வண்டியை நோக்கி நடந்தார்.

ஹக்கீமையும் இதுபோல் ஏதோவொரு அர்பாபுவிடம் தான் ஒப்படைத்திருப்பானோ? அப்படியானால் நல்லது. அவன் சூதுவாது அறியாத பையன். அவனை ஏதோவொரு இருட்டறைக்குள் கொண்டு போய் தள்ளிவிட்டானோ என்று நான் பயந்து போயிருந்தேன்.

கூடாரத்திற்கு சற்று தொலைவில் நீளமான கம்பி வேலிகள். ஹக்கீமை அடைத்து வைத்த கம்பி வேலிக்குள்ளேயிருந்து வீசிய அதே முடை நாற்றம்தான் இங்கேயும் வீசிக்கொண்டிருந்தது.

கம்பி வேலிக்குள் ஏதோ சில நிழலசைவுகள். அந்தத் திசையை நோக்கி கை காட்டி அரபியில் ஏதோ சொல்லிவிட்டு என்னுடைய புதிய அர்பாபு தனது கூடாரத்திற்குள் போய் மறைந்தான்.

அந்த கூடாரத்திற்கு பக்கச்சுவர்கள் எதுவுமேயில்லை. நான்கு பக்கமும் திறந்தே கிடந்தது. ஒரேயொரு கட்டிலைத் தவிர வேறெதுவும் அங்கிருப்பதாக தெரியவில்லை.

புதிய அர்பாபு அந்தக் கட்டிலில் போய் படுத்துக் கொண்டான்.

எனக்கு மிகுந்த வருத்தமாக இருந்தது. ஆனாலும் என்னுடைய அர்பாபுக்கள் இப்படியா இருப்பார்கள். கொஞ்சம் கூட ஈவு இரக்கம் இல்லாமல், இந்த நடு ராத்திரியில் இப்படி ஒரு கூடாரத்திற்கு முன்னால் என்னை நிறுத்திவிட்டு ஒரு வார்த்தை கூட பேசாமல் போய் விட்டார்களே.

நான் இப்போதுதான் முதன் முதலாக கல்ஃபுக்கு வருகிறேன் என்று கூடவா அவர்களுக்கு தெரியாது. நீ சாப்பிட்டாயா? உனக்கு தாகமாக இருக்கிறதா? பசிக்கு ஏதாவது வேண்டுமா? என்று ஒரு வார்த்தையாவது கேட்டிருக்கலாமே, ஒப்புக்காவது. நான் எங்கே போய் தங்குவது? என்னுடைய சக பணியாளர்கள் எவரையுமே அறிமுகம் செய்து வைக்கவில்லையே? இதுவா நான் அரபிக் கதைகளில் கேட்டிருந்த விருந்தோம்பல்...?

என்னுடைய அர்பாபுக்களே! நீங்கள் ஏன் இப்படி பாராமுகமாக இருக்கிறீர்கள்?

ஐயா ஏஜானர்களே! என்னை ஏமாற்றி விடாதீர்கள். நீங்கள் தான் என்னுடைய வாழ்க்கை. நீங்கள் தான் எனது கனவு. நீங்களே எனது எதிர்காலம்.

எத்தனை நேரமாக நான் அந்த இருட்டிற்குள்ளேயே அப்படியே நின்று கொண்டிருந்தேன் என்று தெரியவில்லை. என்னை விட்டுவிட்டு போன அர்பாபு எனக்குச் சாப்பிட ஏதாவது வாங்கி வருவானோ என்று நான் எதிர்பார்த்திருந்தேனோ...? இருக்கலாம்.

ஆனால் அங்கே அப்படியே நின்று கொண்டிருப்பதால் ஒரு பயனும் இல்லை என்று என் மண்டைக்குள் உறைத்த கணத்தில் கூடாரத்தி லிருந்த அர்பாபு கைகாட்டிய திசையை நோக்கி நான் மெதுவாக நடக்கத் தொடங்கினேன். என்னுடைய தங்குமிடம் அங்கு எங்கோதான் இருக்க வேண்டும்.

ஆனால் அர்பாபுவின் கூடாரத்தைத் தவிர அங்கு வேறு கட்டிடங் கள் இருப்பதற்கான அறிகுறியே இல்லை. சட்டென்று எனக்குள் பொறி தட்டியது. என்னுடைய அர்பாபுவே இந்தப் பாலைவனத்தின் நடுவில், நான்கு பக்கமும் திறந்து கிடக்கும் ஒரு பழைய கூடாரத்தில் தான் படுத்து உறங்குகிறார் என்றால், என்னுடைய படுக்கை...?

துக்கம் தொண்டையை அடைக்க நான் கம்பிவேலியை நோக்கி நடந்தேன்.

கம்பி வேலிக்கு உள்ளே சில நிழல் அசைவுகள், கனைப்பு சத்தம்.

திடீரென்று உள்ளேயிருந்து என்னுடைய வரவை தெரிந்து கொண்டு யாரோ அழுவதைப் போல ஒரு அழுகைச் சத்தம். ஒரு மெல்லிய சிணுங்கல் அழுகை.

கூர்ந்து கேட்ட போது... அது ஒரு ஆட்டின் அழுகைச் சத்தம்.

நான் கம்பி வேலிக்குள் உற்றுப் பார்த்தேன்.

ஆடுகள்! ஆடுகள்! நூற்றுக்கணக்கான ஆடுகள்! கடல் அலை போல் அசைந்து கொண்டிருக்கும் மிகப்பெரிய ஆட்டு மந்தை.

சட்டென்று என்னுடைய வேலையைப் பற்றிய ஒரு ஏகதேசக் கணக்கு என் மனதிற்குள் பிடிபட்டது. பயமும், பீதியுமாக நான் என் நெஞ்சைப் பிடித்துக்கொண்டேன்.

அந்த பீதியின் கனத்த நிழலில் நான் கம்பி வேலியின் ஓரமாக மீண்டும் முன்னோக்கி நடந்தேன். ரெண்டு மூன்று அடிகள் கூட எடுத்து வைத்திருக்க மாட்டேன். என் கண் முன்னால் கம்பிவேலி யோடு சேர்ந்து ஒரு கட்டில். அதில் ஒரு மனித உருவம் தலை குனிந்த படி இருக்கிறது. அதன் தோற்றத்தைப் பார்த்து நான் ஸ்தம்பித்துப் போனேன்.

# 9

அடிவயிற்றை அச்சம் கவ்வ நான் அந்த பயங்கர உருவத்தை நோக்கி மெதுவாக அடியெடுத்து வைத்தேன். பல வருடங்களாக அடர்ந்த காட்டிலேயே வாழும் காட்டுமிராண்டியைப்போல் அழுக்கும் சிடுக்குமான ஜடா முடி. வயிற்றையும் தாண்டி தொங்கிக் கொண்டிருந்த தாடி மயிர். கசங்கி சுருண்ட அரபி உடுப்பு. அருகில் போகவே அருவெறுப்பூட்டும் முடை நாற்றம்.

நான் வருவதைப் பார்த்த பிறகும் அந்த உருவத்திடம் எந்தவிதமான சலனமுமில்லை. அது சிலையா, சடலமா அல்லது உயிருள்ள மனிதனா...? ஒரு நிமிடம் நான் திகைத்தேன்.

திடீரென்று நான் சற்றும் எதிர்பார்க்காத விதத்தில் அந்த உருவத்திடமிருந்து ஒரு பெருஞ் சிரிப்பு வெடித்து உதிர்ந்தது. பலவீனமான ஒரு பெருஞ்சிரிப்பு! அந்தச் சிரிப்பின் அப்போதைய அர்த்தம் என்ன என்று அன்றும் சரி இன்றும் சரி, எனக்குப் புரியவேயில்லை.

அந்தச் சிரிப்புக்குப்பின் அவன் ஹிந்தியில் என்னிடம் என்னவோ கேட்டான். அஞ்சாம் கிளாஸுடன் படிப்புக்கு முழுக்கு போட்டிருந்தாலும், பிற்பாடு வாழ்க்கையில் ஹிந்தி படிக்கும் வாய்ப்பே எட்டிப் பார்க்காததாலும் அவன் பேசியது எதுவுமே எனக்குப் புரியவில்லை. ஒருவேளை ஹிந்தியை விடவும் எனக்கு அதிகம் புரியும் மொழி அரபியாகத்தான் இருந்திருக்க வேண்டும்.

ஆனால் அந்தப் பேச்சில் பரிதாபமும், வருத்தமும், கோபமும், பரிகாசமும் விரவியிருந்தது. அதில் விதியை நினைத்த அரற்றலும், புலம்பலும் கலந்திருந்ததை என்னால் புரிந்து கொள்ள முடிந்தது.

உணர்ச்சிகளுக்குத்தான் மொழி தேவையில்லையே!

சற்று நேரத்தில் வேரோடு சாய்ந்துவிழும் மரத்தைப் போல அவன் கட்டிலில் சாய்ந்தான். மல்லாந்து கிடந்த அவனிடமிருந்து, வெகு சீக்கிரத்திலேயே ஒரு நீண்ட குறட்டையொலி வெளிப்பட்டது.

நான் வந்து சேர்ந்திருக்கும் இடத்தைப் பற்றியும், நான் செய்ய வேண்டிய வேலையைப் பற்றியும் எனக்கு அப்போதே ஓரளவுக்கு புரிந்து விட்டது. ஒரு வருங்கால பயங்கரனாக மாறப்போகும் என்னை நான் நினைத்துப் பார்த்தேன். உடல் நடுங்கியது.

ஆனால் அதற்குள் நான் தப்பித்தாக வேண்டும். எங்கே போவது? எங்கேயாவது. எப்படித் தப்பிப்பது? எப்படியாவது. எப்போது? இப்போதே, இந்த நிமிடமே. கூடாரத்திற்குள் அர்பாபு உறங்கிவிட்டிருப்பான். இந்த பயங்கரனோ குறட்டை விட்டு உறங்கிக்கொண்டிருக்கிறான். என்னைக் கண்காணிக்க வேறு எவருமே இல்லை. இதுவே சரியான நேரம். ஓடு. உடனே ஓடு.

ஓடலாம்... ஆனால் எவ்வளவு தூரம் ஓடுவது...? எந்தப் பக்கமாக ஓடுவது? எந்த ஊரைப் பார்த்து ஓடுவது? எனக்கு எதுவுமே புரியவில்லை.

நகரத்திலிருந்து வண்டியில் நான் வந்த தூரமும், நேரமும், இப்போது நான் வந்து சேர்ந்திருக்கும் இடத்தைப் பற்றி பீதி மிகுந்த ஒரு மதிப்பீட்டை எனக்குள் ஏற்படுத்தியது. அச்சத்தால் உறைந்த நான் அங்கிருந்து தப்பித்துப் போகும் எண்ணத்தையே கைவிட்டேன்.

எதுவுமே புரியாமல் இரவு வளர்ந்து கொண்டே போனது. அந்தப் பாலைவனத்தின் இரவுக்காற்றில் ஆடிக்காற்றின் கூதலடித்தது. எனக்கோ தலை சுற்றி விழும் அளவுக்கு பயங்கரமான பயணக் களைப்பு.

பசியும், தாகமும்– வேண்டாம் அதைப்பற்றி இங்கு சொல்லாமலே இருப்பதுதான் நல்லது. ஊரிலோ ஒன்பது மணிக்கே தட்டைக் கழுவி விட்டு படுக்கையை விரித்து விடுவோம். இங்கோ...? படுக்கவோ, ஏன் உட்காரக் கூட இடமில்லாமல் அந்த வெட்டவெளிப் பாலைவனத் தில், அந்த நடு இரவில் நான் தன்னந்தனியனாய் தவித்து நின்றேன்.

கால் களைத்து சுளீரென்று வலிக்க ஆரம்பித்த போது தான், வேறு வழியே இல்லாமல், கையிலிருந்த பையை மெதுவாக பயங்கரன் படுத்துக் கிடந்த அந்தக் கட்டிலின் அருகே வைத்துவிட்டு அந்தப் பையின் மேலேயே உட்கார்ந்தேன்.

உம்மா தந்த, என் ஸைனு தந்துவிட்ட ஊறுகாய்கள் உள்ளே இருக் கின்றன என்ற நினைப்பு என் மனதிலிருந்து எப்போதோ ஆவியாகிப் போயிருந்தது. உட்கார்ந்தபடியே அந்த இடத்தை கவனமாக உற்றுப் பார்த்தேன்.

கம்பி வேலியைத் தொட்டு ஒரு பெரிய தண்ணீர் தொட்டி. அதைப் பார்த்ததும், என் உடல் சிலிர்த்தது. நான் அதை நோக்கி வேகமாக ஓடினேன். என் அதிர்ஷ்டம், அதில் தண்ணீர் பிடிப்பதற்காக சில டேப்புகள் பொருத்தப்பட்டிருந்தன. தாகமும், ஆசையும் விரட்ட

ஒரு பைத்தியம் போல் நான் அந்த டேப்பை பிடித்து திருகினேன்.

ஹா... அதிலிருந்து குளிர்ந்த தண்ணீர் பீச்சியடித்தது.

கைகளிரண்டையும் குவித்து நான் ஆசை தீர தண்ணீரை வாரி வாரி குடித்தேன். என் தாகம் தீரும் வரை! என் வயிறு நிரம்பும் மட்டும்!. இனி கிடைக்காமலே போய்விட்டால் என்ன செய்வது என்ற பீதியுடன், என் ஆயுள் முழுவதற்குமான தண்ணீரை மொத்தமாக அப்போதே குடித்துத்தீர்த்துவிடும் வெறியுடன், அந்த தண்ணீரை அள்ளிஅள்ளி குடித்துக்கொண்டேயிருந்தேன்.

அப்பாடா, அப்போது என் நெஞ்சில் பரவிய பரவசம்...!

கடவுளே, அதை எப்படி விவரிப்பது?

களைப்பால் நான் சற்று நேரம் அந்தத் தண்ணீர்த் தொட்டியின் அருகிலேயே விழுந்து கிடந்தேன்.

பின்பு மெதுவாக எழுந்து பயங்கரன் உறங்கிக்கொண்டிருந்த கட்டிலின் பக்கத்தில் போய் உட்கார்ந்தேன். சற்று நேரத்தில் களைப்பு கண்களை அழுத்த, அந்த வெற்றுப் பாலை மணலில் மெதுவாகச் சாய்ந்தேன். பையை தலைக்கடியில் வைத்தபோது விரக்தி நிறைந்த ஒரு சிரிப்பு எனக்குள் எட்டிப்பார்த்தது.

எத்தனை கனவுகள்...! ஏசி கார், ஏசி அறை, துரை மெத்தை, அதற்கு பக்கத்தில் டிவி... இப்போதைய என் நிலைமையில் சிரிப்பதைத் தவிர வேறென்ன செய்வது?

வேறெந்த கல்ஃப் மலையாளிக்கும் தனது வாழ்க்கையில், கனவுக்கும் வாழ்க்கைக்கும் இடையில் மிகப்பெரும் இடைவெளி உண்டென்று இத்தனை சீக்கிரம் புரிந்திருக்காது.

அப்படியாக கல்ஃபில் எனது முதலிரவு பரிகாசமும், பரிதாபமும் நிறைந்ததாக முடிந்தது.

ஒரே நேரத்தில் நூற்றுக்கணக்கான ஆடுகள் துள்ளிக் கொண்டும், கனைத்தபடியும் அங்குமிங்குமாக ஓடும் சத்தத்தைக் கேட்டு நான் கண்விழித்த போது விடிந்திருந்தது. நல்ல வெளிச்சம். ஆனாலும் வெயில் ஏறியிருக்கவில்லை.

நான் மணலிலிருந்து மெதுவாக எழுந்தேன். உடம்பு முழுவதும் ஒரே வலி. பாலைவனக் குளிர் தாங்காமல், ராத்திரி என்னையுமறியாமல், எப்போதோ நான் பையைத் திறந்து ஒரு போர்வை எடுத்து போர்த்தியிருக்கிறேன். அது மண்ணில் சுருண்டு கிடக்கிறது.

கட்டிலில் ராத்திரி பார்த்த பயங்கரனை காணவில்லை. அது என்னுடைய இரவு நேரக் கனவுதானோ என்னவோ?

நான் மெதுவாக கட்டிலின் மேல் ஏறியிருந்து சுற்றுமுற்றும் பார்த்தேன்.

ராத்திரி நான் நினைத்திருந்ததை விடவும் ஏராளமான ஆடுகள் அங்கேயிருந்தன. கம்பிவேலி வெகு தூரத்துக்கு நீண்டு கிடந்தது-

அதற்குள் தனித்தனியாக பிரிக்கப்பட்டிருந்த பட்டிகள். ஒவ்வொரு பட்டியிலும் நூற்றுக்கணக்கான ஆடுகள். அதற்கப்பால்... எல்லை யில்லாமல் பரந்து கிடக்கும் பாலைவனம். அது நீண்டு நீண்டு அடிவானத்தைத் தொட்டு நிற்கிறது.

அந்தக் காட்சிக்கு இடையூறாக ஒரு சின்னஞ்சிறு மரம் கூட அங்கில்லை. ஒரு பக்கத்தில் மட்டும் சற்றே பெரிய குன்று. மற்றபடி எங்கு பார்த்தாலும் இரண்டாள் உயரத்துக்கு மணல் குன்றுகள் மட்டுமே.

திடீரென்று எனது சந்தேகத்தை பொய்யாக்கிக் கொண்டு அந்த பயங்கரன் ஆட்டு மந்தைகளுக்குள்ளேயிருந்து வெளியே வந்தான்.

அப்போதுதான் அந்த உருவத்தை நான் முழுமையாக பார்த்தேன். உடம்பு முழுக்க அழுக்கு படை படையாக புற்று பிடித்து கிடந்தது. தலைமுடியும், தாடியும் அழுக்கில் புரட்டியெடுத்த மாத்துண்டுகளைப் போல நீளமாகத் தொங்கிக் கொண்டிருந்தன. குளித்து பல வருடங் களாகியிருக்க வேண்டும். கை நகங்கள் விகாரமாக வளைந்து அழுக் கேறி கறுப்பாக காட்சியளித்தது. உடுத்தியிருந்த உடை தண்ணீரைப் பார்த்து பல நூற்றாண்டுகள் ஆகியிருக்க வேண்டும்.

கையில் ஒரு அலுமினியப் பாத்திரம் தளும்ப பாலுடன் வந்த அந்த உருவம், அதிலிருந்து கொஞ்சம் பாலை எடுத்து என்னிடம் தந்துவிட்டு ஹிந்தியில் என்னவோ சொன்னது. பால், அடுப்பில் வைத்து காய்ச்சியது போல் அத்தனை சூடாக இருந்தது.

ஆட்டு முலைகளுக்கு இத்தனை சூடுண்டா என்று நான் ஆச்சரியப் பட்டுப்போனேன். நேற்றைய பசியும், தாகமும் விரட்ட 'சூடு பாலல்லவா, குடித்துக்கொள்' என்று தான் அது சொல்லியிருக்கும் என்று நினைத்த படியே நான் அந்த மொத்த பாலையும் ஒரே மூச்சில் குடித்து தீர்த்தேன்.

அதைப்பார்த்து திடுக்கிட்ட பயங்கரன் என் தலையில் ஒரு குட்டு குட்டியபடியே என்னவோ முணு முணுத்தான். பின் என்னிடம் எதையோ கோபமாகச் சொல்ல முயன்றான். ஆனால் அவையெல்லாம் மொழி என்னும் மதில் சுவரில் மோதி பயனற்று விழுந்த போது எரிச்சலுடன் மீண்டும் ஒரு பாத்திரத்தில் பாலை ஊற்றி, அதைக் கொண்டு போய் அர்பாபுவிடம் கொடுக்குமாறு சைகை செய்தான்.

பால் பாத்திரத்துடன் நான் அர்பாபுவின் கூடாரத்துக்குப் போனேன். அர்பாபு கட்டிலில் படுத்துக் கிடந்தான். அந்த பயங்கரனுக்கும் இவனுக்கும் அப்படியொன்றும் பெரிய வித்தியாசமில்லை. கசங்கிய உடுப்பு –நாற்றமடிக்கும் உடம்பு. குளித்ததற்கான அடையாளமே யில்லை.

என்னைப் பார்த்ததும் கட்டிலிலிருந்து எழுந்த அர்பாபு நீளமாக ஒரு கொட்டாவி விட்டான். பின் என்னிடமிருந்த பால் பாத்திரத்தை வாங்கி அதை ஒரே மூச்சில் குடித்து தீர்த்தான். குறைந்தது அஞ்சு லிட்டர் பாலாவது இருந்திருக்கும்.

பால் பாத்திரத்தை தந்துவிட்டு அர்பாபு என்னிடம் என்னவோ கேட்டான். வழக்கம் போலவே எனக்கெதுவும் புரியவில்லை. அவன் சொல்ல வந்ததை எனக்குப் புரிய வைக்க அவன் தன்னால் முடிந்த மட்டும் முயன்று பார்த்தான்.

ஆனால் அதன் ஒரு சிறு துளி கூட என் மண்டைக்குள் ஏறவில்லை. கோபத்துடன் தரையில் எட்டி உதைத்தான் அர்பாபு.

அதைப் பார்த்ததும் இதுவரை பல்லைக் கடித்துக்கொண்டு மனதுக்குள் பூட்டி வைத்திருந்த என்னுடைய துயரங்கள் எல்லாம் கண்ணீராய் அணை உடைத்து பாய்ந்தது.

நான் அர்பாபுவின் காலில் விழுந்து கதறி அழுதேன். இப்போது நினைத்துப் பார்க்கும் போது அன்று நான் ஏன் அப்படி நடந்து கொண்டேன் என்று எனக்குப் புரியவில்லை.

ஆனால் நான் தேம்பித் தேம்பி அழுதேன். அதுவரை என்னிடமிருந்த துயரங்கள், கோபம், பசி, தாகம் அனைத்தும் கண்ணீராய் வழிந்து கொண்டிருந்தன.

அழுகைக்கிடையே 'எனக்கு ஊருக்குப் போகணும், என்னால் இங்கே இருக்க முடியல்ல. நான் இந்த வேலைக்கொன்றும் வரவில்லை' என்று ஏதேதோ புலம்பினேன்.

அவையெதுவுமே அர்பாபுவுக்குப் புரியாது என்றபோதிலும், சொல்வது என்னுடைய கடமை என்ற ரீதியில் நான் புலம்பிக் கொண்டேயிருந்தேன்.

என்னுடைய புலம்பலைக் கண்டு அர்பாபு மனம் இரங்குவார் என்று நான் எதிர்பார்த்திருக்கலாம். ஆனால் அவனோ கோபத்துடன் கூடாரத்துக்குள்ளிருந்து என்னை பலமாக உதைத்து வெளியே தள்ளினான்.

நான் அழுது கொண்டே பயங்கரனின் கட்டிலை நோக்கி ஓடினேன். அந்த உருவமோ பரபரப்புடன் தனது வேலையிலேயே கண்ணும் கருத்துமாக இருந்தது. எதையுமே கவனிக்கும் நிலையில் நானில்லை. என்னுடைய மனதும், கண்ணும் அழுது கொண்டேயிருந்தது.

பயங்கரன் தன்னுடைய வேலைகளுக்கிடையே ஆட்டுக் கூட்டங்களுடன் வெளியே போகும் போதும், உள்ளே வரும் போதும் என்னிடம் என்னவோ சொல்லிக்கொண்டிருந்தான்.

அந்தக் குரலின் ஏற்ற இறக்கங்களிலிருந்து அது அங்குள்ள நிலைமைகளை எனக்கு புரிய வைக்கவோ, அல்லது என்னை சமாதானப் படுத்தவோ, இல்லை என்னுடைய துயரத்தில் பங்கு கொள்ளவோ சொல்லப்பட்டதுதான் என்று நான் புரிந்து கொண்டேன்.

ஆனால் அந்த நேரத்திலும் அந்த பயங்கரனின் முகத்திலும், பேச்சிலுமிருந்த உணர்ச்சியற்ற நிலையைப் பார்த்து நான் மிரண்டு போனேன்.

நேரம் மெதுவாக வெளுக்கத் தொடங்கியது. இளங்கதிர்கள் தான்

என்றாலும் சூரிய வெளிச்சத்தில் அப்போதே நல்ல சூடு. பயங்கரன் கம்பி வேலிக்குள்ளிலிருந்து ஆடுகளையெல்லாம் திறந்துவிட்டான். அவை என்னையும் சுற்றிக்கொண்டு துள்ளிக்குதித்து பாலைவனத்திற் குள் ஓடின. பயங்கரன் அவற்றைப் பின் தொடர்ந்தான். நான் மீண்டும் தனித்து விடப்பட்டேன்.

அப்போது நேற்றிரவு என்னை அங்கே இறக்கிவிட்டு போன என்னுடைய அர்பாபு ஒரு காரில் வந்து இறங்கினார். அது நேற்று நாங்கள் வந்த வண்டியைக் காட்டிலும் அழகான பெரிய கார். ஒரு பெரிய குடும்பமே வசதியாகப் போகும் அளவுக்கு பெரியது. நாங்கள் வந்த வண்டி அங்கே ஒரு ஓரமாக நிறுத்தியிருந்ததை அப்போது தான் நான் பார்த்தேன். நேற்றிரவு அர்பாபு இந்த வண்டியில் தான் திரும்பிப் போயிருக்க வேண்டும்.

என்னுடைய அர்பாபுவைப் பார்த்ததும் எனக்கு சற்று ஆறுதலாக இருந்தது. நான் அவரை நோக்கி ஓடினேன். நேற்று பார்த்த கோபக் களையெதுவும் அந்த முகத்தில் இல்லை.

ஆனால் அவரோ என்னைத் தெரிந்ததாகவே காட்டிக் கொள்ளாமல் காரின் டிக்கியிலிருந்து ஏதோ சில பொருட்களை எடுத்துக்கொண்டு கூடாரத்தை நோக்கி நடந்தார். வாலாட்டிக்கொண்டு போகும் ஒரு நாயைப்போல, நான் அவர் பின்னால் போனேன்.

பரஸ்பரம் கட்டியணைத்து வணக்கங்களை பறிமாறிக்கொண்ட அர்பாபுக்கள், பின்பு கொஞ்சம் நேரம் தமக்குள்ளேயே குசுகுசுவென்று ஏதோ பேசிக்கொண்டார்கள். இடையிடையே அவர்களுடைய பார்வை என்மீது விழுந்து போனதை வைத்து, பேச்சு என்னைப் பற்றித் தான் என்பதை நான் புரிந்துகொண்டேன்.

பின்பு இரவு நேர அர்பாபு கூடாரத்திலிருந்து ஏதோ சில பொருட் களை வெளியே எடுத்து வந்து டிக்கியில் வைத்தார். பின்னர் எனது அர்பாபுவுக்கு சலாம் சொல்லிவிட்டு வண்டியில் ஏறிப்பறந்தார்.

# 10

நெடுநேரமாக நான் கூடாரத்துக்கு வெளியே அழுது கொண்டு நிற்பதைப் பார்த்த அர்பாபு, கூடாரத்திலிருந்து வெளியே வந்து என் தோளில் தட்டி என்னை சமாதானப்படுத்தும் விதமாக ஏதேதோ சொன்னார். அது எனக்கு திருப்தியளிக்கவில்லை என்றாலும் அப்போதைக்கு என் அழுகை சற்றே ஓய்ந்தது.

ஏதோ ஞாபகம் வந்தவராக கூடாரத்துக்குள் திரும்பிப் போன அர்பாபு அங்கிருந்து சப்பாத்தி போலிருந்த ஏதோவொன்றை எடுத்து வந்து என்னிடம் தந்தார்.

'குபூஸ்', அர்பாபு சொன்னது என் காதில் தெளிவாகக் கேட்டது.

ஓ... இதுதான் குபூஸா...?

கல்ஃபிலிருந்து வருபவர்கள் ஆற்றங்கரையிலிருந்து தங்களது வீர பராக்கிரமங்களை பறைசாற்றும்போது இந்த குபூஸ் தவறாமல் அந்த பேச்சில் அடிபடுவதை நான் கேட்டிருக்கிறேன். குபூஸ்!

'சாப்பிட்டுப்பார்' அர்பாபு சைகை செய்தார்.

நானோ காலைக்கடன்கள் எதையுமே முடித்திருக்கவில்லை. இன்னமும் பல் கூட தேய்க்கவில்லை. குளிக்கவில்லை.

ஊரிலோ... ஆற்றில் ஒரு முங்கு முங்காமல், அது எத்தனை மழையாக இருந்தாலும் சரி, நான் ஒரு வாய் காப்பி கூட குடித்ததில்லை.

ஆனால் இங்கோ... என்னுடைய நீண்டகால பழக்க வழக்கங்களெல்லாம் என்னை விட்டு போவதற்கான துவக்க தினமாக இருந்தது அன்று.

காலையில் பல் தேய்க்கும் முன்பே ஒரு முழு பாத்திரம் பாலைக் குடித்திருக்கிறேன். ஒன்றரை நாள் பசியில் என் பழக்கங்களெல்லாம் என்னிடமிருந்து கரைந்து போயிருந்தன.

கூடாரத்துக்கு வெளியிலிருந்து குபூஸ் என்னும் அந்த புதிய பதார்த் தத்தை நான் ஆர்வத்துடன் பிய்த்து தின்ன ஆரம்பித்தேன். தொட்டுக் கொள்ளவோ, முக்கி சாப்பிடவோ எதுவுமில்லை; எனக்கெதுவும் தேவைப்படவுமில்லை.

அந்த குபூஸை காலையில் தான் சுட்டெடுத்திருக்க வேண்டும். இளம் சூடும் இனிப்புமாக இருந்தது. அதை ஒவ்வொரு முறை கடிக்கும் போதும் குபூஸ், குபூஸ்...! என்று என் மனம் உச்சரித்துக்கொண்டே யிருந்தது. நான்கைந்து குபூஸ்களை விழுங்கி முடித்த போது அந்த பெயர் என்றென்றைக்குமாக என் மனதிலும் வயிற்றிலுமாக உறைந்து போனது. குபூஸ்!

சாப்பிட்டு முடித்ததும் அர்பாபு ஒரு குவளை நிறைய தண்ணீர் கொண்டு தந்தார். நான் ஒரே மடக்கில் அதைக் குடித்து தீர்த்தேன். அர்பாபு மேலும் ஒரு குபூஸை எடுத்து என் முன்னால் நீட்டினார்.

நான் வேண்டாமென்று கையசைத்தேன். வயிறு நிறைந்ததும் மனம் திருப்தியடைந்தது. அர்பாபுவின் அன்பை நினைத்து நான் சந்தோஷப்பட்டேன்.

அப்போது பயங்கரன் மேய்ச்சல் முடிந்து ஆடுகளுடன் திரும்பி வந்தான். ஆடுகளையெல்லாம் பட்டிக்குள் அடைத்துவிட்டு கூடாரத் தின் முன்னால் வந்து நின்ற அவனிடமும் அர்பாபு சில குபூஸ்களை நீட்டினார்.

அவற்றையெல்லாம் வெறும் தண்ணீரில் முக்கி சில நொடிகளி லேயே தின்று தீர்த்தவன், அங்கிருந்த ஒரு பானை தண்ணீரையும் மடமடவென்று குடித்துவிட்டு எதுவுமே பேசாமல் எழுந்து போனான்.

சாப்பிடும் போது நான் அவன் முகத்தையே பார்த்துக்கொண்டி ருந்தேன். அதில் வேதனைகளும், துயரங்களும் உறைந்து கிடைந்த 'ஒரு வாழ்க்கை'யை மட்டும் என்னால் பார்க்க முடிந்தது. அவன் மறுபடியும் தன் வேலையைத் தொடர்ந்தான், ஒய்வு ஒழிச்சல் எதுவு மில்லாமல்.

அர்பாபு எழுந்து போய் வண்டிக்குள்ளிருந்து ஒரு அரபி உடுப்பை யும், ஒரு ஜோடி பூட்ஸையும் கொண்டு வந்து என்னிடம் தந்தார். உடுப்பை நான் மெதுவாக விரித்துப் பார்த்தேன். அதிலிருந்து கிளம்பிய மக்கிய வாடை எனக்கு வாந்தியை வரவழைத்தது. அந்த அளவுக்கு அரதப் பழசாக இருந்தது அது.

அர்பாபு என்னுடைய உடுப்பையும், பான்ட்ஸையும் தொட்டுக் காட்டி 'சீலாதி... சீலாதி...' என்று அரபியில் என்னவோ சொன்னார். ரெண்டு மூனு தடவை சொன்னபோதுதான் அவர் அதையெல்லாம் கழற்றி வைக்க சொன்னார் என்று எனக்குப் புரிந்தது. நான் மெதுவாக அவற்றைக் கழற்றிவிட்டு, மூச்சை இழுத்துப் பிடித்தபடியே அந்த 'புதிய' உடுப்பை அணிந்தேன்.

ஊரில் வாங்கிய புத்தம் புது தோல் ஷூவைக் கழற்றிவிட்டு, அந்த நாற்றம் பிடித்த பூட்ஸை காலில் போட்டேன். சுய நாற்றத்திற்கான முதல் கட்டம் அது என்று எனக்குப் புரிந்தது.

இதோ இங்கே, மேலும் ஒரு பயங்கரன் உருவாகப்போகிறான். எல்லாம் புரிந்திருந்தும், அர்பாபுவின் கட்டளையை மீற அப்போது எனக்குத் தோன்றவேயில்லை.

சற்று நேரத்திற்கு முன்னால் அர்பாபு எனக்குத் தந்த அந்த குபூஸின் மீதான நன்றிக் கடன்தான் அதற்கு காரணமோ என்னவோ?

அர்பாபு அந்த பயங்கரனைச் சுட்டிக்காட்டி அரபியில் ஏதோ சொன்னார். அதிலிருந்து 'மஸரா' என்னும் சொல் மட்டுமே எனக்கு பிடிபட்டது.

மஸரா என்றால் தண்ணீர் என்று அர்த்தப்படுத்திக்கொண்ட நான் ஒரு குடத்தையும் தூக்கிக்கொண்டு பயங்கரனின் பின்னால் போனேன்.

தண்ணீர் தொட்டியிலிருந்து தண்ணீர் பிடித்து ஆடுகளுக்கிடையே நடந்து போய் பட்டிக்குள்ளேயிருந்த ஒரு பெரிய தொட்டிக்குள் தண்ணீரை நிரப்பினோம்.

சுமார் மூன்று மீட்டர் நீளமும், ஒரு மீட்டர் அகலமும், முக்கால் மீட்டர் உயரமும் கொண்ட பெரிய சிமெண்ட் தொட்டி அது.

ஒவ்வொரு பட்டியிலும் நூறு ஆடுகளுக்கு குறைவில்லை. அப்படியாக பத்திருபத்தஞ்சு பட்டிகள். ஒவ்வொரு பட்டியிலும் ஒரு தண்ணீர் தொட்டி. இது போக பச்சைக் கோதுமைக்கென்று ஒரு தொட்டி, புல்லுக்கு ஒரு தொட்டி, வைக்கோலுக்கு ஒரு தொட்டி என்று ஆடுகளுக்கு வசதியாக ஏராளமான தொட்டிகள்.

முதல் பட்டிக்குள் தண்ணீரை நிரப்பி முடித்ததும் பயங்கரன் இரண்டாவது பட்டியிலிருந்து ஆடுகளைத் திறந்துவிட... அவை துள்ளிக் குதித்தபடியேவெளியே ஓடின. அவற்றைப் பின் தொடர்ந்து போவதற்கு முன் அந்த பட்டியிலிருந்த தண்ணீர்த் தொட்டியை என்னிடம் காட்டி, ஹிந்தியிலோ அரபியிலோ என்னவோ சொல்லிக் கொண்டு போனான். அதிலிருந்து 'மாயில்' என்னும் சொல் மட்டுமே எனக்கு பிடிபட்டது.

இப்போது எனக்கு சந்தேகம் வந்தது. மாயில்... என்றால் என்ன? குடமா... அல்லது தண்ணீரா? அப்படியானால் அர்பாபு சொன்ன மஸராவுக்கு என்ன அர்த்தம்? தண்ணீர் என்பது மாயிலா? மஸராவா...? எது சரி? எப்படியோ இருக்கட்டும். தண்ணீர் நிறைப்பது தானே நம்முடைய வேலை. அதையே செய்வோம்.

அவன் ஆடுகளைத் திரும்பக்கொண்டு வருவதற்கு முன்னால் நான் அந்த பட்டியிலுள்ள தொட்டியில் தண்ணீர் நிரப்பி விட்டேன்.

மூன்றாவது, நான்காவது தொட்டிகளிலும் அப்படியே தண்ணீரை

நிரப்பி வைத்தேன். அது அத்தனையொன்றும் எளிதான காரியமில்லை. தண்ணீர் சுமந்து சுமந்து என் கால்கள் சோர்ந்தன. உச்சி வெயில் மண்டையைப் பிளந்தது. தாகம் நாக்கை வறட்டியது.

பயங்கரன் அடுத்த பட்டியிலிருந்து ஆடுகளை வெளியே ஓட்டிக் கொண்டு போக ஆரம்பித்த போது அர்பாபு கூடாரத்திலிருந்து வெளியே வந்தார்.

பயங்கரனிடம் அரபியில் ஏதோ சொல்ல, அவன் எல்லாவற்றுக்கும் தலையசைத்தான்.

அதன் பின் என்னை நோக்கி வந்த அர்பாபு நீண்ட ஒரு கம்பை என் கையில் தந்தார்.

நான் இரு கையையும் நீட்டி அதை வாங்கினேன்.

ஒரு ஆட்டிடையனுக்கான பதவியேற்பு சடங்குதானோ அது?

நாங்களிருவருமாகச் சேர்ந்து ஆடுகளை அந்த பரந்த மணல் பரப்புக்குள் விரட்டினோம். கொஞ்சம் தூரம்தான் நடந்திருப்போம், அதற்குள் அர்பாபு கைதட்டி என்னை மட்டும் திரும்பி வருமாறு அழைத்தார்.

கூடாரத்துக்குள் நுழைந்த என் கையில் ஏதோவொரு பொருளை வைத்தார். நான் அதை அப்படியும் இப்படியுமாக திருப்பிப் பார்த்தேன். அதுவொரு பைனாகுலர் என்று என் அறிவுக்கு புலப்பட்டது.

அர்பாபு அதை ஏன் என் கையில் தரவேண்டும். ஒரு வேளை ஆடுகள் எங்காவது ஓடிப்போனால் அவற்றைக் கண்டுபிடிப்பதற்காக இருக்குமோ என்று நினைத்தபடியே நான் அந்த பைனாகுலருடன் ஆடுகளைப் பார்த்து நடக்கத் தொடங்கினேன்.

'சூஃப்...சூஃப்...' பைனாகுலர் வழியாக பார்க்குமாறு என்னை உற்சாகப்படுத்தினார் அர்பாபு.

எனக்கு ஆர்வம் தாங்கவில்லை. நான் இப்போதுதான் முதன் முதலாக ஒரு பைனாகுலரைப் பார்க்கிறேன்.

அதில் இரண்டு கண்களையும் வைத்து பார்த்த போது...

அப்பாடி! நான் ஆச்சரியப்பட்டு போனேன்.

எவ்வளவு தெளிவாகத் தெரிகிறது. பல கிலோ மீட்டர் தூரம் வரை தெளிவாகப் பார்க்க முடிகிறதே! தூரத்தில் புள்ளியாய் நின்ற ஆடுகளின் கழுத்து ரோமம் கூட தெள்ளத் தெளிவாகத் தெரிந்தது. பைனாகுலரால் அந்த பிரதேசம் முழுவதையும் ஒரு சுற்று சுற்றிப் பார்த்தேன். எனக்கு சந்தோஷமாக இருந்தது.

'சூஃப்...?' அர்பாபு கேட்டார்.

'நல்லாயிருக்கு' என்று நான் தலையசைத்தேன்.

அர்பாபு என் கையிலிருந்து பைனாகுலரை வாங்கி கூடாரத்துக்குள் கொண்டு போய் வைத்தார்.

அதன்பின் தலையணையை உயர்த்தி அதன் கீழிருந்து ஒரு இரட்டைக் குழல் துப்பாக்கியை வெளியே எடுத்தவர், கூடாரத்திலிருந்து வெளியே வந்து வானத்தை நோக்கி குறி பார்த்தார். மிக உயரத்தில் ஏதோவொரு பறவை வட்டமிட்டுக்கொண்டிருந்தது.

குறி பார்த்து விசையை ஒரு அழுத்து...

பறவை 'சொத்'தென்று தரையில் வந்து விழுந்தது.

ஒரு பயங்கர சிரிப்புடன் அர்பாபு என்னைப் பார்த்தார்.

நான் பயத்தால் உறைந்து போனேன்.

'ஶூஃப்...?' அர்பாபு மீண்டும் என்னிடம் கேட்டார்.

நான் 'சரிதான்' என்று தலையசைத்தேன்.

ஆடுகளுக்கு பின்னால் போகும்படி என்னை விரட்டினார், அர்பாபு.

தப்பிக்கவே முடியாதபடிக்கு என்னுடைய வாழ்க்கை அந்த ஆடுகளுடன் பின்னிப் பிணைக்கப்பட்டுவிட்டது என்று அந்த கணத்தில் எனக்குப் புரிந்து போனது.

# 11

எப்படியாவது அங்கேயிருந்து தப்பித்துவிடவேண்டும் என்ற என்னுடைய எண்ணத்தையெல்லாம் குழி தோண்டிப் புதைத்துவிட்டு, கால்கள் தள்ளாட விரிந்து கிடந்த அந்த பாலைவனத்தை நோக்கி நடந்தேன் நான்.

இப்போது நினைத்து பார்க்கும்போது அந்த நேரத்தில் என் மனம் முழுக்க வெறுமையே நிறைந்திருந்ததாகத் தோன்றுகிறது.

அதற்குள் பயங்கரன் ஆடுகளையும் விரட்டிக்கொண்டு வெகுதூரத்துக்குப் போய் விட்டிருந்தான். கண் முன்னால் விரிந்து கிடந்தது பாலைவனம். நான் கேள்விப்பட்டிருந்ததை விட, எப்போதோ சில சினிமாக்களில் பார்த்திருந்த பாலைவனங்களைவிட இது மிக வித்தியாசமானதாக இருந்தது.

பாலைவனம் என்று கேட்டவுடனேயே சட்டென்று நம் மனதில் அலையடிக்கும் மணலும், மணல் மேடுகளும்தானே தோன்றும்? ஆனால் இங்கோ அப்படியொரு மணல் பரப்பையே பார்க்கமுடியவில்லை. உறைந்து கெட்டிப்பட்ட மண், உருளைக் கற்கள்.

நம்முடைய கிழக்குப் பிரதேசங்களில் இதைப்போன்ற நில அமைப்பை சில இடங்களில் பார்த்திருக்கிறேன். ஆனால் அங்கெல்லாம் இது போன்ற கட்டாந்தரையிலும் கூட ஏதோ சில காட்டுக்கொடிகள் படர்ந்து கிடக்கும். இங்கோ மருந்துக்கு கூட பச்சையைப் பார்க்க முடியவில்லை.

தரிசாகக் கிடக்கும் மலட்டுப் பூமி!

பின் எதற்காகத்தான் இந்த ஆடுகளையும் விரட்டிக் கொண்டு நாங்கள் வெளியே போகிறோம்.?

தமது பூர்வ ஜென்ம வாசனையால் ஆடுகள் பூமியை மோந்து புல்தேடி அங்குமிங்குமாக அலைந்து கொண்டிருந்தனவே தவிர, அவற்றின் வாயில் எதுவுமே அசையாடவில்லை.

கொஞ்ச நேரத்தில் நான் பயங்கரனுக்கு அருகில் போய்விட்டேன். ஆடுகளை நடக்க விட்டுவிட்டு அங்கே கிடந்த ஒரு சிறிய கல்லின் மீது உட்கார்ந்திருந்தான் அவன்.

செய்வதற்கு ஒன்றுமேயில்லை, என்ன செய்வதென்றும் தெரியவில்லை. எதுவும் புரியாமல் நானும் சற்று தொலைவில் கிடந்த ஒரு கல்லில் போய் உட்கார்ந்தேன்.

'நல்ல சந்தர்ப்பம். இப்போதாவது இவனிடம் எதையாவது கேட்கலாமே!' எனத் தோன்றியது.

ஆனால் எந்த மொழியில் பேசுவது?

மொழியைத் தவிர என் கைவசமிருக்கும் ஒரே ஆயுதம் சைகை மொழிதான்.

ஆனால் அதைப்பார்ப்பதற்கு அவன் என் பக்கமாகத் திரும்ப வேண்டுமே. அவனோ வேறெங்கேயோ அல்லவா வெறித்துக்கொண்டிருக்கிறான்?

அவனுடைய பார்வை இந்த பூமியையும் வானத்தையும் கடந்து வெற்று சூனியத்திற்குள் போய் உறைந்து விட்டதாக எனக்குத் தோன்றியது.

சற்று நேரத்தில் அவன் எழுந்துபோய் அங்கங்கே சிதறிக்கிடந்த ஆடுகளையெல்லாம் விரட்டி ஒன்று சேர்க்க ஆரம்பித்தான். அது அத்தனையொன்றும் எளிதான காரியமாக இல்லை.

பத்தைம்பது ஆடுகள். அதில் ஒன்றை விரட்டும் போது மற்றொன்று வேறொரு திசைக்கு ஓடும். அதை அடித்துக் கொண்டுவரும் போது கூட்டத்திலிருந்து வேறொரு ஆடு மற்றொரு திசைக்கு தப்பியோடும்.

எப்படியோ ஒரு விதத்தில் அவற்றையெல்லாம் ஒன்று சேர்த்து பயங்கரன் தொழுவத்தை நோக்கி நடக்க ஆரம்பித்தான்.

இதுவரையில் அங்கே நடந்தவை எல்லாமே எனக்கு புதிதாகவே இருந்தது. அதனால் அன்று அங்கு நான் வெறும் பார்வையாளனாக மட்டுமேயிருந்தேன்.

ஆட்டுக்கிடைக்குள் நுழையுமுன்னால் அவன் ஹிந்தியில் என்னிடம் ஏதோ சொன்னான். 'நீ ஆடுகளை விரட்டிக்கொண்டு மஸராவுக்கு போ. நான் இதோ வந்துவிடுகிறேன்' என்று சொன்னதாக நான் யூகித்தேன்.

ஓ.... அப்போ மஸரா என்றால் ஆட்டுக்கிடையா!

அப்படியானால் 'மாயில்' என்றால் தண்ணீர்தான். அப்படியாக அரபிச் சொற்கள் ஒவ்வொன்றாக எனக்கு நெருக்கமாகத் தொடங்கின.

நான் ஆடுகளையெல்லாம் தொழுவத்தில் அடைத்தேன். அப்போது பயங்கரன் கொஞ்சம் புல்லுடன் வந்தான். நாங்களிருவருமாகச் சேர்ந்து வைக்கோல், கோதுமை, தண்ணீர் என்று எல்லாவற்றையும் மஸராவுக்குள் கொண்டு போய் வைத்தோம்.

நான் என்ன சொன்னேன்... 'மஸரா!' ஆமாம் மஸராதான். நான்தான் எத்தனை சீக்கிரமாக அரபி பேச ஆரம்பித்துவிட்டேன்.

அதன் பின்னால் நாங்கள் அடுத்த மஸராவுக்கு போய் அங்கிருந்த ஆடுகளையெல்லாம் பாலைவனத்துக்குள் விரட்டிக்கொண்டு போனோம். இப்படியாக ஒரு சில மஸராக்களிலிருந்து ஆடுகளை வெளியே கொண்டு போய் வந்தபோது எனக்கு விஷயம் யெல்லாம் புரிபட்டுவிட்டது.

இந்த ஆடுகளையெல்லாம் வெளியே கொண்டு போவது மேய்ச் சலுக்காக இல்லை. அவை காலாற நடக்கவேண்டும். அதற்காகத்தான். தொழுவத்திற்குள்ளேயே சோம்பலுடன் அடைந்து கிடக்காமல் கை, கால்களை வீசி நடக்கும் ஒரு காலை நேர உடற்பயிற்சி! அவ்வளவு தான்.

உச்சி வெயில் மண்டையைப் பிளந்து கொண்டிருந்தது. அந்த சூட்டிற்குள்ளேயே ஒவ்வொரு மஸராவிலிருந்தும் ஆடுகளை வெளியே நடக்கக் கொண்டு போய் வந்தோம். ஆடுகளுக்கெல்லாம் தீனியும் தண்ணீரும் கொடுத்தோம்.

அப்போது திடீரென்று எனக்குள் சகிக்க முடியாத ஒரு பிரளய உணர்வு. இயற்கை உபாதை! வயிற்றுக்குள் முட்டலும் மோதலுமாக ஒரே களேபரம்.

நேற்று விமானத்தில் ஏறுவதற்கு முன்னால் எப்போதோ போனது. அன்று சாப்பிட எதுவுமே கிடைக்காமல் பொழுது அப்படியே கழிந்தது. ஆனால் இன்று காலையில் ஒன்றிரண்டு குபூஸ்களை உள்ளே தள்ளியிருக்கிறேன். அவை தனது வேலையைக் காட்ட ஆரம்பித்து விட்டன.

ஆனால் எங்கே போய் 'காரியத்தை' முடிப்பது...!

எனக்கு நான்கு சுவர்கள் தான் வேண்டுமென்றில்லை. அப்படி பழகவும் இல்லை. ஊரிலோ ஆற்றங்கரையிலிருக்கும் புல் புதருக்குள் பதட்டமில்லாமல் ஒதுங்கலாம். காரியம் முடிந்து நிம்மதியாக கை கால் கழுவலாம்.

ஆனால் இங்கோ? எதற்குமே வழியில்லையே! எங்கு பார்த்தாலும் மல்லாந்து கிடக்கும் வெட்டவெளி.

எல்லோருமே செய்வதுதான். எல்லோருக்குமே தெரிந்த சங்கதிதான். என்றாலும் ஒரு சில விஷயங்களில் மனிதர்களான நமக்கு ஒரு மறைவு தேவைப்படுகிறதே!

இதைப்பற்றி உங்களிடம் விவரிக்க முதலில் எனக்கு தயக்கமாகவே

இருந்தது. ஆனாலும் முடிவில் இதைச் சொல்வதென்று தீர்மானித்தேன்

ஏனென்றால், நாம் வெகு சுலபமாகக் கருதும் சில விஷயங்கள் கூட, குறிப்பிட்ட சில சூழ்நிலைகளில் மனிதரை எப்படிக்கிடந்து அல்லாட வைக்கிறது என்பதைச் சொல்ல விரும்பினேன்.

இதுகூட இல்லையென்றால் இந்த கதையால்தான் என்ன பயன்...?

எல்லாம் சரிதான். ஆனால் இது அப்படியொன்றும் தடுத்து நிறுத்தக்கூடிய காரியமாகத் தெரியவில்லையே...?

ஒவ்வொரு நொடியும் வயிற்றுக்குள் பிரளயம் மூர்க்கமாகிக் கொண்டிருக்கிறது.

நான் மெதுவாக மஸராவின் எதிர்பக்கம் போனேன். இப்போது எனக்கும் அர்பாபுவுக்குமிடையே, எனக்கும் பயங்கரனுக்குமிடையில் ஆட்டு மந்தையின் ஒரு 'மறைவு' கிடைத்தது.

அவசரத்துக்கு இதுபோதும். எப்படியே ஒரு வழியாக நான் கண்ணை மூடிக்கொண்டு 'காரியத்தை' முடித்தேன்.

'அப்பாடா... இப்போதுதான் நிம்மதி.' இந்த உலகத்தில் கிடைப்பவனற்றுள் கிடைக்கும் மிகப்பெரும் ஆசுவாசம்.

நான் பூனையைப் போல் 'அதன் மீது' கொஞ்சம் கல்லையும் மண்ணையும் வாரிப்போட்டேன்.

இனி 'கால் அலம்ப' வேண்டுமே? அது அப்படியொன்றும் சிரமமான காரியமாகத் தெரியவில்லை. தொட்டியில் தண்ணீர் தாராளமாக கிடக்கிறது. பக்கெட்டில் கொஞ்சம் தண்ணீர் பிடித்து புல்கட்டிற்கு பின்னாலோ, வைக்கோல் போருக்கு பின்புறமாகவோ போய் கழுவிக் கொள்ளலாம்.

நான் பக்கெட்டில் கொஞ்சம் தண்ணீர் பிடித்துக்கொண்டு வைக்கோல் போர் பக்கமாக நகர்ந்தேன்.

என் பிட்டத்தில் ஒரு துளி தண்ணீர் விழுவதற்கு முன்பாகவே என்னுடைய பின்புறத்தில் சுளீரென்று ஒரு சாட்டையடி.

எதிர்பாராத அந்த அடியில் ஒரு நிமிடம் விதிர் விதிர்த்துப் போனேன்.

என்ன ஆச்சு...? என்ன நடக்கிறது இங்கே? நான் சட்டென்று திரும்பினேன்.

எதிரே... திகுதிகுவென எரியும் கண்களுடன் அர்பாபு!

எனக்கெதுவுமே புரியவில்லை. இப்படி அடிக்கும் அளவுக்கு நான் அப்படியென்ன தப்பு செய்துவிட்டேன்?

வேலையில் ஏதாவது குளறுபடியாகிவிட்டதா... தப்பு ஏதாவது நடந்துவிட்டதா...?

என்னுடைய கையிலிருந்து பக்கெட்டை முரட்டுத்தனமாக பறித்த அர்பாபு கோபத்துடன் கூச்சலிட்டான்.

அதன்பின் பெல்ட்டால் என்னை விளாசித் தள்ளினான். என் மீது அடி விழுந்து விடாமலிருக்க கைகளால் தடுக்க முயன்ற போது அடியின் உக்கிரம் கூடியது. ஒரு கட்டத்தில் அடி தாங்காமல் நான் தரையில் விழுந்தேன்.

அர்பாபு தண்ணீர் பக்கெட்டுடன் கோபமாக கூடாரத்துக்குத் திரும்பினான்.

அர்பாபுவின் கோபமும் அடியும் எனக்கு உணர்த்தியது இதுதான்: 'இந்த தண்ணீர் உனது பின்பக்கத்தை கழுவுவதற்கானதல்ல. அது என்னுடைய ஆடுகளுக்குரியது. இந்த தண்ணீரின் விலை உனக்குத் தெரியாது. இனிமேலும் இதுபோன்ற தேவையற்ற விஷயங்களுக்காக தண்ணீரைத் தொடாதே. மீறித் தொட்டால் தொலைத்துவிடுவேன் உன்னை!'

'மலம் கழித்துவிட்டு பின்புறம் கழுவுவது உலக மகா தவறு' என்னும் முதல் பாடம், அங்கே எனக்கு இப்படித்தான் கற்பிக்கப்பட்டது.

நான் தரையிலிருந்து மெதுவாக எழுந்தேன். எனக்கு தர்மசங்கடமாக இருந்தது. இப்படியொரு மோசமான நிலைமை இதுவரை எனக்கு ஏற்பட்டதில்லை.

நான் ஆற்றில் வளர்ந்தவன். தண்ணீரே என் வாழ்க்கை. சுத்தம் எனது உயிர் மூச்சு. என்னுடைய ஸைனு இரண்டு தடவை குளிக்காமல் இருந்தால் கூட எனக்கு அருவெறுப்பாக இருக்கும்.

என் வேலையோ எப்போதுமே தண்ணீருக்குள்!

ஆனால் எனது வாழ்க்கையின் அனைத்து வழக்கங்களையும் நான் துறந்தாக வேண்டிய காலகட்டத்தின் துவக்க தினங்கள் இவை. அவற்றில் மிகக்கொடுமையானது 'கழுவ' ஏற்பட்ட தடை.

நான் திரும்பி வந்து கட்டிலுக்கு அடியில் கிடந்த மணலில் உட்கார்ந்தேன்.

பயங்கரன் கட்டிலுக்கு மேலேயிருந்து அவசர அவசரமாக குபூஸ்களைத் தின்று கொண்டிருந்தான். என்னைப் பார்த்ததும் எனக்கும் சில குபூஸ்களை நீட்டினான்.

'கால் கழுவாமல்' சாப்பிடுவதைப் பற்றி என்னால் நினைத்துக்கூட பார்க்க முடியவில்லை.

நான் குபூஸை கைகளால் தொடாமல் ஒரு பக்கமாக ஒதுக்கி வைத்தேன்.

அப்போது தொலைவில் அற்புதமான காட்சியொன்று தென்பட்டது. ஒரு மிகப்பெரிய ஒட்டக மந்தை. நூற்றுக்கணக்கான ஒட்டகங்கள், வரிசையாக வந்து கொண்டிருந்தன.

என் வாழ்நாளில் நான் இதுவரை பார்க்காத முற்றிலும் புதுமையான காட்சி. மிகப்பெரிய ஒட்டகம் வரிசையின் முன்னாலும், அதற்கு பின்னால் அதைவிடச் சிறியது, அதற்கடுத்து அதைவிடச் சிறியது

என்று அளவுக்கு தகுந்தபடி ஒவ்வொன்றாக வரிசையில் அலங்காரமாக வந்து கொண்டிருந்ததே தனி அழகு. காவலாளிகள் எவருமேயில்லாமல் அவை தாமாகவே வழி கண்டுபிடித்து வந்து கொண்டிருந்தன.

சற்று நேரத்திற்கெல்லாம் அவை எங்களுக்கருகில் வந்துவிட்டன. ஒரு ஒட்டகத்தை அத்தனை நெருக்கத்தில் நான் பார்ப்பது அதுவே முதல் தடவை. உடல் சிலிர்க்க நான் அதிசயத்துடன் அவற்றையே பார்த்துக்கொண்டிருந்தேன். ஒட்டகங்களின் தடித்த புருவங்கள் எனக்கு பாலைவனத்தின் அனைத்து தீக்ஷணங்களையும் எடுத்துக் காட்டுவதாகத் தோன்றியது.

மீன் செதிள்களைப் போல் திறந்து மூடும் மூக்கு. மிக நீளமாகப் பிளந்திருந்த வாய். வலிமையான கழுத்து, குதிரையின் குட்டை ரோமங்களை நினைவூட்டும் ரோமம். கொம்பு போல் தலைக்கு மேல் நீண்டு வளர்ந்த காதுகள்.

இவை எல்லாவற்றிற்கும் மேலாக என்னை ஈர்த்தது–எனக்கு அச்ச மூட்டியது–மர்மம் உறைந்து கிடந்த அதன் பார்வைதான். அதன் கண்களை ஒரேயொருமுறைதான் பார்த்தேன். ஆனால் அதற்குள் சூரியனைப் பார்த்ததைப் போன்றதொரு வெம்மையை நான் உணர்ந்தேன்.

அந்தக் கண்களில் பாலைவனத்தின் அகண்டமும், மர்மமும், பயங்கரமும், வன்மமும் உறைந்து கிடந்ததாக எனக்குத் தோன்றியது. இவற்றிலிருந்து நான் ஒரு போதும் தப்பித்துவிட முடியாது என்பதை எனக்கு பூடகமாக உணர்த்தின அந்தக் கண்கள்.

ஒட்டகங்களை மர்மங்களின் உச்ச வடிவம் என்றழைக்கவே நான் ஆசைப்படுகிறேன். அந்த ஒட்டகங்கள் என்னைக் கடந்து மெதுவாக தமது மஸராவுக்குள் நுழைந்தன.

# 12

தொழுவத்துக்கு திரும்பிய ஒட்டகங்களுக்கு தண்ணீரும், புல்லும் கொடுக்குமாறு நான் பணிக்கப்பட்டேன். உடம்பு விறைக்க நான் மெதுவாக அந்த மஸராவை நோக்கிப் போனேன்.

ஒட்டகங்கள் மனிதனுக்கு இடையூறு செய்யும் விலங்கா...? அப்படியானால் அவை எதிரிகளை எப்படித் தாக்கும்? கடிக்குமா... அல்லது தலையால் முட்டுமா? இல்லை காலால் எட்டி உதைக்குமா...?

ஒன்றுமே புரியவில்லை.

இப்போது எப்படியாவது அவற்றுக்குத் தண்ணீரும், புல்லும் கொடுத்தாக வேண்டுமே, என்ன செய்வது? பயமாக இருக்கிறது என்று சொல்லி அந்த வேலையைத் தட்டிக்கழிக்க முடியாதபடிக்கு நெருக்கடியான சூழ்நிலை.

அப்படியே ஒட்டகம் மூர்க்கமானது என்றே வைத்துக் கொண்டாலும், அதை விடவும் பயங்கரமான ஒரு அர்பாபு இதோ என் பின்னால் நின்று கொண்டிருக்கிறானே.

வேறு வழியில்லை. வருவது வரட்டும் என்று மனதிற்குள் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு நான் மஸராவுக்குள் நுழைந்தேன்.

ஒட்டகங்களின் கால்களுக்கிடையே நடக்கும் போது வலிமையான ஒரு உதையையும், அதன் முகத்துக்கு நேராக போன போது கோரமான ஒரு கடியையும் எதிர்பார்த்து நடுங்கியபடியே ஒருவழியாக அவற்றுக்கு தீனி கொடுத்து முடித்தேன்.

சூழ்நிலை மனிதனின் எல்லா பயங்களையும் நீர்த்துப் போகச் செய்துவிடும் என்று அன்றும், பிற்பாடு பல்வேறு சந்தர்ப்பங்களிலும் நான் நேரடியாக தெரிந்து கொள்ளும் அளவுக்கு பல்வேறு சூழல்கள் என் வாழ்க்கையில் ஏற்பட்டன.

எனது அதிர்ஷ்டம். அன்று ஒட்டகங்கள் என்னிடம் அன்பாகவே நடந்து கொண்டன. தலா நான்கு தொட்டிகளில் புல்லும் தண்ணீரும், ரெண்டு தொட்டியில் கோதுமை, மூணு தொட்டியில் வைக்கோல் என்று நான் ஒருவனே அன்று எல்லாவற்றையும் செய்து முடித்தேன்.

வேலையெல்லாம் முடிந்த போது உடம்பெங்கும் கடுமையான வலி, முதுகு விண்விண்ணென்று தெறித்தது. 'கொஞ்சம் உதவக்கூடாதா' என்னு கண்களாலும், சைகையாலும் நான் பயங்கரனிடம் கெஞ்சினேன்.

அதற்காக அவன் எழுந்த போது வேண்டாம் என்று அர்பாபு அவனைத் தடுத்துவிட்டான்.

நான் 'கால் அலம்ப' தண்ணீர் எடுத்தற்கான தண்டனைதான் அது என்று எனக்கு புரிந்தது.

மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க நான் பயங்கரனின் கட்டிலுக்கருகில் போய் உட்கார்ந்தேன். மூச்சு சீராகி களைப்பு – கொஞ்சம் குறைந்த போது எனக்கு பசிக்கத் தொடங்கியது.

சற்று முன்னால் பயங்கரன் நீட்டிய குபூஸ் கட்டிலின் ஓரமாக கிடக்கிறது. அதன்பின் நான் எதைப் பற்றியுமே ஆலோசிக்கவில்லை. கால் அலம்பாததைப் பற்றி நான் அருவெருப்படையவில்லை. சுத்தத்தை நான் மறந்தேவிட்டேன்.

ஒரே மூச்சில் நான்கைந்து குபூஸ்களை தண்ணீரில் நனைத்து விழுங்கிவிட்டு, ரெண்டு செம்பு தண்ணீரையும் வாய்க்குள் கவிழ்த்த பிறகு தான் எனக்கு தன்னிலை வந்தது.

சாப்பாட்டுக்குப் பின் அர்பாபு என்னை கூடாரத்துக்குள் அழைத்து என்னவெல்லாமோ அறிவுரைகள் சொன்னான். இடைக்கிடையே காபப்பட்டான்.

தலைகுனிந்தபடியே நான் எல்லாம் புரிந்ததாக நடித்தேன், அவன் சொன்னது எதுவுமே புரியாவிட்டாலும். நான் செய்த தவறின் பரிமாணம் எனக்கு நன்றாகவே புரிந்தது.

இனி சற்று நேரம் ஓய்வெடுக்கலாம். அதற்காக ஒரு சாண் நிழல் தேடி நான் அங்குமிங்குமாக அலைந்தேன். ஆனால் நிழல் என்னும் அம்சமே அங்கு தென்படவில்லை. எங்கும் வெயில், சுட்டெரிக்கும் வெயில் மட்டுமே.

அர்பாபுவின் கூடாரத்தில் மட்டுமே ஓரளவு நிழல் இருக்கும். ஆனால் அவரோ அதை ஒரு சுல்தானின் அரண்மனையைப் போல் மிகவும் பாதுகாப்பாக வைத்திருந்தார். எவரையும் உள்ளே அனுமதிப்ப தில்லை. அதற்குள் நுழைய எனக்கு தைரியமும் இல்லை.

பயங்கரனோ வெயில் இப்படி சுட்டெரிக்கிறதே என்ற நினைப்பே இல்லாமல், முகத்தின் மேல் ஒரு துணியைப் போட்டுக்கொண்டு கட்டிலில் நீட்டி நிமிர்ந்து கிடக்கிறான்.

மரத்துப்போன அவன் உடம்போடு போராடி வெயிலும் வெப்பமும் தோற்றுப்போய்விட்டதோ!

வேறு வழியில்லாமல் தலையில் ஒரு துணியை போட்டுக்கொண்டு நானும் அந்த கட்டிலுக்குப் பக்கத்திலேயே உட்கார்ந்தேன். கொஞ்ச நேரம் வெயிலில் காய்ந்த போது தான் கட்டிலுக்குக் கீழே ஒரு சின்னஞ் சிறு நிழல்கோடு கிடப்பதைப் பார்த்தேன். அப்போதைக்கு அதுதான் உலகின் மிகப்பெரும் கண்டுபிடிப்புகளில் ஒன்றாக எனக்கு தோன்றியது.

தேவையும், சூழ்நிலையுமே ஒரு கண்டுபிடிப்பின் மகத்துவத்தை நிர்ணயிக்கின்றன என்றால் என்னைப் பொருத்தவரையில் உலகின் வேறெந்த கண்டுபிடிப்புகளை விடவும் இதுவே மகத்தானது.

இல்லையென்றால் இந்த பயங்கரன் ஏன் இத்தனை காலமாக இந்த சூட்டிலேயே கிடந்து பொசுங்கிக் கொண்டிருக்கிறான்? இப்படியொரு நிழலின் சாத்தியம் எப்படி இதுவரை அவன் கண்ணில் படாமல் போனது?

ஆர்வமும் மகிழ்ச்சியும் மேலிட நான் கட்டிலுக்கடியில் நுழைந்து கை கால்களை நீட்டியபடியே மல்லாந்து படுத்தேன். மணல் சூடாகவே இருந்தது. ஆனாலும் அந்த படுக்கையில் அதுவரை அனுபவித்தறியாத ஒரு சுகமிருந்தது.

சற்று நேரம்தான் கண்ணயர்ந்திருப்பேன். அதற்குள் அழைப்பு வந்துவிட்டது. மீண்டும் காலையில் செய்ததைப் போலவே ஒவ்வொரு செட்டாக ஆடுகளை வெளியே கொண்டுபோனோம். அப்போதுதான் ஆடுகளையும் மஸராக்களையும் நான் கவனித்தேன். ஒரு மஸரா முழுவதுமே கறவையாடுகள். மற்றொன்றில் சினைக்குத் ஏற்ற பெட்டை களும் கிடாரிகளும். வேறு சிலவற்றில் கட்டையும் நெட்டையுமாக பல பிராயத்து குட்டியாடுகள். மற்றொன்றில் வெறும் செம்மறியாடுகள் மட்டுமே. கடைசி மஸரா ஒட்டகங்களுடையது.

முதல் செட் ஆடுகளுடன் வெளியே போகும் போது நாங்கள் ஒட்டக மஸராவின் கதவைத் திறந்து போட்டுவிட்டு வந்தோம், அவை தமது விருப்பம் போல் வெளியே சுற்றி வரட்டும் என்று. கடைசி செட் ஆடுகளையும் விரட்டிக் கொண்டு நாங்கள் மஸராவுக்கு திரும்பிய போது ஒட்டகங்களும் தம் மேய்ச்சலை முடித்துவிட்டு மஸராவுக்கு திரும்பியிருந்தன. அதன் பின் மதியம் செய்த அதே வேலைகள். தண்ணீர், புல், வைக்கோல், கோதுமை. . .

பயங்கரன் வாயகன்ற ஒரு பெரிய பாத்திரத்துடன் கறவையாடுகள் கிடந்த மஸராவுக்குள் சென்றான். நானும் அவன் பின்னாலேயே சென்றேன். அவன் படுவேகத்துடன் பால் கறப்பதை பார்க்க ஆச்சரிய மாக இருந்தது. வெகு சீக்கிரத்திலேயே பாத்திரம் நிரம்பி வழிந்தது. நாங்களிருவருமாகச் சேர்ந்து அதைத்தூக்கிக்கொண்டு வெளியே வந்தோம். அந்த பால் விற்பனைக்கென்று தான் நான் முதலில் நினைத்திருந்தேன். அதிலிருந்து அர்பாபு கொஞ்சம் எடுத்து குடித்தார்.

பயங்கரனும் இரண்டு கப் குடித்தான். என்னிடமும் விருப்பம் போல் குடிக்கச் சொன்னார்கள். ஆனால் அதிலிருந்து வீசிய மூகட்டு வாடையால் என்னால் அதைக் தொட்டுக்கூட பார்க்க முடியவில்லை.

மிச்சமிருந்த பால் முழுவதும் இளம் குட்டிகள் அடைக்கப்பட்டிருந்த மஸராவுக்குள் கொண்டு போய் வைக்கப்பட்டது.

கழனிப்பானைக்குள் தலை நுழைப்பது போல் குட்டியாடுகள் அந்த பால் பாத்திரத்துக்குள் மூக்கை நுழைத்து வேகவேகமாக பாலை உறிஞ்சின.

அப்போதுதான் எனக்கு அந்த விஷயம் உறைத்தது. இப்போது தான் புதிய விஷயங்கள் ஒவ்வொன்றாக என் புத்திக்கும் பார்வைக்கும் தட்டுப்பட்டுவருகின்றன.

பால் குடிக்கும் இளம் குட்டிகளைக் கூட அவற்றின் தாயாடு களுடன் விடுவதில்லை. குட்டிகளுக்கு தனி மஸரா, தாயாடுகளுக்கு தனி மஸரா.

குட்டிகளில் ஒன்றைக்கூட அதன் தாய் மடியிலிருந்து நேரடியாக பால் குடிக்க விடுவதில்லை. எல்லாவற்றுக்கும் கறந்த பால் மட்டுமே அதுவும் ஒரே கூட்டமாக, ஒரே பாத்திரத்தில்.

அப்படியானால் எந்த தாயின் பாலை எந்த குட்டி குடிக்கிறது...? மணமும், ருசியும், ஸ்பரிசமும்தானே ஒரு குட்டிக்கு தன் தாயை அடையாளம் காட்டும்.

அது ஆடோ, நாயோ, பசுவோ... ஏன் மனிதனாகவே இருந்தாலும் அதுதானே உண்மை?

அப்படியானால் ஒரு ஆட்டுக்குட்டிக்கும் அதன் தாய்க்குமிடையே எந்த விதத்திலும் தொப்புள் கொடி உறவு ஏற்பட்டுவிடக்கூடாது என்பதற்காகத்தான் இந்த 'கூட்டு' பால்குடியா? இருக்கலாம்.

அதுதான் அரபு நீதி, அல்லது குறைந்தபட்சம் என்னுடைய அர்பாபுவின் நீதி. அதைச் செய்வதற்கு மட்டுமே நான் விதிக்கப் பட்டிருக்கிறேன். அதையும் மீறி அதைப்பற்றி சிந்திக்கவோ கவலைப் படவோ நான் யார்?

அந்தி சாய்ந்தது. பாலைவனத்தின் மணல் மேடுகளுக்குள் சூரியனும் மறைந்தான். மாலை வந்தது. தொடர்ந்து இருளும் வந்தது. கூடவே ராத்திரி நேர அர்பாபுவும் வந்தார். வந்தவர் வண்டியிலிருந்து தீவனங் களையும், தண்ணீரையும் கீழே இறக்கி வைத்தார். சற்று நேரத்தில் பகல் நேர அர்பாபு கூடாரத்திலிருந்து எதையெல்லாமோ பொறுக்கிக் கொண்டு வண்டியில் ஏறி மறைந்தார்.

ராத்திரி அர்பாபு குபூஸ் கொண்டு வந்திருந்தார். தொட்டுக்கொள்ள கறியெதுவும் இல்லை. வெறும் குபூஸ் மட்டும்தான்.

என் உணவுமுறை இனிமேல் எப்படியிருக்கும் என்று எனக்கு அப்போதே புரிந்து போனது.

அதிகாலையில் கறந்தெடுத்த பச்சைப்பால், முலைச்சூட்டுடன். அதுவும் விரும்பினால் மட்டுமே.

காலையில் குபூஸும் பச்சைத் தண்ணீரும். மதியம் குபூஸும் பச்சைத்தண்ணீரும். சாயங்காலம் கறந்தெடுத்த பச்சைப்பால், முலைச் சூட்டுடன். அதுவும் விரும்பினால் மட்டுமே. ராத்திரி குபூஸும் பச்சைத் தண்ணீரும். இதற்கிடையே தாகம் ஏற்பட்டால் இரும்பு டாங்கில் கிடக்கும் கொதித்து வாடிய பச்சைத் (சூடு) தண்ணீர். அதுவும் அவசியம் ஏற்படும் போது மட்டுமே.

ராத்திரி வேலைகளையெல்லாம் முடித்துவிட்டு பயங்கரன் கட்டிலில் வந்து படுத்தான். நானோ வெறும் தரையில் ஒரு போர்வையை விரித்துக்கொண்டேன். அர்பாபு கூடாரத்துக்குள்.

பயங்கானிடம் என்னவெல்லாமோ கேட்கவேண்டும் என்று நினைத்திருந்தேன். ஆனால் படுத்த ஐந்தாவது நிமிடத்திலேயே அவனிடமிருந்து உரத்த குறட்டையொலி.

இப்போது நான் தனிமையில் விடப்பட்டேன். தலைக்கு கீழ் வைத்திருந்த பைக்குள்ளிருந்து ஊறுகாய் நெடி காற்றில் பரவியது. குபுக்கென்று எனக்குள் வீட்டு நினைவு பீறிட்டது.

அம்மா, ஸைனு, அவளுடைய வயிற்றில் வளரும் என் செல்ல மகன் (மகள்) எல்லோரும் நினைவில் வந்தார்கள். நான் இங்கே இப்படி அகப்பட்டுக்கொண்ட விபரம் தெரியாமல் அவர்கள் பெருங்குழப்பத்திலிருப்பார்கள். அதை நினைத்தபோது என் கண்களில் நீர்கோர்த்தது, மூச்சடைத்தது.

அவர்களிடம் எப்படி விபரம் தெரிவிப்பது? நான் வந்து சேர்ந்து விட்டேன். இங்கே சுகமாக (?) இருக்கிறேன் என்றாவது...?

அப்போது ஹக்கீம் என் நினைவில் வந்தான். பாவம்... அவனுக்கு எப்படிப்பட்ட வேலைகளோ...? இன்றைக்கு அவனை வெளியே எங்குமே பார்க்க முடியவில்லை. கூர்ந்து பார்த்த போது நெடுந்தூரத்தில் இதுபோன்றே ஒரு பெரிய மஸரா இருப்பதாகத் தோன்றியது. அவனுடைய நிலைமையும் அப்படியொன்றும் நன்றாக இருக்காது. பாவம், எப்படிக் கிடந்து கஷ்டப்படுகிறானோ?

எத்தனையோ கனவுகளுடன் விமானம் ஏறினானே! இந்த இளம் பிராயத்திலேயே இப்படிப்பட்ட கொடுமைகளை அவன் எப்படித் தாங்குவான்?

அவன் குடும்பம் அப்படியொன்றும் கஷ்டப்படும் குடும்பமில்லை. அவனுடைய வாப்பா கொஞ்ச காலமாக துபாயில்தான் இருக்கிறார். ஹக்கீமையும் அங்கே கூட்டிக்கொண்டு போக முயற்சித்துக் கொண்டிருக்கும்போதுதான் இந்த விசா வந்து சேர்ந்தது.

'சரி, ஊரில் கிடந்து கெட்டு சீரழிந்துவிடாமல் கிடைத்த விசாவில் நீ கல்ஃபுக்கு போ.. அங்குள்ள வாழ்க்கை ரீதியையும், மொழியையும்

மெதுவாகப் பழகிக்கொள். ரெண்டு வருஷத்துக்குள் உன்னை துபாய்க்கு அழைத்துக்கொள்கிறேன்' என்று அவன் வாப்பா சொல்லியிருந்தார்.

பாவம் இந்த கொடுமைகளையெல்லாம் அந்தச் சிறுவன் எப்படித் தாங்குவான். என்னுடைய விஷயம் எப்படியோ போகட்டும். ஆற்றில் மணலெடுத்து கஷ்டப்பட்டவன் நான். எனக்கு இவையெல்லாம் தூசு.

ஹக்கீமோ தன் வயது இளந்தாரிகளுடன் உல்லாசமாக ஊர் சுற்றியவன். இனி என்ன ஆகுமோ...? எல்லாம் அல்லாஹுவின் செயல்கள். பொறுத்தே ஆகவேண்டும். வேறு என்ன வழி...?

இனி வரும் நாட்களில் இந்தக் கஷ்டங்கள் மேலும் அதிகரிக்கவே செய்யும். கருணை மிகுந்த இறைவா, இந்த அவலங்களிலிருந்து வெளியே வரும் வலிமையை எனக்கும் ஹக்கீமுக்கும் நீதான் தந்தருள வேண்டும்!

பழக்கமில்லாததால் அன்றிரவும் உறக்கம் வராமல் நான் நெடு நேரம் புரண்டு கொண்டேயிருந்தேன்.

# 13

இரண்டாம் நாள் பாலைவனத்திற்குள் பொழுது புலர்ந்தது.

நேற்று ஒரு நாளிலேயே நான் களைத்துப்போய்விட்டேன். காலையில் எழுந்திருக்கும் போதே உடம்பு முழுவதும் பயங்கர வலி. கை கால் உளைச்சல். நாள் முழுக்க தண்ணீரில் முங்கிக் கிடந்தபோது ஏற்படாத வேதனை. அந்த வலியை விடவும் வேலைகளையெல்லாம் முடித்துவிட்டு ஆசை தீர ஒரு குளியல் போட முடியாத அவஸ்தை தான் என்னைப் பாடாய் படுத்தியது.

நாள் முழுக்க தண்ணீரில் கிடப்பதுதான் என் வேலை. ஆனாலும் வேலை முடிந்த பின் குளித்து தலை துவட்டாமல் ஒரு நாள் கூட நான் தண்ணீரிலிருந்து வெளியே வந்ததில்லை.

ஆனால் இங்கோ...? பொழுதெல்லாம் வெயிலில் நடந்து, வியர்வையில் குளித்து, ஆடுகளுக்கிடையே உரசிக் கசங்கி, அவற்றின் புழுக்கையும், மூத்திரமும் அடையாய் உடம்பில் படிய, மீண்டும், மீண்டும் அதிலேயே விழுந்து கிடக்கும் பெரும் அவஸ்தை. அக்குளிலும் தொடையிடுக்கிலும் ஒரே பிசுப்பு. அதற்கிடையே அர்பாபு தந்த நாற்றம் பிடித்த அரபி அங்கி வேறு. வியர்வையில் ஊறிக்கிடந்த ஷூவைப் பற்றி சொல்லவே வேண்டாம்.

அந்த வேதனையிலும், அவஸ்தையிலுமாக நான் எழுந்ததுதான் தாமதம், பயங்கரன் ஒருபெரிய அலுமினியச் சட்டியை என் கையில் திணித்து, போய் பால் கறக்குமாறு சைகை செய்தான்.

ஆட்டுப்பால் கறக்கவா! நானா?

அப்போது உண்மையிலேயே நான் அனுபவித்த வெறுமை... அறிவின்மை என்னுமொரு ஆழ் குளத்துக்குள் கால் தவறி விழுந்தவனைப்போல்.

எனது வாழ்க்கையில் ஆடுகள் எதையுமே நான் அத்தனை நெருக்கத்தில் பார்த்ததில்லை என்று நான் சொன்னால் நீங்கள் ஆச்சரியப் படுவீர்கள்.

"ஒரு ஆட்டைக்கூட நெருக்கமாக பார்த்ததில்லையா... நீ என்ன அண்டார்டிகாவிலிருந்தா வந்திருக்கிறாய்?"

பார்த்திருக்கிறோம், நீங்களும் நானும் ஆடுகளைப் பார்த்திருக்கிறோம். ஆடு என்றால் மனித இனம் ஒரு சமூகமாக வாழத் தொடங்கிய காலத்திலிருந்தே— கி.மு. ஏழாயிரம் எட்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் மனிதனுடன் இணங்கி வாழும் ஒரு உயிரினம்.

நம்முடைய பக்கத்து வீட்டு மரியம்மையும், ஜானகியம்மாவும், வேலாயுதன் குட்டியும் பத்திரமாக வளர்த்து வரும் ஒரு சாதுப் பிராணி. ஆடுகள் பார்க்க நல்ல அழகு. அதிலும் ஆட்டுக்குட்டிகளை கண்டால் எவருக்குமே அவற்றை வாரியெடுத்து ஒரு முறை வருடத் தோன்றும்.

ஆடு நமக்கு பால் தரும். குட்டிகளை ஈனும். புழுக்கை போடும். பாலைக் குடிக்கலாம். குட்டிகளை வியாழக்கிழமை சந்தையில் கொண்டு போய் விற்கலாம்.

ஆட்டுப்புழுக்கையை வர்ழை மூட்டில் உரமாகப் போடலாம்.

அது புல் பூண்டுகளைத் தின்னும். கழனி குடிக்கும். ஆனால் பலா இலையை சந்தோஷமாக மென்று தின்னும். இதைத் தவிர ஆடுகளைப் பற்றி எனக்கு வேறெதுவுமே தெரியாது.

ஒருவேளை நீங்களும்கூட அப்படித்தான் இருக்கக்கூடும்.

ஆடுகளின் தாயகம் எது? அவற்றின் மூதாதையர் யார்? இந்த உலகில் எத்தனை வகையான ஆடுகள் இருக்கின்றன. அவை ஒவ்வொன்றின் குணாதிசயங்கள் என்ன?

சரி, போகட்டும். இவற்றிற்கெல்லாம் விடை தெரியாவிட்டாலும் கூட பரவாயில்லை. ஆனால் ஆடுகளைப் பற்றிய அடிப்படை அறிவு...?

அது கூட எனக்குத் தெரியாதே. ஆட்டின் மடியில் எத்தனை காம்புகள் உண்டு. ஆட்டுக்கு எத்தனை குளம்புகள், ஆட்டின் கர்ப்ப காலம் எவ்வளவு? பிரசவித்த ஆடு எத்தனை காலத்துக்கு பால் தரும்? ஒரு தடவை அது எவ்வளவு பால் சுரக்கும்? ஒரு ஆட்டை நாளொன்றுக்கு எத்தனை தடவை கறக்கலாம்? ஆட்டிடம் எப்படி பால் கறப்பது? எப்படி பீச்சினால் பால் வரும்?

பசுக்களைப் போல ஆடுகளும் பின்னங்கால்களால் தான் உதைக்குமா? அல்லது குதிரைகளைப் போல முன்னங்கால்களாலா? அது உதைத்தால் எப்படி தப்பிக்கவேண்டும்?

எதுவுமே எனக்குத் தெரியாது.

இவற்றையெல்லாம் தெரிந்து கொள்ள நான் எவரிடமும் போய் விபரம் கேட்டதில்லை. எவரும் என்னிடம் விபரங்களை சொன்னது

மில்லை. இதுதான் இங்கே எனக்காக விதிக்கப்பட்ட வேலை என்று முன்பே தெரிந்திருந்தால் எப்பாடுபட்டாவது இவற்றையெல்லாம் தெரிந்து கொண்டிருப்பேன்.

எங்கள் வீட்டுக்கு மூன்று வீடு தள்ளியிருந்த ஜானகியம்மா மூன்று ஆடுகள் வளர்த்து வந்தாள். பாதையோரங்களிலும், தோட்டத்திலும் அவை இலைகளைக் கடித்துக் கொண்டிருப்பதை நான் போகிற போக்கில் பார்த்திருக்கிறேன். அவற்றின் குட்டிகள் அங்குமிங்குமாக குதியாட்டம் போட்டுக்கொண்டிருக்கும். அவை கறவையாடுகளாகத் தான் இருந்திருக்கவேண்டும்.

தெரிந்திருந்தால் அப்போதே அவற்றிடம் எப்படி பால் கறப்பது என்று படித்திருக்கலாம். நானோ அவற்றை ஒரு தடவை கூட சிரத்தையுடன் பார்த்ததில்லையே. இப்படியே நம்மைச் சுற்றிலும் எத்தனையோ வகையான உயிரினங்கள் வாழ்ந்து கொண்டிருக்கின்றன!

இனி அப்படியே இங்கேயொரு பசுவை வளர்க்க வேண்டுமென் றாலும்கூட பெரிய வித்தியாசம் எதுவுமில்லை.

நாம் தான் இவை எதையுமே கவனிப்பதில்லையே! தேவை வரும் போது மட்டுமே நாம் அவற்றைப் பற்றி சிந்திக்கிறோம். அப்போதுதான், அன்றே பார்த்திருக்கலாமே... அப்போதே படித்திருக்கலாமே... சற்றே கவனித்திருக்கலாமே... என்ற நினைப்புகளெல்லாம் வருகிறது.

இயற்கையை நோக்கி நிரந்தரமாக நமது கவனத்தைத் திருப்ப வேண்டியதன் தேவை இப்போது தான் எனக்குப்புரிகிறது. அதிலும் ஒரு தேவையை முழுமையாக சார்ந்திருக்கும் போது.

சரி... அது கிடக்கட்டும், இப்போது வேறென்ன செய்வது?

எல்லோரும் வழக்கமாகச் செய்வது போல், வெற்றி பெற கடுமையாக முயற்சி செய்ய வேண்டும் என்ற தேவை சார்ந்து, சுயமாக கண்ட டைதல் என்னும் நிலைக்கு நான் வந்தேன்.

பால் பாத்திரத்துடன் மெதுவாக மஸராவுக்குள் நுழைந்த நான், ஒரு ஆட்டை குறிவைத்து மெதுவாக அதனருகில் போனேன். பால் கறப்பதற்கு முன்பு பசுவின் மடியில் தண்ணீர் தெளிப்பதை நான் ஊரில் பார்த்திருக்கிறேன். இங்குள்ள அகராதியில்தான் 'குளித்தல்' என்னும் சொல்லே கிடையாதே. அதனால் மடியைக் கழுவ வேண்டிய தேவையே இல்லை.

நான் அடிமேல் அடிவைத்து அந்த ஆட்டின் பின்பக்கமாய் போய் அதன் கால்களுக்கிடையே என் பாத்திரத்தை மெதுவாக வைத்தேன். பின் சரேலென்று அதன் காம்பைப் பிடித்து ஒரு இழு இழுத்தேன். அதிலிருந்து ஒரு துளி பால்கூட பீச்சியடிக்கவில்லை. அதற்குப் பதிலாக, என்னையும் பாத்திரத்தையும் காலால் ஒரு இடறு இடறி விட்டு விட்டு, அந்த ஆடு பதறிப்போய் தன் கூட்டத்துக்குள் ஓடி மறைந்து கொண்டது.

அதன் ஓட்டத்தைப் பார்த்து கலவரமடைந்த மற்ற ஆடுகளும் மஸராவுக்குள்ளேயே அங்குமிங்குமாக கிடந்து ஓட ஆரம்பித்தன. அதில் ஒரு ஆடு கீழே விழுந்து கிடந்த என்னை, தன் குளம்பால் ஒரு மிதி மிதித்துவிட்டு தாவி ஓடியது. அதன் குளம்பு என் விலா எழும்பில் வேகமாக அழுத்தியபோது, நான் வலியால் துடித்தேன்.

எப்படியோ ஒரு விதமாக தட்டுத்தடுமாறி எழுந்த நான், ஓடிக் களைத்து மூலையில் நின்ற ஒரு ஆட்டைப் பிடித்து அதன் மடியை வேகமாக இழுக்க முயன்றேன். திமிறிய அந்த ஆடு விசுக்கென்று தன் காலை உதறிக் கொண்டு வேகமாக துள்ளிக்குதித்தது.

நான் மீண்டும் வேறொரு ஆட்டைக் கறக்க முயன்றேன். அதுவும் என் கைக்குள் அகப்படவில்லை.

இப்படியே அங்குமிங்குமாக ஓடிக்கொண்டிருக்கும் இந்த ஆடுகளிட மிருந்து நான் எப்படித்தான் பால் கறப்பது...? கடவுளே எனக்கொரு வழியைக் காட்டு.

இன்று எப்படியும் ஒரு ஆட்டிடமிருந்தாவது பால் கறந்துவிட வேண்டும் என்னும் வைராக்கியத்துடன் நான் மீண்டும் ஒரு ஆட்டின் பின்பக்கம் போய் உட்காருவேன். வழக்கம்போல் அதுவும் காலை உதறிவிட்டு ஓடிப்போகும். நான் மீண்டும் வேறொரு ஆட்டைத் தேடிப்போவேன். அதுவும் ஓடிப்போகும்.

இப்படியாக ஓடுவதும், ஆட்டைப் பிடிப்பதுமாக நேரம் போய்க் கொண்டிருந்ததே தவிர வேலை ஒன்றுமே நடக்கவில்லை. அப்போது என்னுடைய பால் கறவை எப்படியிருக்கிறது என்று பார்ப்பதற்காக அர்பாபுவும் பயங்கரனும் மஸராவுக்குள் வந்தார்கள். என்னுடைய பாத்திரத்திலோ, ஒரு துளி பால் கூட விழுந்திருக்கவில்லை. நான் அப்போதும் ஆடுகளின் பின்னாலேயே ஓடிக்கொண்டிருந்தேன்.

என்னுடைய அவஸ்தையை பார்த்த அர்பாபு தலையிலடித்தபடியே தன்னுடைய கூடாரத்துக்கு திரும்பிப்போனார். பயங்கரனோ மெதுவாக என் பக்கத்தில் வந்து, என் கையிலிருந்த பால் பாத்திரத்தை வெடுக்கென்று இழுத்தெடுத்தான். பின் பால் கறக்கும் ஆட்டை எப்படி அணுக வேண்டும் என்று எனக்குக் காட்டித் தந்தான்.

பால் கறக்கப்போகும் ஆட்டின் பின்பக்கமாக ஒரு போதும் போக கூடாது. முன்பக்கமாகத்தான் செல்ல வேண்டும். போனவுடனேயே சட்டென்று கறக்க ஆரம்பித்துவிடக்கூடாது. ஒரு குழந்தையை வருடு வது போல் அதன் முகம், காது, தலை என்று மெதுவாக வருடிக் கொடுக்க வேண்டும். கைகளால் உடம்பு முழுவதும் ஒரு முறை தடவ வேண்டும். அதன் பிறகு முதுகில் செல்லமாக ஒரு தட்டு தட்டிவிட்டு மெதுவாக அதன் பக்கத்தில் போய் உட்கார வேண்டும்.

இப்போது அதன் அடிவயிற்றை இரண்டு மூன்று முறை வருடிக் கொடுக்கவேண்டும். அதன் பிறகுதான் அதன் மடியில் கை வைக்க வேண்டும். அதுவும் மிக மெதுவாக.

அப்போது ஆடு ஒரு முறை தன் உடலை சிலிர்க்கும். மனிதர்களுக்கு மட்டுமல்ல ஆடுகளுக்கும் கூச்சம் உண்டு.

ஒரு இளம் பெண்ணைத் தொடுவது போல் மெதுவாக, மிக மெதுவாக அதன் காம்புகளை வருடி அதன் கூச்சத்தைப்போக்க வேண்டும்.

நம் பக்கங்களில் இந்த வேலைகளையெல்லாம் ஆட்டுக்குட்டியே பார்த்துக்கொள்ளும். தாயும் குட்டியும் கொஞ்சி விளையாட, கூச்சம் விலகி பால் சுரந்து நிற்கும் மடியில் கை வைத்து பால் கறந்தால் மட்டும் போதும்.

ஆனால் இங்கோ...! கூச்சத்தைப் போக்கவோ, மடியில் பால் சுரக்க வைக்கவோ குட்டியாடுகள் எதுவுமேயில்லை. நாம் தான் அவற்றின் வேலையையும் சேர்த்து செய்ய வேண்டும்.

கூச்சம் விலகிவிட்டதை உறுதி செய்துவிட்டு, பெருவிரலையும் ஆள்காட்டி விரலையும் சேர்த்துப் பிடித்து மேலிருந்து கீழ் நோக்கி காம்பை மெதுவாக அழுத்திப் பீச்ச வேண்டும். அழுத்தம் வலி எடுக்கும் அளவுக்கு போய்விடக்கூடாது. அதே சமயம் அது பால் சுரப்பை வெளியே பீச்சியெடுக்கும் அளவுக்கு தோதான அழுத்தத்திலும் இருக்க வேண்டும்.

பல நாள் பயிற்சிக்குப்பின்தான் இந்த லாவகம் கைகூடும். அந்த லாவகத்தின் அளவுதான் ஒரு கறவைக்காரனின் வேலை மதிப்பு.

பாத்திரத்தில் ஒரு கை, மடியில் மற்றொரு கை என்னும் ரீதியில் பால் கறக்கவே கூடாது. மட்டுமல்ல அதுவொரு நல்ல பழக்கமுமல்ல. பாத்திரத்தை தரையில் வைத்து, ஒரு கையால் பாலை இழுத்துப் பீச்சும் போதே மறுகையால் மடியை இதமாக தடவிக் கொடுத்து வர வேண்டும்.

எப்படிப்பட்ட சண்டைக்காரியாக இருந்தாலும் இந்த இழுப்பில் சொக்கிப்போய்விடும். அதன் பின்பு காலை உதறவோ, துள்ளி ஓடவோ, பால்பாத்திரத்தைக் கவிழ்க்கவோ அதற்குத் தோன்றவே தோன்றாது.

ரம்மியமான அந்தக்காட்சியை–பயங்கரன் ஆடுகளை மயக்கி பால் கறக்கும் அந்தக்காட்சியை–நான் வியப்புடன் பார்த்துக்கொண்டேயிருந்தேன்.

அங்குமிங்குமாக துள்ளி ஓடி எனக்கு தண்ணி காட்டிய ஆடுகள் எப்படி இத்தனை சீக்கிரத்தில் அமைதியாகிவிட்டன என்பதை நினைக்கும் போதே எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

அப்படியாக பயங்கரன் சில ஆடுகளைக் கறந்து முடித்தான். இப்போது என் முறை. நானும் அவனைப் போலவே செய்து பார்த்தேன். ஆனாலும் அதிலொரு போலித்தனமிருந்தது. அந்த செயல்களெல்லாம் விலங்குகளை உண்மையாகவே நேசிக்கும் ஒருவனிடமிருந்து இயல்பாக வெளிப்பட வேண்டுமென்றும், அதை ஆடுகள் தமது உள்ளுணர்வால் வெகு எளிதாக புரிந்து கொள்ளும் என்றும் பின்னால் எப்போதோதான் நான் புரிந்து கொண்டேன். இவை எல்லாவற்றையும்விட முக்கியமானது

அப்போது ஆடு ஒரு முறை தன் உடலை சிலிர்க்கும். மனிதர்களுக்கு மட்டுமல்ல ஆடுகளுக்கும் கூச்சம் உண்டு.

ஒரு இளம் பெண்ணைத் தொடுவது போல் மெதுவாக, மிக மெதுவாக அதன் காம்புகளை வருடி அதன் கூச்சத்தைப்போக்க வேண்டும்.

நம் பக்கங்களில் இந்த வேலைகளையெல்லாம் ஆட்டுக்குட்டியே பார்த்துக்கொள்ளும். தாயும் குட்டியும் கொஞ்சி விளையாட, கூச்சம் விலகி பால் சுரந்து நிற்கும் மடியில் கை வைத்து பால் கறந்தால் மட்டும் போதும்.

ஆனால் இங்கோ...! கூச்சத்தைப் போக்கவோ, மடியில் பால் சுரக்க வைக்கவோ குட்டியாடுகள் எதுவுமேயில்லை. நாம் தான் அவற்றின் வேலையையும் சேர்த்து செய்ய வேண்டும்.

கூச்சம் விலகிவிட்டதை உறுதி செய்துவிட்டு, பெருவிரலையும் ஆள்காட்டி விரலையும் சேர்த்துப் பிடித்து மேலிருந்து கீழ் நோக்கி காம்பை மெதுவாக அழுத்திப் பீச்ச வேண்டும். அழுத்தம் வலி எடுக்கும் அளவுக்கு போய்விடக்கூடாது. அதே சமயம் அது பால் சுரப்பை வெளியே பீச்சியெடுக்கும் அளவுக்கு தோதான அழுத்தத்திலும் இருக்க வேண்டும்.

பல நாள் பயிற்சிக்குப்பின்தான் இந்த லாவகம் கைகூடும். அந்த லாவகத்தின் அளவுதான் ஒரு கறவைக்காரனின் வேலை மதிப்பு.

பாத்திரத்தில் ஒரு கை, மடியில் மற்றொரு கை என்னும் ரீதியில் பால் கறக்கவே கூடாது. மட்டுமல்ல அதுவொரு நல்ல பழக்கமுமல்ல. பாத்திரத்தை தரையில் வைத்து, ஒரு கையால் பாலை இழுத்துப் பீச்சும் போதே மறுகையால் மடியை இதமாக தடவிக் கொடுத்து வர வேண்டும்.

எப்படிப்பட்ட சண்டைக்காரியாக இருந்தாலும் இந்த இழுப்பில் சொக்கிப்போய்விடும். அதன் பின்பு காலை உதறவோ, துள்ளி ஓடவோ, பால்பாத்திரத்தைக் கவிழ்க்கவோ அதற்குத் தோன்றவே தோன்றாது.

ரம்மியமான அந்தக்காட்சியை–பயங்கரன் ஆடுகளை மயக்கி பால் கறக்கும் அந்தக்காட்சியை–நான் வியப்புடன் பார்த்துக்கொண்டேயிருந்தேன்.

அங்குமிங்குமாக துள்ளி ஓடி எனக்கு தண்ணி காட்டிய ஆடுகள் எப்படி இத்தனை சீக்கிரத்தில் அமைதியாகிவிட்டன என்பதை நினைக்கும் போதே எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

அப்படியாக பயங்கரன் சில ஆடுகளைக் கறந்து முடித்தான். இப்போது என் முறை. நானும் அவனைப் போலவே செய்து பார்த்தேன். ஆனாலும் அதிலொரு போலித்தனமிருந்தது. அந்த செயல்களெல்லாம் விலங்குகளை உண்மையாகவே நேசிக்கும் ஒருவனிடமிருந்து இயல்பாக வெளிப்படவேண்டுமென்றும், அதை ஆடுகள் தமது உள்ளுணர்வால் வெகு எளிதாக புரிந்து கொள்ளும் என்றும் பின்னால் எப்போதோதான் நான் புரிந்து கொண்டேன். இவை எல்லாவற்றையும்விட முக்கியமானது

ஆடுகளுடனான தினசரிப் பழக்கம். அவை தினந்தோறும் தனது மடியில் பட்டுக்கொண்டிருக்கும் கை மாறிப்போவதைக்கூட வெகு எளிதாக கண்டு பிடித்துவிடுமாம்.

எப்படியோ ஒரு விதத்தில் ஒரு ஆட்டுக்கு சொக்குப்பொடி போட்டு அதன் மடியில் மெதுவாக என் கையை வைத்தேன். எனது கால்களுக்கு அடியிலிருந்த பால் பாத்திரத்தில் முதல் துளி பால் சீறிப் பாய்ந்தபோது நான் அனுபவித்த திருப்தி... அது வார்த்தைகளால் வர்ணிக்க முடியாத ஒரு பரவச சொர்க்கம்.

படுகஷ்டமான ஒரு தொழில்நுட்பத்தை நான் கற்று தேர்ந்து விட்டதைப் போன்றொரு ஆத்ம திருப்தி. இனிமேல் எனது பாது காப்பில் வளர வேண்டிய ஆடுகளிலொன்று எனக்கு வசியமாகி விட்டது. இனி வெகுவிரைவிலேயே ஒவ்வொன்றாக எனது கட்டுப் பாட்டிற்குள் வந்துவிடும்.

எப்படியோ ஒரு விதமாக அரைப்பாத்திரம் பாலுடன் நான் மஸராவை விட்டு வெளியே வந்தேன். அப்போது அந்த அதிகாலை யிலும் நான் வியர்வையில் குளித்துப்போயிருந்தேன்.

# 14

பெரிய வித்தியாசம் எதுவும் இல்லாமல் மற்றொரு பகலும் மறைந்து போனது. அதற்கிடையே ஆடுகளை வெளியே கொண்டு போய் கொண்டு வருவதிலுள்ள சூட்சுமங்களையெல்லாம் பயங்கரன் எனக்கு சொல்லித்தந்திருந்தான்.

ஆடுகளை பின் பக்கமிருந்து விரட்டாமல் பக்கவாட்டிலிருந்து எப்படி விரட்டுவது, முட்டி மோதி ஓடத் துடிக்கும் ஆடுகளை அடித்து ஒழுங்குபடுத்துவது எப்படி என்று பல்வேறு பாடங்கள். ஒவ்வொரு வேளையும் மஸராவுக்குள் வைக்க வேண்டிய புல், வைக்கோல், கோதுமை போன்றவற்றின் அளவுகளும் அந்தப் பாடத்தில் அடங்கும்.

அன்றைய பகலுக்கு, கடந்த தினங்களை விடவும் வெப்பம் அதிகம் என்றே தோன்றியது. பத்தடி தூரம் நடப்பதற்குள்ளாகவே தொண்டை வறண்டு விடுகிறது. இரும்பு டாங்கின் கொதித்து வாடிய தண்ணீரைக் குடிக்கும்போது தொண்டை எரிந்தது. மட்டுமல்ல அந்த டாங்குத் தண்ணீயைப் பல தடவை குடித்ததில் எனக்கு வயிற்றுப் போக்கும் ஆகிவிட்டது.

அன்றைய காலை உணவுக்குப்பின் நான் பல தடவை வெளிக்குப் போனேன். ஆனால் நேற்றைய கூச்சமெதுவுமே இப்போது இல்லை. லஜ்ஜை எதுவுமில்லாமல் நான் தோன்றும் நேரத்தில் தோன்றிய இடத்தில் 'வெளிக்குப்போக' ஆரம்பித்திருந்தேன்.

தண்ணீரால் கழுவி அர்பாபுவிடம் அடி வாங்குவதற்குப் பதிலாக, நான் கல்லால் சுத்தம் செய்யப் படித்துவிட்டேன்.

ஒவ்வொரு நாட்டிலும் எது சுலபமாக கிடைக்கிறதோ அதைக் கொண்டுதான் சுத்தம்செய்வார்கள் என்பதை நான் நிருபித்தேன்.

வெள்ளைக்காரனுக்கு காகிதம் வெகு சுலபமாக கிடைப்பதால் அவன் காகிதத்தால் சுத்தம் செய்கிறான். தண்ணீருக்கு பஞ்சமேயில்லை என்பதால் நாம் தண்ணீரைப் பயன்படுத்துகிறோம். இங்கோ கல் தான் தாராளமாகக் கிடைக்கிறது. எனவே கல் தான் எனக்கு வசதி.

நடுப்பகலில் வெப்பக்காற்று அனலை அள்ளி வீசியது. உடம்பெங்கும் ஒரே புழுக்கம், அசதி. அதனுடன் வயிற்றுப்போக்கின் தளர்ச்சியும் சேர்ந்த போது நிலைமை படுமோசமானது.

என்னுடைய நிலைமையை அர்பாபுவிடமும் பயங்கரனிடமும் சொல்லிப் பார்த்தேன். ஆனால் அதனால் ஒரு பயனுமில்லை. என்னுடைய வேலைகளில் ஒன்று கூட குறையவில்லை. என்னுடைய அசதியும் களைப்பும் அர்பாபுவிடம் எந்தவித மாற்றத்தையும் ஏற்படுத்த வில்லை. வழக்கம் போலவே வேலை, வேலை... வேலை மட்டுமே.

அந்தி சாய்ந்தபோது கஞ்சிப்பசையை காய்ச்சி ஊற்றியது போல் உடம்பு முழுவதும் ஒரே பிசுபிசுப்பு. வந்ததிலிருந்து குளிக்கவே இல்லாததால் வெளியே சொல்ல முடியாதபடிக்கு ஏதோவொரு அவஸ்தை, எரிச்சல்.

ஆடுகளுக்கு குடிக்கக் கொண்டுபோன தண்ணீரிலிருந்து கொஞ்ச மெடுத்து, அர்பாபுவுக்கு தெரியாமல் நான் முகமும் கையும் கழுவி, குளித்ததாக திருப்திபட்டுக்கொண்டேன். ஆனாலும் தண்ணீரையே காணாமல் கையிடுக்குகளிலும், மர்மப்பிரதேசங்களிலும் ஒரே அரிப்பும் பிசுபிசுப்பும்.

எல்லாவற்றையும் சகித்தபடியே நான் படுக்கைக்குப் போனேன். படுக்கை என்று சொன்னவுடனேயே எனக்கேதோ புதிய படுக்கை கிடைத்து விட்டதாக எண்ணி விடாதீர்கள். இப்போதைய எனது படுக்கை வெறும் புழுதி மண் தரைதான்.

கிடந்த ஒரே கட்டிலையும் பயங்கரன் ஆக்கிரமித்திருக்கிறான். அதற்கு கீழே என்னுடைய பை. அதற்குள்ளிருந்து ஒரு விரிப்பை எடுத்து தரையில் விரிப்பேன். இப்போதே அதன் விளிம்புகள் கசங்கி சுருள ஆரம்பித்து விட்டன. தரையெங்கும் துகள் மணல்தான் என்றாலும் அதில் கலந்திருக்கும் சின்னஞ்சிறு கற்கள் உடம்பில் முள்ளாய் குத்தும், வசதியில்லாத படுக்கை.

அப்படிப்பட்ட மோசமானதொரு சூழ்நிலையில் சின்னஞ்சிறு சுகமாவது தட்டுப்படாதா என்று ஏங்கும் என் புத்தியை என்ன சொல்வது...?

என்னதான் களைப்பாக இருந்தாலும் சரியான படுக்கை இல்லா விட்டால் என்னால் உறங்கவே முடியாது. நான் எதையோ ஆலோசித்த படியே படுக்கையில் கிடந்தேன்.

சொல்லப்போனால் அப்போது ஊரிலிருக்கும் உம்மாவோ, என் ஸைனுவோ, பிறக்கப்போகும் என்மகனோ, மகளோ தான் என் சிந்தனையில் வியாபித்திருக்க வேண்டும். ஏமாற்றங்களும், துயரங்களும்

அணை உடைந்து பாய்ந்திருக்க வேண்டும். எனது வாழ்க்கையும் காலைச் சுற்றிய தலைவிதியும் என் நெஞ்சைத் தீயாய் சுட்டெரித்திருக்க வேண்டும்.

ஆனால் ஏனோ தெரியவில்லை. நானொரு வேற்றுலகவாசி போலாகி விட்டேன். இந்த சிந்தனைகளெல்லாம் எனக்கு அன்னியமானவை களாகத் தோன்றின. ஆனாலும் அதுதான் உண்மை.

பரஸ்பரம் தொடர்பு கொள்ளும் வாய்ப்பும், சூழ்நிலையும் அறவே இல்லை என்று முழுமையாக உணர்வதற்கு எடுத்துக்கொள்ளும் கால தாமதமே நம்மை திரும்பத் திரும்ப அதே சிந்தனைக்குள் அமிழ்த்து கிறது. ஆனால் எனக்கோ அது ஒரு நாளுக்குள்ளாகவே புரிந்து போனது.

வீணாகக் கிடந்து பரிதவிப்பதாலும், அங்கலாய்த்துக் கொண்டிருப் பதாலும் ஒரு பயனும் இல்லை. என் பழைய உலகம் எனக்கு அன்னிய மாகிப் போய்விட்டது.

இனி இந்த புதிய உலகமே என் உலகம். இந்த புதிய உலகின் நடைமுறைகளுக்கு நான் கட்டுப்பட்டவன். கருணையற்ற அதன் கொடூரங்களுக்குள் நான் மூழ்கிக் கொண்டிருக்கிறேன்.

இனிமேல் இந்த வாழ்க்கையோடு எந்த அளவுக்கு பொருந்திப் போக முடியுமோ அந்த அளவுக்கு பொருந்திப் போவதுதான் புத்தி சாலித்தனம். அதுவே இந்த உயிரை எப்படியாவது காப்பாற்றிக் கொள்ள உதவும் ஒரே வழி.

இல்லையென்றால் துயரத்தில் மூழ்கியோ, ஏக்கத்தில் வாடியோ நான் கால வெள்ளத்தில் எங்கோ அடித்துச் செல்லப்பட்டிருப்பேன். என்னைப்போல இப்படி அகப்பட்டுக் கொண்ட ஒவ்வொரு மனிதனும், தன் வாழ்க்கையை இப்படித்தான் வென்று கரையேறிருப்பானோ...?

அப்படியானால் அன்று இரவு நான் எதைப்பற்றி அத்தனை தீவிரமாக ஆலோசித்துக்கொண்டிருந்தேன் என்று நீங்கள் கேட்கலாம்.

உண்மையைச் சொன்னால் மறுநாள் காலையில் மஸராவுக்குள் போய் பால் கறப்பதைப் பற்றித்தான் நான் தீவிரமாக சிந்தித்துக் கொண்டிருந்தேன்.

பயங்கரன் ஆடுகளை வசியப்படுத்தி பால் கறந்ததைப் போல நானும் அவற்றை மயக்கி ஒரு பாத்திரம் நிறைய பாலுடன் மஸரா விலிருந்து வெளியே வருவதாகவும், அதைப்பார்த்து அர்பாபுவின் முகம் பிரகாசமடைவதாகவும் எண்ணி நான் சந்தோஷப்பட்டேன். தன்னந்தனியாக நான் ஒருவனே ஆடுகளை வெளியே கொண்டுபோய் திரும்பி வந்தேன்.

இந்த கனவுகளையெல்லாம் நிஜமாக்குவது எப்படி? அதற்காக நான் என்னை எப்படியெல்லாம் தயார் செய்து கொள்ள வேண்டும்.? இன்று நான் செய்த தவறுகள் என்ன? அவற்றை எப்படித் திருத்து வது...?

நேற்றையைப்பற்றிய கவலைகளோ, நாளையைக் குறித்த ஏக்கங்களோ எதுவும் என்னிடமில்லை. இன்றையப் பொழுதை எதிர்கொள்வது எப்படி என்னும் ஒரேயொரு சிந்தனை மட்டுமே.

என்னுடைய மஸரா வாழ்க்கை முழுவதுமே இப்படித்தான் இருந்ததாக எனக்குத் தோன்றுகிறது.

படுக்கையில் கிடந்தபடியே நான் இதுவரை படித்த அரபிச் சொற்களையும் அவற்றிற்கான பொருளையும் மீண்டுமொருமுறை சரிபார்த்தேன். இரண்டு தினங்கள் தான் ஆகியிருக்கின்றன. ஆனால் அதற்குள் நான் தேவைக்கும் அதிகமான சொற்களை படித்துவிட்டதாக எனக்குத் தோன்றியது.

நான் படித்த சில அரபி சொற்களும் அவற்றின் பொருளும்:

அர்பாபு – பாதுகாவலன்

மஸரா – ஆட்டுத்தொழுவம்

குபூஸ் – எனக்குக் கிடைக்கும் ஒரே உணவுப்பொருள்

மாயில் – கிடைப்பதற்கரிய, மிகக் கவனமாக பயன்படுத்தப்பட வேண்டிய ஒரு திரவம் (அதை வெறும் தண்ணீர் என்று சொல்லி கேவலப்படுத்த வேண்டாம். நமக்குத் தண்ணீர் ஒரு பொருட்டல்ல. ஆனால் அர்பாபுக்கோ அது மதிப்பு மிக்கது.)

கனம் – ஆடு, ஹலீப் – பால், திபின் – வைக்கோல், பர்ஸி – புல், ஜமல் – ஒட்டகம்.

லா – இல்லை, ஜீ ஹாம் – சரி அர்பாபு...

எனக்குத் தெரிந்த இந்த சொற்களைப் பற்றி ஆலோசித்த போதுதான் எனக்குத் தெரியாத ஆனால் தெரிந்தாக வேண்டிய இன்னும் ஏராள மான சொற்கள் இருக்கின்றன என்று எனக்குப் புரிந்தது.

அவற்றையும் கேளுங்கள்: கோதுமை, பாத்திரம், டாங்க், வசை, கூடாரம், போன்றவற்றுடன் வந்தான், போனான், செய்யவில்லை, தெரியாது போன்ற ஏராளமான வினைச் சொற்களின் அரபிச் சொற்களும் எனக்குத் தெரியாது.

அங்கே நான் பேசிய அரபுச் சொற்களின் உச்சரிப்பும் பொருளும் உண்மையிலேயே அப்படித்தானா என்று அரபி தெரிந்த உங்களின் யாரேனும் கேட்டால், 'எனக்குத் தெரியாது' என்பது தான் என் பதிலாக இருக்கும்.

அந்தச் சொற்களை நான் அப்படித்தான் கேட்டிருந்தேன் – புரிந்திருந்தேன். அதனால் என்னைப் பொறுத்தவரை அவைதான் சரியான சொற்கள் – சரியான உச்சரிப்பு. ஆனாலும் ஒரு சொல்லில் அப்படி என்னதானிருக்கிறது? புரிதலே இங்கு முக்கியம்.

இந்த சொற்களால் அர்பாபு சொன்னது எனக்குப் புரிந்தது. நான் சொன்னது அர்பாபுவுக்கு புரிந்தது. இதை மீறிய மொழிப்புலமை யெதுவும் எனக்குத் தேவைப்படவில்லை.

நினைப்பும், சிந்தனையுமாக நேரம் அப்படியே வழிந்து கொண்டிருந்தது. அப்போது என் உடம்பிலிருந்த வலியும் மாயமாய் மறைந்து போயிருந்தது. சற்றுநேரத்தில் அசதியும், உறக்கமும் என்னைப் போர்த்தியது. அதன் பின் உறக்கம், அடித்துப்போட்டது போல் ஆழ்ந்த உறக்கம்.

அப்போது நேரம் கட்டாயம் நடு இரவைத் தாண்டியிருக்க வேண்டும். ஆனால் அது எதுவுமே எனக்கு நினைவிலில்லை. பொழுது நன்றாகப் புலர்ந்த பிறகு தான் நான் படுக்கையிலிருந்து எழுந்தேன்.

ஆனால் எனக்கு முன்பே கிழக்கில் சூரியன் கண் விழித்திருந்தான்.

கட்டிலைப் பார்த்தேன். வெறுமையாகக் கிடந்தது.

பயங்கரன் அதற்குள்ளாகவா எழுந்து வேலைகளைப் பார்க்க ஆரம்பித்துவிட்டான்? அப்படியானால் அவன் பால் கறந்து முடிப்பதற்குள் நான் அங்கு போய் விடவேண்டுமே?

நான் மஸராவை நோக்கி வேகமாக ஓடினேன். ஆனால் அங்கே பயங்கரனைக் காணவில்லை.

வழக்கத்திற்கு மாறாக இன்று ஆடுகளுக்கு இன்னமும் தண்ணீர் கொடுக்கப்படவில்லை, புல் வைக்கப்படவில்லை, தொட்டியில் கோதுமையைக் காணவில்லை.

வழக்கம் தவறியதால் மஸராவுக்குள் ஆடுகள் பதட்டத்துடன் அங்குமிங்குமாக அலைபாயத் தொடங்கியிருந்தன.

பயங்கரன் வேறேதோ வேலையாக பக்கத்து மஸராவுக்கு போயிருப்பான் என்று நினைத்து ஒவ்வொரு மஸராவாக தேடிப்பார்த்தேன். அவன் எங்குமே இல்லை.

எனக்கு ஆச்சரியமாக இருந்தது. இத்தனை காலையில் அவன் எங்கே போயிருப்பான்?

நான் திரும்பி கட்டிலுக்கு வந்தேன். எனக்குள் ஏதோவொரு சந்தேகம் குறுகுறுத்தது.

சட்டென்று நான் குனிந்து கட்டிலுக்கடியில் பார்த்தேன்.

அங்கே எனது பைக்கு பக்கத்தில் அவனுடையது என்று நம்பும் படியான தூசி படிந்த பெட்டியொன்று நேற்று வரை கிடந்தது. அதை இப்போது காணவில்லை. என்னுடைய சந்தேகம் வலுத்தது.

அப்போது கூடாரத்திலிருந்து வெளியே வந்த அர்பாபு என்னுடைய கையில் ஒரு பாத்திரத்தை தந்து பால் கறந்து வரும்படியாக சொன்னான்.

சந்தேக கண்களுடன் நான் அர்பாபுவின் முகத்தையே பார்த்தேன். 'பயங்கரன் எங்கே போயிருக்கிறான்?' என்பதே அந்த பார்வையின் பொருள் என்று அர்பாபுவுக்கு நன்றாகவே புரிந்திருக்கும்.

அப்போது அர்பாபு என்னிடம் நீண்ட நேரம் என்னவெல்லாமோ சொன்னான். அதில் கோபம், வசை, பரிதாபம், நிர்தாட்சண்யம்,

ஏளனம் என்று எல்லாமே கலந்திருந்தது.

அவனது பேச்சிலிருந்து நான் புரிந்துகொண்டது இதுதான்.

அவன், என்னுடைய பயங்கரன். இந்த நரகத்திலிருந்து எப்படியோ தப்பி ஓடிவிட்டான்!

# 15

வெறும் இரண்டே இரண்டு நாள் பழக்கம்தான். அதைப்பழக்கம் என்று சொல்லமுடியுமா என்று கூட எனக்குத் தெரியவில்லை. நாங்கள் ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டது ஒன்றிரண்டு சொற்கள் மட்டுமே. ஊர், பேர் எதுவுமே தெரியாது.

ஆனாலும் அந்த பயங்கரன் போய்விட்டான் என்று கேட்டபோது என் மனதுக்குள் ஏதோவொரு வலி. அந்த வேதனையின் காரணம் என்னவென்று எனக்குப் புரியவில்லை. ஒருவேளை தனித்துவிடப்பட்டு விட்டோமே என்ற ஏக்கத்திலிருந்து அது உருவாகியிருக்கலாம். என் உடம்பிலிருந்த சக்தியெல்லாம் வடிந்தது போல் தோன்றியது.

திடீரென ஒரு நாள் அப்பா இறந்துபோய்விட்டார் என்றோ, அம்மா காலமாகிவிட்டாள் என்றோ, சொந்த மகன் அல்பாயுசில் போய்விட்டான் என்றோ கேள்விப்படும் போது ஏற்படும் சோர்வும், தளர்ச்சியும், பலவீனமும் ஒன்று சேர்ந்து என்னைத் தாக்கின.

ஆனால் விஷயத்தை என்னிடம் சொல்லிவிட்டுப் போகும் அர்பாபு வின் முகத்திலோ கவலையின் சுவடுகள் எதுவுமேயில்லை.

'அவன் போய்விட்டான், அவ்வளவுதான்' என்ற மட்டில்.

'அவன் எங்கே போனான்? யாருடன் போனான்? என்பதைப் பற்றியெல்லாம் எனக்கு கவலையில்லை' என்ற மட்டில் இருந்தது அர்பாபுவின் செயல்கள்.

சட்டென்று என் உள்ளத்தில் ஏதோவொரு நம்பிக்கை கீற்று பளீரிட்டது.

ஒரு வேளை நான் போய்விட்டேன் என்று கேள்விப்பட்டாலும் அர்பாபு இப்படித்தான் விட்டேத்தியாக இருப்பானோ...?

பயங்கரன் போனாலென்ன, நஜீப் இருக்கிறான். இந்த நஜீப் போனால் வேறொருத்தன்... அவ்வளவுதான்.

முதல் நாள் பார்த்த அர்பாபுவின் கோபமும், நடவடிக்கைகளும் எனக்குள் பீதியை ஏற்படுத்தியிருந்தது. துப்பாக்கியால் வானத்தை பார்த்து சுடுகிறான். பைனாகுலரை கையில் தந்து அதன் தூரக் காட்சியைக் காட்டித் தருகிறான்.

ஆடுகளுடன் நாங்கள் வெளியே போகும் போது காருக்கு மேலிருந்து எங்கள் நடவடிக்கைகளை வேவு பார்க்கிறான்.

நாங்கள் நெடுந்தொலைவுக்கு போய்விட்டோம் என்று தோன்றினால் வண்டியை எடுத்து வந்து எங்களைச் சுற்றிலும் ரோந்து வருகிறான். அப்போதெல்லாம் இந்த நரகத்திலிருந்து வெளியேற அவன் அனுமதிக்க மாட்டான் என்று தான் எனக்கு தோன்றியது.

பயங்கரனின் ஒவ்வொரு செயலிலும் அப்படிப்பட்ட பயமும் எச்சரிக்கையும் கலந்திருந்ததை நான் கவனித்திருக்கிறேன்.

அவன் எனக்குச் சொல்லித் தந்த, சொல்ல முயன்ற சொற்களிலும் அந்த பீதியையே என்னால் பார்க்க முடிந்தது.

'தப்பிப் போக முயலாதே. அப்படிப்போனால் இவன் உன்னைக் கொன்று குழிதோண்டிப் புதைத்துவிடுவான். இவன் கொடூரமானவன், கருணை வற்றிப்போனவன்.'

இதையெல்லாம் எனக்கு சொல்லித்தந்தவன், தான் மட்டும் எப்படியோ தப்பியோடியிருக்கிறான். துரோகி! என்னை எதிர்பார்த்துத் தான் இத்தனை நாளாக காத்திருந்திருக்கிறான் போலும்...! என் தலையில் எல்லா சுமையையும் ஏற்றிவிட்டு தப்பிப் போய்விட்டான். நான் தப்பிப் போய்விடக்கூடாது என்பதற்காகவே இந்த அண்டப் புளுகுகளையெல்லாம் என்னிடம் அவிழ்த்து விட்டிருக்கிறான், கள்ளப்பயல்.

எங்கள் அர்பாபுவைப் பாருங்கள், அவன்தான் எத்தனை சாந்தமானவனாக இருக்கிறான். அவன் போனதைப் பற்றி அர்பாபுவுக்கு கோபமேயில்லை. போனால் போகட்டும் என்று எத்தனை சாந்தமாக இருக்கிறான். அதைப்பார்க்க எனக்கு சந்தோஷமாக இருந்தது.

என்னுடைய சந்தோஷத்திற்கு மூன்று காரணங்கள்:

முதலாவது, பயங்கரன் இந்த துயரக்கடலிருந்து எப்படியோ தப்பியோடியிருக்கிறான்.

அடுத்தது, என்றாவதொரு நாள், நானும் இது போல் இங்கிருந்து தப்பியோடிவிடலாம்.

மூன்றாவது விஷயம் தான் முக்கியமானது: இத்தனை நாட்களாக பயங்கரனுக்கு உரிமையாக இருந்த கட்டில் இப்போது என் கைக்கு வந்து விட்டது. இனிமேல் கட்டாந்தரையில் கிடந்து கஷ்டப்பட வேண்டாம்.

இந்த மூன்றிலும், 'என்றாவதொரு நாள் நாமும் தப்பிப்போக முடியும்' என்ற நினைப்பு எனக்கு படு உற்சாகத்தைத் தந்தது.

நான் பால் பாத்திரத்துடன் மஸராவுக்குள் ஓடி சில ஆடுகளிடம் பால் கறந்தேன். என்னுடைய அனுபவக்குறைவு அங்கே வெளிப்பட்டாலும், கடந்த நாட்களை விடவும் நிலைமை பரவாயில்லை. ஆடுகளிடமிருந்து அப்படியொன்றும் உதை கிடைக்கவில்லை.

ஒரு சொட்டு பால் கூட பாத்திரத்தில் விழாத நிலைமையிலிருந்து நான் முன்னேறியிருந்தேன். இந்த இரண்டு நாட்களில் இதுவொரு பெரிய முன்னேற்றம் என்றே சொல்லவேண்டும்.

உடனே நான் அந்த பயங்கரான் அளவுக்கு திறமைசாலியாகி விட்டேன் எனறு நினைத்து விடாதீர்கள்.

கறந்த பாலில் கொஞ்சமெடுத்து அர்பாபுக்கு கொடுத்தேன். மீதியைக் குட்டியாடுகளின் மஸராவுக்குள் கொண்டுபோய் வைத்தேன்.

அதன்பின் முதுகொடியும் வேலை. இதற்கு முன்னால் நாங்கள் இரண்டு பேர் செய்த வேலைகளையெல்லாம் இப்போது நான் ஒருவனே செய்ய வேண்டியிருந்தது.

ஒட்டகங்களுக்குத் தீவனம் கொடுத்த பிறகு அவற்றை திறந்து வெளியே விட்டேன். மஸராவுக்குள் தேவையான புல், வைக்கோல், கோதுமையைக் கொண்டு வைத்தேன். தொட்டிகளில் தண்ணீர் நிரப்பினேன். அதற்கிடையே தண்ணீர் லாரி வர, அந்த தண்ணீரை டாங்கில் நிறைக்க அவனுக்கு உதவி செய்தேன். வைக்கோல் கட்டுகளுடன் வந்த டிராக்டரிலிருந்து கட்டுகளை இறக்கி வைத்து உதவினேன்.

எவ்வளவு வேகமாக செய்தாலும் வேலைகளொன்றும் தீர்ந்த பாடில்லை. தினமும் காலையில் ஆடுகளுடன் வெளியே போகும் வேளை வரும்போது (நிழலைப்பார்த்து நேரத்தைக் கணக்கிடத் தொடங்கியிருந்தேன் நான்) பாதி மஸராவுக்குகூட நான் புல் வைத்திருக்க மாட்டேன்.

கூடாரத்துக்குள்ளிருந்தபடியே என்னுடைய ஓட்டத்தையும், நடையையும் பார்த்துக்கொண்டிருந்த அர்பாபு, ஆடுகளை வெளியே கூட்டிக்கொண்டு போக தாமதமானதற்காக என்னை வசைபாடினான்.

'என்னால் இவ்வளவு தான் செய்ய முடியும்' என்று நான் ஒரு போடு போட்டேன்.

ஆனால் அர்பாபு அதற்கு தன் பெல்ட்டால் எனக்கு பதில் சொன்னான்.

மொழிச்சிக்கல் எதுவுமில்லாத நல்ல பதில்.

நல்ல சுத்தமான தோலால் செய்யப்பட்ட அந்த பெல்ட் விளாசலில் நான் துடித்துப் போனேன். என் முதுகின் குறுக்காக பதிந்த அடித் தழும்பும், வலியும் மறைய ஆறு மாசத்துக்கும் மேலானதாக நினைவிருக்கிறது.

நான் மஸராவுக்கு திரும்பி நடக்கும் போது அர்பாபு கோபத்தில் ஏதோ முணுமுணுத்தான்.

அது 'நேற்று வரைக்கும் அவன் ஒருவன் செய்த வேலைதானடா இது?' என்பதாகத்தான் இருக்கும் என்பதில் எந்த சந்தேகமுமில்லை.

சில சந்தர்ப்பங்களில் பழக்கமில்லாத மொழி கூட நமக்கு தெளிவாகப் புரிந்து போகும்.

நான் அழுதுகொண்டே பாக்கி கிடந்த வேலைகளைப் பார்க்க தொடங்கினேன். இந்த களேபரங்களுக்கிடையில் காலைச் சாப்பாடு மறந்தே போய்விட்டது. அதற்காக அர்பாபு என்னைக் கூப்பிடவுமில்லை.

இரண்டு மஸரா ஆடுகளைத்தான் வெளியே கொண்டுபோய் வந்திருப்பேன். அப்போது அர்பாபு என்னை கூப்பிடும் சத்தம் கேட்டது.

நன்கு வளர்ந்த ஆடுகளை சந்தைக்கு கொண்டு போவதற்காக வண்டி வந்திருக்கிறது. நல்ல முதிர்ந்த ஆடுகளாகத் தேடிப் பிடித்து வண்டிக்குள் ஏற்ற வேண்டும்.

வண்டி கொண்டு வந்திருப்பதோ என்னுடைய பெரிய அர்பாபு. கூடமாட உதவிக்கு வேறு யாருமே இல்லை.

நான் ஆட்டுக்கொட்டைகைக்குள் நுழைந்தேன்.

இரண்டு அர்பாபுக்களும் வெளியே நின்றபடியே ஒரு ஆட்டை கைகாட்டி 'ஆதி' என்று சொல்வார்கள்.

நான் அதைப் பிடிக்க ஓடுவேன்.

தண்ணீரில் நழுவும் விலாங்கு மீன் போல அது என் கைக்கு அகப்படாமல் துள்ளிக் குதித்து தப்பியோடும். நானும் விடாமல் எப்படியோ அதைத் துரத்திப் பிடித்து (எப்படி பிடிக்க முடியும், கழுத்தில் ஒரு துண்டு கயிறு இருந்தாலாவது வசதியாக இருந்திருக்கும்.) ஒரு வழியாக அதை வண்டிக்கு இழுத்துக்கொண்டு போவேன்.

இனி அதை வண்டிக்குள் ஏற்றுவதுதான் பெரும்பாடு. என் ஒருவனால் அந்த ஆடுகளை வண்டிக்குள் ஏற்றுவது மகா சிரமமான காரியம்.

ஆடுகள் தாமாகவே போய் வண்டிக்குள் ஏறவே செய்யாது. திமிறிக்கொண்டிருக்கும் ஒவ்வொன்றையும் பெரும்பாடுபட்டுத்தான் வண்டிக்குள் ஏற்ற வேண்டும்.

அதற்காக எவ்வளவு சக்தியும், நேரமும் வீணடித்தேன் என்று எனக்கே தெரியாது. எப்படியோ ஒரு விதத்தில் ஒன்றிரண்டு ஆடுகளை வண்டியில் ஏற்றி முடித்த போதே நான் சோர்ந்து போனேன்.

ஆனால் ஈவிரக்கமில்லாத அர்பாபுக்களோ என்னை மீண்டும் மீண்டும் மஸராவுக்குள் விரட்டிக்கொண்டிருந்தார்கள்.

அவர்கள் மஸராவுக்குள் சுட்டிக்காட்டி 'ஆதி', 'அபியத்' என்று சொல்வார்கள்.

அது என்னவென்றே எனக்குப் புரியாது. நான் பக்கத்தில் நின்று கொண்டிருக்கும் கறுப்பு ஆட்டைத்தான் சொல்கிறார்கள் என்று எண்ணி அதைப் பிடிக்க பாய்வேன்.

'ஹிமார், மாஃபி அஸ்வத், அபியத், அபியத்...' என்று அர்பாபுக்கள் சீறுவார்கள்.

அது இல்லை என்று நினைத்து நான் வேறொரு ஆட்டைப் பிடிக்க பார்ப்பேன்.

'ஹிமார், மூக்மாஃபி இந்தி. ஆதி அபியத்...' அர்பாபுக்கள் தமது தலையிலடித்துக் கொள்வார்கள்.

இப்படியாக பலதடவை ஆடுமாறிப்போய், கடைசியில்தான் அங்கே நிற்கும் வெள்ளைக் கிடாவைத்தான் அர்பாபுக்கள் பிடிக்கச் சொன்னார்கள் என்று எனக்குப் புரிந்தது.

நான் அதை தரதரவென இழுத்துக்கொண்டு போய், பெரும்பாடு பட்டு வண்டிக்குள் உதைத்து தள்ளிவிட்டு, மீண்டும் மஸராவுக்குள் ஓடுவேன்.

அர்பாபு 'அஸ்வத்' என்று சொல்வான்.

நான் எடக்கு மடக்காக எதையாவது செய்துவிட்டு, கடைசியில் அர்பாபு உத்தேசித்த கறுப்பு ஆட்டைப் பிடித்துக்கொடுப்பேன்.

இப்படியாக இருபதுக்கும் அதிகமான ஆடுகளைப் பிடித்து கொடுத்து என் நாடி நரம்புகளெல்லாம் சல்லடையாக நொறுங்கிப் போய் விட்டது.

நான் எனக்குள்ளேயே யார் யாரையோ சபித்தேன். என்னுடன் இருந்தவன் ஓடிப்போனதற்காக எனக்கு கிடைத்த பரிசு – முதுகொடியும் வேலை! ஒரு போதுமே மறக்கமுடியாத பெல்ட்டடி! மதியம் வரையில் முழுப்பட்டினி!

# 16

தன்னந்தனியாக ஒரு வாழ்க்கையை எதிர்கொள்ள, எனக்கு நானே வேலையில் பயிற்சி பெற, தனியொருவனாக ஒரு உயிர்க்கூட்டத்தையே சமாளிக்க, ஒற்றைக்கு ஒரு சூழ்நிலையோடு ஒத்துப்போக நான் கற்றுக்கொள்ள ஆரம்பித்திருந்தேன்.

உடனே அது ஏதோவொரு அதிமுக்கியமான தீர்மானத்தின் ஒரு பகுதியென்று நினைத்துவிடாதீர்கள். அப்படி இருப்பதைத் தவிர எனக்கு வேறு வழியே இல்லை... அதுதான் உண்மை.

முதுகொடிய வேலை செய்தால்தான் நாக்கை நனைப்பதற்காக வாவது ஒரு குவளை தண்ணீர் கிடைக்கும் என்ற சூழ்நிலையில் முதுகொடிய என்ன, மரணம் வரை கூட வேலை செய்ய மனிதன் தயாராகி விடுவான்!

பயங்கரன் இருக்கும்போது திரும்ப திரும்ப ஒரே வேலையைத் தான் செய்து கொண்டிருந்தேன். வேலையில் சவால் எதுவும் இல்லை. இப்போதோ எல்லா வேலைகளும் என் தலையில். ஆனாலும், சீக் கிரத்திலேயே அந்த வேலைகளையெல்லாம் செய்யப் படித்துவிடலாம் என்று ஏதோவொரு தைரியம் மனதிற்குள்.

பால் கறப்பதற்கும், ஆடுகளை வெளியே கொண்டு போய் வரு வதற்கும் மட்டும் தான் கொஞ்சம் பயிற்சி தேவை. மற்ற வேலைகளை யெல்லாம் ஒரு குருடன் கூட செய்து முடித்துவிடலாம். தேவையெல் லாம் கொஞ்சம் ஆரோக்கியம் மட்டுமே. இப்படித்தான் நான் நினைத்துக் கொண்டிருந்தேன்.

ஆனால் நாட்கள் போகப் போக ஆடுகளின் வாழ்க்கை, ஆடுகளை வளர்க்கும் விதம், ஒட்டகங்களின் தினசரி பழக்க வழக்கங்கள் என்று

படிப்பதற்கு ஏகப்பட்ட விஷயங்கள் இருந்தன. சூழ்நிலைகள்தான் மனிதனை எதற்கும் தயாராக்கி விடுகிறதே!

ஒருநாள் வழக்கம் போல் ஆடுகளையும் கூட்டிக்கொண்டு வெளியே போக தயாராகிக் கொண்டிருந்தேன். நான் அங்கு போய் சேர்ந்து ஏகதேசம் ஒரு வாரம் தான் ஆகியிருக்கும்.

கூட்டத்தில் ஒரு கர்ப்பிணியாடும் இருந்தது, என்னுடைய சைனுவைப் போலவே.

நடக்கத் தொடங்கியபோதே அது பலவீனத்துடன் தள்ளாடிக் கொண்டிருந்தது.

அதையும் வெளியில் கூட்டிக்கொண்டு போக வேண்டுமா என்று அர்பாபுவிடம் போய் கேட்டேன்.

'கொண்டு போ' என்று அர்பாபு தலையாட்டினான்.

பாதி தூரம் தான் போயிருப்போம். அதற்குள் அது வழியிலேயே படுத்துவிட்டது.

நான் பதட்டத்துடன் அதன் பக்கத்திலேயே நின்றேன்.

சற்று நேரத்தில் அது தரையில் கிடந்து நெளியத் தொடங்கியது.

அப்போதுதான் எனக்குப் புரிந்தது, அது பிரசவ வலி என்று.

அதை எப்படியாவது மறுபடியும் மஸராவுக்கே கொண்டு போய் விடலாம் என்று நினைத்து அதை என் இரண்டு கைகளாலும் வாரி எடுத்தேன்.

ஆனால் நான் சில அடிகள் எடுத்து வைப்பதற்குள்ளேயே அது மீண்டும் அந்த பாலைவனத் தரையில் விழுந்துவிட்டது.

இதற்கிடையே மற்ற ஆடுகளெல்லாம் வெகுதூரத்துக்குப் போய் விட்டிருந்தன. மட்டுமல்ல அவை அங்கொன்றும் இங்கொன்றுமாக அலைந்து திரியத் தொடங்கியிருந்தன.

மந்தையாக போகும் வரைதான் கட்டுப்பாடெல்லாம். ஒரு ஆடு பிரிந்துவிட்டால் போதும்... பின்பு முடிந்தது கதை.

அவற்றுக்கு தம் பூர்வ ஜென்ம வாசனை வந்து விடும். பல்லாயிரம் ஆண்டுகளாக மனிதனின் வளர்ப்பு பிராணியாக வலம் வந்தாலும், வாய்ப்பு கிடைத்தால் பழைய காட்டு புத்திக்கே திரும்பிப்போய்விடும் ஒரேயொரு வளர்ப்பு பிராணி கோலாடுகள் மட்டுமே! அதனால் தான் இவற்றை மந்தையிலிருந்து வெளியேற விடாமலும், வரிசை யிலிருந்து பிரிந்து போய்விடாமலும் மிக கவனமாக பார்த்துக்கொள்ள வேண்டும் என்று பயங்கரன் எனக்கு முதல் நாளே எச்சரிக்கை செய்திருந்தான்.

இப்போதோ... ஐம்பது ஆடுகளும் ஐம்பது வழிக்குப் போயிருந்தன. ஒன்று வழியில் பிரசவத்திற்காக விழுந்து கிடக்கிறது.

அப்போது நான் அனுபவித்த மன வேதனை...

இப்போது என்ன செய்ய?

பிரசவ ஆட்டை அங்கேயே விட்டுவிட்டு மற்ற ஆடுகளின் பின்னால் போவதா? இல்லை அவை எங்காவது போய்த் தொலையட்டும் என்று விட்டுவிட்டு, பிரசவ வேதனையில் துடித்துக்கொண்டிருக்கும் அந்த ஆட்டுக்கு துணையாக நிற்பதா...?

கடைசியில் தொண்ணூற்றியொன்பதையும் விட்டுவிட்டு ஒன்றைத் தேடி நடந்த இடையனின் கதையை மனதிற்குள் நினைத்தபடியே, நான் பிரசவக்காரியின் பக்கத்தில் நிற்க முடிவெடுத்தேன்.

ஆடு என்றில்லை, வேறு எந்தவொரு விலங்கின் பிரசவத்தையுமே நான் பார்த்ததில்லை. அதன் ரீதிகளைப் பற்றி எனக்கு எதுவுமே தெரியாது. அந்த நேரத்தில் ஒரு விலங்குக்கு எந்தவிதமான உதவிகள் தேவைப்படும் என்று கூட எனக்குத் தெரியாது.

என்னுடைய வீட்டில் பசுவோ, ஆடோ, நாயோ, பூனையோ எதுவுமே கிடையாது. பக்கத்து வீடுகளில் போய் அவற்றின் பிரசவத்தைப் பார்க்கப் போனதும் கிடையாது. அதனால் வெறும் ஒரு பார்வையாளனாக அதன் அவஸ்தையைப் பார்த்துக்கொண்டு நிற்பதைத் தவிர என்னால் வேறு எதுவும் செய்ய முடியவில்லை.

சற்று நேரத்தில் ஒரு ஆட்டின் தலை வெளியே வர ஆரம்பித்தது. நான் பயத்துடன் அதையே பார்த்துக்கொண்டிருந்தேன். வேதனையின் சர்வ நாளங்களையும் விழுங்கிக்கொண்டு அந்த குட்டி தாயாட்டின் வயிற்றிலிருந்து மெல்ல வழுகி வந்து கொண்டிருந்தது.

இப்போது கீழே விழுந்துவிடும் என்ற நிலை வந்த போது, நான் அனிச்சையாய் என் கையை நீட்டி அது தரையில் விழுந்து விடாமல் தாங்கிப் பிடித்தேன். ஆனாலும் அதன் உடலைச்சுற்றியிருந்த வழு வழுப்பால் என்னால் அதை வெகுநேரம் கையில் வைத்துக் கொண்டிருக்க முடியவில்லை.

சற்று நேரத்தில் அது பழம் நழுவுவதைப் போல் என் கையிலிருந்து நழுவி தரையில் விழுந்தது. சட்டென்று என் மனதில் ஒரு பழைய கை வைத்தியம் பளிச்சிட்டது.

மாச்சு நீக்க வேண்டுமே...?

நான் அந்த ஆட்டுக்குட்டியின் உடம்பிலும், முகத்திலும் படர்ந்திருந்த மாசியை கைகளால் வழித்துத் துடைத்தேன். ஆனால் தாய் ஆடோ என்னை விடவும் புத்திசாலியாக இருந்தது. அது ஒரு சில நிமிடங்களுக்குள் அந்த குட்டியின் உடல் முழுவதையும் தன் நாக்கால் நக்கி சுத்தப்படுத்திவிட்டது.

இந்த ஆடுகள் தான் எத்தனை வேகமாக வளர்கின்றன. ஒரு சில நிமிடம்கூட கழிந்திருக்காது. கால்களைப் பரப்பிக்கொண்டு மெதுவாக எழுந்திருக்க முயற்சித்த அந்த குட்டியாடு, வெகு சீக்கிரத்திலேயே நிற்கப் பழகிவிட்டது.

பின் அங்குமிங்குமாக தள்ளாடிக்கொண்டே அது மெதுவாக தன் அம்மாவின் மடியைத் தேடியது.

அதுவொரு ஆண் ஆடு!

அந்த கணத்தில் அதுவரை என்னைச் சுற்றியிருந்த மன இறுக்கங்களெல்லாம் அணை உடைத்த வெள்ளமாக வடிந்து போனது.

ஒரு நொடிக்குள் என் மனம் என் ஊரை நோக்கி தாவியது. அதன் வேகத்தை வார்த்தைகளால் விவரிக்க இயலாது. அத்தனை நாட்களாக நான் மறந்து போயிருந்ததெல்லாம் என் மனதில் மீண்டும் ஆர்ப்பரித்து வந்தன

என்னுடைய சைனு கர்ப்பிணி. அவள் எந்த நிமிடமும் பிரசவிக்கலாம் என்ற நிலையில்தான் ஊரிலிருந்து நான் புறப்பட்டு வந்தேன். அதன்பின் அவளைப்பற்றி என்னால் எந்த தகவலையும் அறிய முடியவில்லை.

இந்த சம்பவம் ஒரு வேளை ஏதாவதொரு சுப சகுனமாக இருக்குமோ...?

இது அல்லாஹு வே எனக்கு நேரடியாகத் தந்தது.

'எனது சைனு, என் மனைவி பிரசவித்திருக்கிறாள், அதுவும் நான் விரும்பியபடியே ஒரு ஆண் மகனை.'

அந்த நம்பிக்கையில் நான் அப்போதுதான் பிறந்திருந்த அந்த ஆட்டுக்குட்டிக்கு ஒரு பெயர் வைத்தேன்.

நபீல்!

என் மகனுக்காக நான் பாதுகாத்து வைத்திருந்த பெயர்.

என்னுடைய கையும், உடுப்பும் மாசியின் பிசுபிசுப்பால் நனைந்து போயிருந்தன.

எங்கே போய் கழுவுவது...?

ஆடுகளில்லாமல் மஸராவுக்குள் போனால் அர்பாபுவின் வசவு நிச்சயம்.

என்ன செய்வது? நான் எதையுமே ஆலோசிக்கவில்லை.

சட்டென்று என்னுடைய உடுப்பிலேயே அந்த அழுக்குகளையெல்லாம் துடைத்துக்கொண்டேன்.

அதன் பின் அம்மாவின் மடிதேடி அலைந்து கொண்டிருந்த அந்த அழகான குட்டியை என் கைகளில் வாரியெடுத்து அதற்கு ஒரு முத்தம் கொடுத்தேன்.

நபீல், நீ எனக்கு அல்லாஹ் தந்த ஒப்பற்ற பரிசு!

என் செல்லமே, நீ சுகமாக வாழவேண்டும்....!

நான் நபீலை அவனுடைய அம்மாவின் அருகில் கொண்டு போனேன். பின் மெதுவாக அவன் முகத்தைப் பிடித்து தாயாட்டின் மடியில் கொண்டு போய் வைத்தேன்.

அப்போது எங்கிருந்தோ ஒரு வேகமான உதை என் முதுகில் வந்து இறங்கியது. அதன் வேகம் தாங்காமல் நான் பொறி கலங்கி தலை குப்புற மண்ணில் விழுந்தேன்.

பிரக்ஞையற்றுப்போன அந்த ஒரு சில கணங்களுக்குப்பின் நான் மெதுவாக கண்களைத் திறந்த போது தான் தெரிந்தது, அது அர்பாபுவின் கைங்(கால்) கர்யமென்று.

கண்களில் கனல் வீச எதிரே அர்பாபு நின்று கொண்டிருக்கிறான். அவன் தொலைவில் கைகாட்டிக்கொண்டு ஏதோ அலறினான்.

அவன் காட்டிய திசையில் பார்த்தபோது தான் தெரிந்தது, ஆடுகளெல்லாம் ஆங்கங்கே சிதறிக் கிடக்கின்றனவென்று.

ஆடு, பிரசவம், குட்டி, மாசி... என்று என் வாய் ஏதேதோ குழறியது. ஆனால் அர்பாபுவோ அதையெல்லாம் கேட்கும் மன நிலையில் இல்லை.

வேகமாக வந்த அர்பாபு என் நபீலை அவன் தாய் மடியிலிருந்து வலுக்கட்டாயமாக பிடித்திழுத்தான்.

அதன் பின் எனது பரிதாபப் பார்வையையும், தாயாட்டின் வேதனை நிறைந்த கண்களையும் அலட்சியப்படுத்திவிட்டு, நபீலை தன் தோளில் போட்டபடியே மஸராவை நோக்கி நடந்தான்.

தாயாட்டை அங்கேயே விட்டுவிட்டு நான் சிதறிக்கிடந்த ஆடுகளை பொறுக்க ஓடினேன்.

பெரும்பாடுபட்டுத்தான் என்னால் அவற்றையெல்லாம் ஒன்று சேர்க்க முடிந்தது.

நான் அவற்றுடன் மஸராவுக்குத் திரும்பியபோது, நிராசையோடு அந்தத் தாயாடும் என்னைப் பின் தொடர்ந்தது.

அன்று மஸராவுக்குள் எனக்கு பெரிய 'விருந்து' காத்திருந்தது. மாட்டை அடிப்பது போல் கை சலிக்கும் வரை என்னை அடித்து தீர்த்தான் அர்பாபு. கூடவே தாரளமான ஏச்சும் பேச்சும். அன்றைய குற்றப்பத்திரிகையில் அர்பாபு எனக்கெதிராக நான்கு குற்றச் சாட்டுகளை பதிவு செய்திருந்தான்.

முதல் குற்றம், என் கையிலும், உடுப்பிலும் பட்டிருந்த மாசிக் கறையையும் ரத்தத்தையும் கழுவ நான் தண்ணீர் எடுக்க முயற்சித்தேன்.

இரண்டாவது குற்றம், வெளியே கொண்டு போன ஆடுகளை கூட்டி வர தாமதமானது.

மூன்றாவது ஒரு ஆடு பிரசவிப்பதைப் பார்த்துக் கொண்டு நேரத்தை வீணடித்தது. அதற்கான தேவையே இல்லை. ஆட்டுக்கு நேரம் வரும் போது அது தானே பிரசவித்துக்கொள்ளும். அதற்கு மனிதரின் உதவியெதுவும் தேவையில்லை.

நான்காவது குற்றம், அதுதான் மிகப்பெரிய குற்றம்– பிறந்த குட்டியாட்டை அதன் அம்மாவிடம் பால் குடிக்க வைத்தது.

இங்கே ஆட்டுக்குட்டிகளுக்கு கறந்த பாலைத்தான் கொடுப்பது வழக்கம் என்று எனக்குத் தெரியும். அதற்காக அப்போதுதான் பிறந்து விழுந்த ஒரு பிஞ்சு குட்டிக்கு கூட நேரடியாக முலைப்பால் கொடுக்கக்கூடாது என்பதை நான் தெரிந்திருக்கவில்லை.

ஏராளமான வசவுகள், உதை, சில பெல்ட்டடிகள், காறித் துப்பல்கள், மதிய பட்டினி.

அத்தனை கஷ்டப்பட்டு ஒரு ஆட்டுக்கு பிரசவம் பார்த்ததற்காக எனக்கு கிடைத்த கூலி!

ஆனாலும் எனக்கதில் துளியளவு கூட வருத்தமில்லை.

இதற்கான பலனை அல்லாஹ் நிச்சயமாக ஊரிலிருக்கும் என் சைனுவுக்கும், என் மகனுக்கும் கொடுத்திருப்பார் என்று நான் நம்பினேன்.

அப்படியே இல்லையென்றாலும், நான் அப்படியே இருப்பதாகவே நம்ப முயற்சி செய்தேன்.

இப்படிப்பட்ட ஒரு நம்பிக்கை கூட என்னிடம் இல்லாவிட்டால்...!

# 17

மஸராவிலுள்ள எல்லா ஆடுகளையும்விட நபிலீடம் நான் மிகவும் பிரியமாக இருந்தேன். அவன் மீது தனி அக்கறை செலுத்தினேன். அந்த அக்கறை அவனுக்கு தேவையில்லாமல் இருக்கலாம். மஸரா விலுள்ள பிற ஆடுகளைப்போல் அவனும் சுயமாக வளர்ந்து கொள்ள முடியும்தான். ஆனால் அவனை அப்படி வளர விடுவதற்கு எனக்கு மனம் வரவில்லை.

அவன் என்னுடைய கைகளில் பிறந்து விழுந்தவன். சொந்த மகனுக்குப் பதிலாக அல்லா எனக்குத் தந்த ஒப்பற்ற பரிசு அவன். அர்பாபுவின் கண்ணில் படாமல் பலதடவை நான் அவனை அவனு டைய தாயிடம் பால் குடிக்க விடுவேன். அது அந்த மஸராவில் வாழ்ந்த எந்தவொரு ஆட்டுக்குட்டிக்கும் கிடைக்காத அதிர்ஷ்டம்.

தன் சொந்த தாயிடம் பால் குடிக்கும் அந்த வாய்ப்பை விடவும் வேறென்ன சௌபாக்கியத்தை நான் அவனுக்குக் கொடுக்க முடியும்...?

கறந்த பால் என்றால் நான் அவனைத் தனியாக குடிக்க வைப்பேன். புல் கட்டுகளிலிருந்து இளம் தளிரை பொறுக்கியெடுத்து கொடுப்பேன். வெளியே நடக்கப் போகும்போது அவனை என்னுடனே சேர்ந்து நடத்திக்கொண்டு போவேன். அவனோ குறும்புக்கார பயல் போல் என்னை ஏமாற்றிவிட்டு துள்ளி ஓடுவான். கொஞ்ச தூரம் ஓடிவிட்டு ஓரக் கண்ணால் என்னைத் திரும்பிப் பார்ப்பான். நான் அவனைப் பிடிக்க ஓடுவேன். அவன் என் கைகளில் அகப்படாமல் ஆட்டுக் கூட்டங்களுக்குள் ஓடி மறைவான்.

நானும் பின்னாலேயே போய் அவனைப் பிடித்து அவனுக்கு முத்தங்களாகச் சொரிவேன்.

நபீல், அந்த மந்தையிலுள்ள நூற்றுக்கணக்கான ஆடுகளில் ஒன்றல்ல. அவன், என்னுடைய சொந்த மகன்!

இளம் பிராயத்திலேயே அவன் பெரிய குறும்புக்காரனாக இருந்தான். எப்போதுமே அவனைவிட பெரிய முரட்டு கொம்பாடுகளுடன் தான் சண்டை போட்டுக் கொண்டிருப்பான். அவனுடைய இந்த சின்னஞ்சிறு குசும்புகளை சில ஆடுகள் சந்தோஷத்துடன் ரசிக்கும். ஆனால் வேறு சில கோபக்கார ஆடுகளோ அவனை முட்டித் தள்ளி விடும். வலி தாங்காமல் அவன் எத்தனையோ தடவை என்னிடம் ஓடிவந்திருக்கிறான்.

அர்பாபுக்குத் தெரியாமல் நான் டாங்கிலிருந்து தண்ணீர் எடுத்து அவனுடைய காயத்தை துடைத்து விடுவேன். புண்களைக் குணப் படுத்த அர்பாபுவிடம் ஒரு ஸ்பிரே இருந்தது. அதை வாங்கி காயம் பட்ட இடத்தில் அடித்து விடுவேன். நான் அவனிடம் வைத்துள்ள அன்பை அவனும் புரிந்து கொண்டான்.

ஒருநாள் காலையில் வழக்கம்போல் குபூஸை விழுங்கி விட்டு ஆடுகளுடன் நான் வெளியே போகும் போது அர்பாபு என்னை திரும்ப அழைத்தார்.

"வேண்டாம், இன்று கொஞ்சம் வேறு வேலை இருக்கிறது."

நான் ஆடுகளை மறுபடியும் மஸராவுக்குள் கொண்டு போனேன்.

சற்று நேரத்தில் கையில் பளபளக்கும் ஒரு கத்தியுடன் அர்பாபு கூடாரத்திலிருந்து வெளியே வந்தான். அதைப் பார்த்து என் உடல் நடுங்கியது.

கடவுளே! ஏதாவது ஆட்டை கசாப்பு கிசாப்பு போடப் போகிறானோ?

அர்பாபுக்கு எப்போதுமே கேள்வி கேட்பது பிடிக்கவே பிடிக்காது. அவன் சொல்வதை அட்சரம் பிசகாமல் அப்படியே கேட்க வேண்டும், அது புரிந்தாலும் சரி புரியாவிட்டாலும் சரி. அதுதான் வழக்கம்.

அதனால்தான் 'என்ன செய்யப் போகிறாய்?' என்று கேட்க எனக்கு பயமாக இருந்தது. நான் வாயை மூடிக்கொண்டு அவன் பின்னாலேயே போனேன்.

அர்பாபு, நேரே குட்டியாடுகள் இருந்த மஸராவுக்குப் போய் அங்கிருந்த கிடாக்களில் ஒன்றைக் காட்டி அதைப் பிடிக்கும்படியாகச் சொன்னான்.

எனக்கு விஷயம் புரிந்துவிட்டது. 'கொல்வதற்குத்தான்', கொலக் காரப்பாவி!

ஆனால், 'என்னால் அதைச் செய்யமுடியாது' என்று சொல்ல எனக்குத் துணிவு இல்லையே! நான் மனமேயில்லாமல் மஸராவுக்குள் போய் அவன் காட்டிய ஆட்டை இழுத்து வெளியே வந்தேன்.

அதனுடைய உடல் முழுவதும் என் தொடைகளுக்கிடையில் வரும்படியாக பிடித்துக் கொண்டு, அதன் பின்னங்கால்கள் இரண்டையும் உயர்த்திப் பிடிக்குமாறு கட்டளையிட்டான், அர்பாபு.

'இவன் என்ன செய்யப் போகிறான்?' எனக்கு ஒன்றுமே புரியவில்லை.

இப்போது ஆட்டின் முன்னங்கால்கள் தரையிலும், பின்னங்கால்களிரண்டும் என் கைகளிலுமாக இருந்தன. உடம்பு முழுவதும் என் இரு தொடைகளுக்கிடையில்.

கத்தியுடன் முன்னோக்கி வரும் அர்பாபுவால் ஆட்டின் அடிப்பகுதியைத் தெளிவாகப் பார்க்கலாம்.

விறைத்து நடுங்கி கொண்டிருக்கிறது ஆடு. அதை விடவும் அதிகமாக நான்.

கத்தியின் கூர்மையை கைகளால் தடவியபடியே முன்னோக்கி வருகிறான் அர்பாபு.

அது... அது மட்டும்தான் இப்போது என் நினைவிலிருக்கிறது.

அதன் பின் நான் இதுவரை கேட்டேயிராத தீனமான ஒரு அலறல் சத்தம் மட்டுமே என் காதுகளில் கேட்டது.

மத்தாப்பிலிருந்து பீச்சியடிக்கும் ஒளிச்சிதறல்களைப்போல் ரத்தம் பீச்சியடித்தது.

என் கைகளுக்கிடையிலிருந்து ஆடு தன் சர்வ சக்தியையும் திரட்டி துடித்துக்கொண்டிருந்தது. ஒரு நிமிடம் என் பிடி நழுவிப்போய்விடுமோ என்று கூட தோன்றியது.

'விட்டுவிடாதே!' அர்பாபு அலறினான்.

அர்பாபுக்கு பயந்து ஆட்டை இறுக்கமாகப் பிடித்துக்கொண்டேன் நான்.

சர்ரென்று அர்பாபு தன் பாக்கெட்டிலிருந்து ஒரு ஸ்பிரேயை வெளியே எடுத்து வெட்டுப்பட்ட இடத்தின் மீது பீச்சியடித்தான். அப்போதும் ஆடு பிராண அவஸ்தையுடன் அலறித் துடித்துக் கொண்டிருந்தது. ஆனால் பீச்சிய ரத்தம் சட்டென நின்று போனது. சற்று நேரத்தில் ஆட்டின் துடிப்பு மெல்ல அடங்கியது.

ஆட்டை திரும்பவும் மஸராவுக்குள் கொண்டு போய் விடுமாறு அர்பாபு கைகட்டினான்.

நான் ஆட்டை மஸராவின் வாசல் வரை கொண்டு போய் விட்டேன்.

குண்டடிபட்ட பன்றியைப் போல் அது அங்கிருந்த ஆட்டுக்குட்டிகளுக்கிடையே பாய்ந்தோடியது.

உண்மையிலேயே இது பயங்கரமானது. ஒரு ஆட்டுக் கிடாவின் ஆண்மை வெட்டி எறியப்பட்டுவிட்டது. அதன் ஆண்மை ஒரு மாமிசத் துண்டாகவும், கொஞ்சம் ரத்தமாகவும் அர்பாபுவின் காலடியில் விழுந்து கிடக்கிறது.

கிடாக்கள் அதன் முழு ஆண்மையுடன் வாழ இங்கே அனுமதிக்கப் படுவதில்லை என்பதை முன்பே நான் கவனித்திருக்கிறேன்.

'அதற்காகவென்றே' தேர்ந்தெடுக்கப்பட்ட தனியாடுகள் உண்டு. ஒரு குறிப்பிட்ட பருவத்துக்குப்பின் அந்த ஆடுகள் பெண்ணாடுகளுடன்தான் சுற்றித் திரியும். அவை தம் விருப்பம்போல் இணை சேரலாம். ஆண்மையின் முழுத்திமிருடன் கம்பீரமாக நடக்கலாம்.

ஏனைய கிடாக்களெல்லாம் வெறும் சொத்தைகள், ஆண்மை சிதைக்கப்பட்டவை. அவையெல்லாம் கசாப்புக்கு அனுப்பப்பட வேண்டியவை. ஆண்மை பிடுங்கப்பட்ட ஆடுகளின் வளர்ச்சி மிக வேகமாக இருக்கும் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் அது இத்தனை நிஷ்டூரமாகச் செய்யப்படும் என்று நான் கனவிலும் நினைத்ததில்லை.

அர்பாபு அடுத்து வேறொரு ஆட்டை காட்டி அதைப் பிடித்து வரும்படி சொன்னான்.

நானும் மஸராவுக்குள் போய் அதைப் பிடித்து வந்தேன். ஒவ்வொரு ஆட்டின் வயதும், வளர்ச்சியும் அர்பாபுவுக்கு மனப்பாடம். எப்போது அதன் ஆண்மை பிடுங்கப்பட வேண்டும் என்று அவன் துல்லியமாகக் கணக்குப் போட்டு வைத்திருப்பான். சில ஆடுகளை ஒரு மாதத்திலும், வேறு சிலவற்றை இரண்டு மாதத்திலும்.

இவன் வளரும்போது நல்ல திடகாத்திரமான குட்டிகளை உருவாக்கும் திறமை பெற்றிருப்பானா...? அதற்கு நல்ல பால் சுரப்புள்ள பெண்ணாடுகளைத் தரும் வலிமையுண்டா? சூல் கொள்ளும் திறன் பெற்ற ஆடுகளை உருவாக்குவானா...? என்பவற்றையெல்லாம் அதன் ஆண்மைத் துடிப்பை வைத்தே அர்பாபு எடைபோட்டு விடுவான்.

அதற்குத் தகுந்தபடிதான் ஒரு ஆட்டை ஆணாக தொடர அனுமதிப்பதா, இல்லை அறுத்து சொத்தையாக்குவதா என்று அவன் முடிவு செய்வான்.

அர்பாபு கைகாட்டிய ஒவ்வொரு ஆட்டையும் நான் பிடித்துக் கொடுத்துக் கொண்டேயிருந்தேன். அர்பாபு ஒரு நகம் வெட்டும் லாவகத்துடன் அவற்றின் ஆண்மையை அறுத்துக் கொண்டேயிருந்தான். அஞ்சாறு ஆடுகள் முடிந்ததும், அடுத்ததாக அர்பாபு கைகாட்டிய ஆட்டைப் பார்த்ததும் நான் அதிர்ந்து போனேன்.

அது... நபீல், என்னுடைய சொந்த நபீல்!

ஒரு ஆணின் அத்தனை மிடுக்கோடும் தலையுயர்த்தி நடக்க வேண்டியவன்!

என் மகனே... மாட்டேன் உன்னை அந்த கொலைகாரனின் கத்திக்கு விட்டுக் கொடுக்க மாட்டேன். அதுமட்டும் என்னால் முடியவே முடியாது.

அர்பாபு சுட்டிக் காட்டிய ஆடு வேறொன்று என்ற மட்டில் நான் நபீலை ஆடுகளுக்கிடையே தள்ளி விட்டுவிட்டு மற்றொரு ஆட்டை பிடித்தேன்.

ஆனால் அர்பாபுவின் கழுகுக் கண்களோ நபீலையே பின் தொடர்ந்தன. கூடாரத்துக்குள் கால் நீட்டிக் கிடந்தாலும் மஸாராவுக்குள் இருக்கும் ஒவ்வொரு ஆட்டின் ஜாதகமும் உள்ளங்கை ரேகையைப் போல் அவனுக்கு அத்துப்படி.

"அதல்ல... அதோ... அதுதான்..." அர்பாபுவின் கை மீண்டும் நபீலை நோக்கி நீண்டது.

என்னால் அவனைப் பிடிக்க இயலாது. அவனுக்கு இப்படியொரு துரோகம் இழைக்க என்னால் முடியாது. நான் மீண்டும் வேறொரு ஆட்டைப் பிடித்து வந்தேன்.

"ஹிமார்!" அர்பாபு அலறினான். அது அர்பாபுவின் பொறுமையின் எல்லை என்று எனக்குத் தெரியும். ஆனாலும் நான் மூன்றாவதாக பிடித்து வந்தது வேறொரு ஆட்டைதான்.

அர்பாபு ஓடிவந்து என் முதுகில் 'சத்' என்று ஒரு உதை விட்டான். நான் சற்று தொலைவில் போய் விழுந்தேன். அதே கோபத்துடன் அர்பாபு ஆட்டுக் கூட்டங்களுக்குப் புகுந்து நபீலின் கால்களைப் பிடித்து தாதரவென்று வெளியே இழுத்து வந்தான்.

நான் கண்ணீருடன் அவன் கால்களைப் பிடித்து கதறினேன். "ஐயா எஜமானே, இவனை ஆணாக வாழ அனுமதியுங்கள். இவன் எனக்கு வேண்டும். இவனைக் கசாப்புக் கடைக்கு அனுப்ப எனக்கு மனம் வரவில்லை. இவன் என்னுடன் இங்கேயே வாழ்ந்துவிட்டு போகட்டுமே." நான் எனக்குத் தெரிந்த மொழியில் அர்பாபுவிடம் கெஞ்சினேன்.

'ஹிமார்!' அர்பாபு என் தலையில் ஓங்கி ஒரு அறை விட்டான்.

நல்ல கிடாக்களைப் பார்த்தவுடனேயே தெரிந்துவிடும். அதிலிருந்து பிறக்கும் குட்டிகள் நல்ல புஷ்டியாக இருக்குமா இல்லையா என்று. அவைதான் முசுமுசுவென்று வளரும். உனக்கு இதைப்பற்றியெல்லாம் என்ன தெரியும் முட்டாளே. ஹிமார்! இவன் சீக்கிரமே கசாப்புக் கடைக்கு போக வேண்டியவன்.

அர்பாபு நிர்த்தாட்சண்யமாக நபீலை வெளியே இழுத்து வந்தான். நபீலின் கால்களிரண்டையும் உயர்த்திப் பிடிக்குமாறு கர்ஜித்தான்.

அதன்பின்... இரண்டே இரண்டு நிமிடங்கள்தான்! என் பிரிய நபீலின் ஆண்மை ரத்த பிண்டமாக ஏனைய ஆடுகளின் ஆண்மைச் சதைகளுடன் சொதசொதவென இதோ தரையில் விழுந்து கிடைக்கிறது.

'அதை' அறுத்தெடுக்கும் போது என்னுடைய நபீலிடமிருந்து பீறிட்ட கதறல்... ஐயோ தாங்க முடியவில்லை. அந்த கதறல் இப்போதும் என் மனதிலிருந்து மறையவில்லை. அவனுடைய அலறல், கூர்மையான ஒரு கருங்கல் துண்டால் என் இதயத்தைக் கிழிப்பது போலிருந்தது.

நபீல் அலறிக் கொண்டே மஸராவுக்குள் வேகமாக ஓடிப் போனது மட்டுமே என் நினைவில் இருக்கிறது.

கண் திறந்து பார்த்தபோது நானொரு புல் கட்டின் மேல் விழுந்து கிடக்கிறேன். நேரம் நடுப்பகலைத் தாண்டியிருந்தது. தடுமாறி எழுந்த போது அர்பாபு குடிக்க கொஞ்சம் தண்ணீர் தந்தான். பின்பு வழக்கமான வேலைகளைப் பார்க்க என்னை 'விரட்டி' விட்டான்.

நபீலின் ஆண்மை அறுக்கப்பட்ட தினத்தன்று என்னுடைய ஆண்மையும் வெளியேறியது.

அந்த ரகசியம் எனக்கு இன்றுவரை புரியவேயில்லை. ஒரு ஆட்டுடன் என் ஆண்மை எப்படி வெளியேறியது...?

## 18

செம்மறியாடுகளை நடக்க கொண்டுபோவது அப்படியொன்றும் கஷ்டமான காரியமில்லை. நீங்கள் சினிமாக்களில் பார்த்திருக்கலாம், அவை ஒன்றோடொன்று உரசியபடியே கூட்டமாக நடந்து போவதை

அவற்றை வழிநடுத்த எப்போதுமே ஒரு 'தலையாடு' இருக்கும். தலையாடு போகும் வழியில்தான் அடுத்த ஆடு போகும். அதற்கடுத்தது அதைப் பின் தொடரும்.

நாம் ஒருபக்கமாக நின்று அங்கங்கே சற்றே தட்டிக் கொடுத்தால் மட்டும் போதும். பொதுவாக நன்றாகப் பழகிய ஆட்டையே தலை யாடாக நியமிப்போம்.

புதிதாக வந்து சேரும் ஆடுகளையும், அதன் குட்டிகளையும் வழி நடத்திச் செல்வது இந்த தலையாடுகளின் பொறுப்பு.

என்னுடைய மஸராவிலிருந்த மூன்று தலையாடுகளுக்கு லலிதா, பத்மினி, ராகினி என்று பெயர் வைத்திருந்தேன்.

ஆனால் வேலியாடு எனப்படும் கோலாடுகளை சமாளிப்பதுதான் மகா சிரமம். அவை உல்லாச விரும்பிகள். அவற்றின் ஓட்டமும் நடையும்.! ஒன்று இடது பக்கம் போனால் மற்றொன்று வலப்பக்கமாக நடக்கும்.

ஒரே சமயத்தில் நூற்றுக்கும் அதிகமான ஆடுகளை நான் வெளியே கொண்டுபோய் வரவேண்டும். அல்லா ! அதிலும் அவை அத்தனை யுமே பைத்தியம் பிடித்த வேலியாடுகள் என்றால் என் நிலைமையை கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். அவற்றின் இயல்புகளைப் பற்றி நான் முன் எப்போதோ சொல்லியிருப்பதாக நினைக்கிறேன்.

செம்மறியாடுகளைப் போலவே பல்லாயிரம் வருடங்களாக மனிதனோடு இணங்கி வாழ்ந்து கொண்டிருந்தாலும், வாய்ப்பு

கிடைக்கும் போதெல்லாம் அதன் காட்டு சுபாவத்தை காட்டும் இயல்பு கொண்டவை வேலியாடுகள். அதிலும் பொலி ஆடுகளை கட்டுப்படுத்தவே முடியாது. நன்கு கொழுத்து வளர்ந்த பொலியாடு என்னுடைய உயரத்துக்கு இருக்கும்.

இணை சேருவதற்காக பெண்கள் கூட்டத்தில் விடப்பட்ட பொலி யாடுகள் வயிறுபுடைக்க தின்று, மதமதப்புடன் திரியும். அவற்றுக்குக் கோபம் வந்தால்... அதன் உக்கிரத்தைப் பார்க்க வேண்டுமே!

ஒரு நாள் ஆடுகளுடன் நடக்கப் போகும்போது கம்பால் ஒரு பொலியாட்டின் பின்பக்கமாக ஓங்கி ஓர் அடி அடித்தேன். அது சட்டென்று மதம்பிடித்த யானை ஆவேசம் கொள்வதைப்போல் கோபத்துடன் திரும்பியது. பின்பு மூக்கை வேகமாக பிசிறியது. அதன் மூக்கிலியிருந்து அனலடிக்கும் ஆவி.

அடுத்த நொடி .. ஓடி விலகக்கூட எனக்கு சந்தர்ப்பமே தராமல், பாய்ந்து வந்து என் நெஞ்சில் ஓங்கி ஒரு முட்டு. அது ஆயிரம் கிலோ எடை கொண்ட ஒரு கனமான சுத்தியலால் என் நெஞ்சில் அடித்தது போலிருந்தது.

ஹிந்தி சினிமாக்களில் கதாநாயகனின் உதையில் வில்லன் சிதறி விழுவதைப்போல் பத்து மீட்டர் தொலைவில் போய் நான் விழுந்தது மட்டுமே என் நினைவிலிருந்தது. நான் மயக்கமாகிவிட்டேன். எவ்வளவு நேரமாக அங்கேயே விழுந்து கிடந்தேன் என்று எனக்குத் தெரிய வில்லை.

கண் திறந்து பார்த்தபோது அர்பாபு எனக்கு முன்னால் குத்துக் காலிட்டு இருக்கிறான். நான் கண் திறப்பதைப் பார்த்ததும் அர்பாபு என் முகத்தில் கொஞ்சம் வெந்நீரை ஊற்றினான். அதன் பின் 'ஹிமார்' என்றபடியே கோபத்துடன் ஏதோ சொன்னான்.

நான் சுற்றும்முற்றும் பார்த்தேன். ஆடுகள், ஒரு ஐந்து கிலோ மீட்டர் சுற்றளவுக்கு சிதறிக் கிடந்தன.

எப்படியோ ஒரு விதமாக நான் எழுந்து உட்கார்ந்தேன். எனது இடது கையில் பயங்கர வலி. வலியென்றால் அப்படியொரு வலி, தாங்கமுடியாத அளவுக்கு வீங்கிப் போயிருந்தது கை.

என்னுடைய கை ஒடிந்தது போல் தோன்றுகிறதென்று நான் அர்பாபுவிடம் சொன்னேன். அவனோ அதை காதிலேயே வாங்காமல் இடுப்பில் கட்டியிருந்த பெல்ட்டை உருவி என்னை அடிஅடியென்று அடித்தான்.

"ஓடிப்போய் ஆடுகளையெல்லாம் பிடித்து வா" என்று கூச்சல் போட்டவன், "ஏதாவது ஒன்று குறைந்தாலும் இன்று நீ தொலைந்தாய்" என்று எனக்கு தாக்கீதும் தந்தான்.

'விண்... விண்...' எனத் தெறிக்கும் கையையும் பிடித்துக் கொண்டு நான் பாலைவனத்துக்குள் ஓடினேன்.

ஆடுகளோ எதிர்பாராமல் தமக்கு வாய்த்த அந்த சுதந்திரத்தை எத்தனை முடியுமோ அத்தனை சுகமாக அனுபவித்துக் கொண்டிருந்தன.

அவற்றின் காட்டுப்புத்தி வெளியே வந்து பேயாட்டம் போட்டுக் கொண்டிருந்தது. கட்டுப்பாட்டிற்குள் அடைபட்டுக் கிடந்த ஒரு ஜனத்திரள் திடீரென்று கலவரத்தில் ஈடுபடுவது போலிருந்தது அது.

அதன்பின் அவற்றைப் பிடிக்கவே முடியவில்லை. ஒன்றை விரட்டி ஒரு பக்கமாக கொண்டு போகும்போது அங்கு ஏற்கனவே நிற்கும் ஆடு வேறொரு பக்கத்துக்கு தாவிப்போய் விடும். அதைப் பிடிக்க அதன் பின்னால் ஓடும்போது ஏற்கனவே கொண்டு வந்த ஆடு இன்னொரு பக்கமாக ஓடிப்போயிருக்கும்.

இனி எல்லா ஆடுகளையும் ஒரேயடியாக மஸராவுக்கு கொண்டு போவது இயலாத காரியமென்று எனக்குப் புரிந்தது. அதன்பின் கையில் கிடைத்த ஐந்தோ ஆறோ ஆடுகளையும் விரட்டிக் கொண்டு நான் மஸராவுக்கு ஓடினேன். அவற்றை அங்கே அடைத்துவிட்டு மறுபடியும் பாலைவனத்துக்குள் ஓடினேன். கையில் கிடைக்கும் ஆடுகளுடன் மீண்டும் மஸராவுக்கு வருவேன். பின் மறுபடியும் பாலைவன ஓட்டம்.

முதல் ஆடு மஸராவிலிருந்து சுமார் இரண்டு கி.மீ. தூரத்தில் நிற்கும். அங்கிருந்து ஐந்து கி.மீ. சுற்றளவில் ஏனைய ஆடுகள் சிதறிக் கிடக்கும். இத்தனை தூரத்துக்கும் நான் எத்தனை தடவை ஓட வேண்டியிருந்தது என்றே எனக்குத் தெரியவில்லை.

செத்துப் போகும் அளவுக்கு நான் களைத்துப் போயிருந்தேன் என்பது மட்டுமே எனக்கு நினைவிருக்கிறது. இடையில் எப்போதோ ஒரு வாய்த் தண்ணீர் குடிப்பதற்காக நான் நின்றபோது அர்பாபு என்னை நையப்புடைத்தான். தண்ணீர்க் குவளையை பறித்து தூர வீசினான். வறண்ட நாக்குடன் நான் மீண்டும் பாலைவனத்துக்குள் ஓடினேன்.

அந்த ஓட்டத்திற்கிடையே நான் கண்கள் கலங்க வானத்தை அண்ணாந்து பார்த்து, 'அல்லா... அல்லா...' என்று பெருங்குரலெடுத்து கதறினேன்.

அங்கே நெடுந்தூரத்தில் ஆடுகள் கரும்புள்ளிகளாய் சிதறிக் கிடப்பதை என்னால் பார்க்க முடிகிறது. ஆனால் எப்படி அங்கு வரை போய் வருவது...?

தொண்டை வெடிக்கும் அளவுக்கு தாகம், சுட்டெரிக்கும் தீச்சூடு, யானைக்கால் வந்ததைப் போல் வீங்கிய கால்கள், சுளீரென்று வலி துளைத்தெடுக்கும் இடது கை...

கதறிக்கொண்டே நான் ஆடுகளின் பின்னால் வெறி பிடித்தவன் போல் ஓடினேன்.

சுட்டெரிக்கும் சூரியனைத் தவிர வானம் நிச்சலனமாக இருந்தது.

மத்தியானத்துக்கு மேல்தான் என்னால் எல்லா ஆடுகளையும் மஸராவுக்குள் கொண்டுபோய் சேர்க்க முடிந்தது.

ஒரு சொட்டு தண்ணீர்கூட குடிக்காமல், கொஞ்ச நேரம் கூட ஓய்வெடுக்காமல் சுட்டெரிக்கும் அந்த வெயிலில் ஒரு மனிதனால் எப்படி அத்தனை நேரமாக தாக்குப் பிடிக்க முடிந்தது என்று பிற்காலத்தில்தான் எனக்குப் புரிந்தது.

எத்தனை கஷ்டத்திற்கிடையிலும் உயிர் பிழைக்க வேண்டும் என்னும் தணியாத தாகம். அல்லாஹ் மீதான எல்லையில்லா நம்பிக்கை இவையிரண்டும்தான் என்னை அப்போது காப்பாற்றின.

கடைசி ஆட்டையும் மஸராவுக்குள் கொண்டுபோய் சேர்த்துவிட்டு நான் கட்டிலில் மயங்கிச் சரிந்தேன்.

சற்று நேரத்தில் அர்பாபு என் பக்கத்தில் வந்து என் வாயில் கொஞ்சம் தண்ணீரை வழிய விட்டான்.

நான் 'தண்ணீர், தண்ணீர்' என்று மேலும் மேலும் அரற்றினேன்.

"நீங்களெல்லாம் ஊதாரிகள். தண்ணீரை எப்படி சிக்கனமாக செலவழிக்க வேண்டும் என்று தெரியாத ஊதாரிகள்..."

அர்பாபு சொல்வது அந்த அரை மயக்கத்திலும் எனக்குக் கேட்டது. அதன்பின் நான் மயக்கமாகி விட்டேன்.

மீண்டும் கண் திறந்தபோது இருட்டிவிட்டிருந்தது. இடது கை நீர்கோர்த்து வீங்கிப்போயிருந்தது. தாங்க முடியாத வலி. நிச்சயமாக எனது கை எங்கோ ஓரிடத்தில் ஒடிந்திருக்கிறது. ஆட்டின் இடியால் நெஞ்சுக் கூடு நொறுங்கிப்போனதுபோல் வலித்துக் கொண்டிருந்தது.

தொண்டை வெடிக்கும் தாகம். நான் நொண்டியபடியே போய் கொஞ்சம் தண்ணீர் எடுத்துக் குடித்தேன். ஒரு கட்டத்தில் வலி தாங்காமல் நான் அர்பாபுவின் கூடாரத்துக்குப் போனேன்.

'இவ்வளவு நேரம் சுகமாக உறங்கி கிடந்தாயே' என்று வசை பாடியபடியே அர்பாபு என்மீது சில குபூஸ்களை வீசியெறிந்தான்.

எனக்கோ தாங்க முடியாத பசி. நான் அந்த குபூஸ்களை வெறும் தண்ணீரில் முக்கி அவசர அவசரமாக விழுங்கினேன்.

வலியால் என்னால் அன்றிரவு உறங்கவே முடியவில்லை. அதற்கிடையே நான் பல தடவை அர்பாபுவின் கூடாரத்துக்கு முன்னால் போய் கதறி அழுதேன்.

"என்னை ஏதாவது ஆஸ்பத்திரிக்கு கொண்டு போங்கள். என் கை ஒடிந்துபோய்விட்டது" என்று கெஞ்சினேன்.

ஆனால் அர்பாபு அதைக் காது கொடுத்து கேட்டதாகவேக் காட்டிக் கொள்ளவில்லை.

மறுநாள் பொழுது புலர்ந்தபோது அர்பாபு ஒரு பால் பாத்திரத்துடன் என்னை எழுப்பினான்.

"ம்... வேகமாகப் போய் பால் கறந்து வா."

நான் வீங்கிப்போன என் கையைக் காட்டினேன். அதற்கு தலையில் வேகமான ஒரு குட்டுதான் பதிலாக வந்தது அர்பாபுவிடமிருந்து.

நெஞ்சு வலி குறையவேயில்லை. கையோ யானைக்கால் பிடித்ததைப் போல் ஊதிப் பருத்துக் கிடந்தது. நெஞ்சிலும் நீர்க்கட்டியிருந்தது. வலியோ தாங்க முடியவில்லை.

பல்லைக் கடித்து எல்லாவற்றையும் பொறுத்துக் கொண்டே நான் மஸராவை நோக்கி நடந்தேன்.

ஆனால் ஒற்றைக் கையால் எப்படி பால் கறப்பது...? சாதுவான ஆடுகளென்றால் இரண்டு கைகளாலும் வேகமாக பால் கறப்பதே என் வழக்கம். ஆங்காரிகளென்றால் ஒரு கையால் முதுகைத் தடவிக் கொடுத்தாக வேண்டும்.

ஒடிந்து போன இந்த கையுடன் நான் என்ன செய்வேன்...? ஏதாவதொன்று சற்றே இடறினாலும் போதுமே, இதுவரை ஒற்றைக் கையால் கறந்த பால் அனைத்தும் சிந்திப்போய் விடுமே!

வருவது வரட்டும் என்று முடிவுடன் நான் அல்லாவை மனதில் தியானித்துக் கொண்டு மஸராவுக்குள் போனேன்.

அங்கே முதன் முதலில் நான் பார்த்தது புல்லுக்காரி ரமணி என நான் பெயரிட்டிருந்த ஆட்டைத்தான். அதற்கு ஏன் அப்படிப் பெயரிட்டேன் என்பது ஒரு தனிக்கதை. அதை பிறகு சொல்கிறேன்.

சொல்லப்போனால் சிலவேளைகளில் ஆடுகளுக்கு மனிதர்களை விடவும் விஷயங்கள் எளிதில் புரிந்து போகும் என்று எனக்கு பலமுறை தோன்றியிருக்கிறது. அன்று என்னைக் கண்டு பரிதாபப் பட்டோ என்னவோ, ரமணி ஆடாமல் அசையாமல் எனக்கு நின்று கொடுத்தது.

எப்படியோ ஒரு வழியாக நான் அர்பாபுக்கு தேவையான பாலைக் கறந்து அதைக் கூடார வாசலில் கொண்டு போய் வைத்தேன்.

'குடி நாயே குடி, உன் ஆசை தீர குடி'. நான் மனதுக்குள் சபித்தேன்.

பாலைக் குடித்துவிட்டு என்னிடம் வந்த அர்பாபு, "ம், வேகமாகப் போய் ஆட்டுக்குட்டிகளுக்கு தேவையான பாலைக் கறந்து வா" என்றான்.

என்னுடைய உடம்போ வலியால் நடுங்கிக் கொண்டிருந்தது. நான் என்னுடைய அவஸ்தையை அர்பாபுவிடம் வெளிப்படையாகச் சொன்னேன்.

"என்னால் முடியாது, முடியாது, முடியவே முடியாது!" நான் அலறினேன் என்று இப்போது தோன்றுகிறது.

என்னிடம் ஏற்பட்ட அந்த மாற்றத்தை அர்பாபு இப்போதுதான் முதன்முதலாக பார்க்கிறான். சொல்லப்போனால் அப்போது அவன் அதைப் பார்த்து பயந்தே போனான் என்றுதான் சொல்ல வேண்டும்.

பலமான பெல்ட்டடியை எதிர்பார்த்தபடியே நான் என் கட்டிலில் போய் விழுந்தேன்.

அர்பாபு இப்போது வருவான், வந்து என்னை அடித்தே கொல்வான். கொல்லட்டும், கொன்று என்னைக் கூறுபோட்டு தின்னட்டும். அதோடு இந்த கஷ்டங்களெல்லாம் முடிந்து போகுமே. மரணத்தை ஏற்றுக் கொள்ளத் தயாராக இருப்பவனுக்கு என்ன பயம்...?

'அல்லாஹுவே நான் ஒரு போதும் தற்கொலை செய்யமாட்டேன் என்று தானே உன்னிடமும் உன் சட்டத்திடமும் சத்தியம் செய்து கொடுத்திருக்கிறேன். ஆனால் அர்பாபுவின் கையில் என்னைக் கொல்லக் கொடுப்பதில் உனக்கு சங்கடம் எதுவுமில்லையே...? என் மகனைப் பார்க்கத்தான் எனக்குக் கொடுத்து வைக்கவில்லை. போகட்டும். எனக்கதில் வருத்தம் எதுவுமில்லை. ஆனால் அர்பாபுவின் கைகளால் நான் சாவதற்காவது நீ என்னை அனுமதிக்க வேண்டும். இனியும் இந்த வேதனையில் கிடந்துழல என்னால் முடியாது...'

ஆனால் அர்பாபுவோ அன்று என் பக்கமே வரவில்லை.

பதிவு தவறியதால் மஸராவுக்குள் ஆடுகளுக்கிடையே ஒருவித சலசலப்பு தொடங்கிவிட்டது. அவை அப்படித்தான். முறையாக வாழ்ந்து பழக்கப்பட்டவை. வரிசையில் ஏதாவதொன்று தவறினாலும் போதும். பின் எல்லாமே குளறுபடிதான். அவை எப்படியாவது போய்த் தொலையட்டும். எனக்கென்ன வந்தது. நான் கட்டிலிலிருந்து அசையவேயில்லை.

கொஞ்ச நேரத்துக்குப்பின் மூத்த அர்பாபு வண்டியில் வந்து இறங்கியதைப் பார்த்தேன். நான் அதைக் கவனித்ததாகவே காட்டிக் கொள்ளவில்லை.

தங்களுக்குள் ஏதோ பேசிக் கொண்ட அர்பாபுக்கள் மெதுவாக என் பக்கத்தில் வந்தார்கள். என்னுடைய கையைத் தூக்கி பரிசோதித்தவர்கள் வீக்கத்தின் மீது கைகளால் தடவினார்கள்.

நான் வலி தாங்காமல் அலறினேன். என்னை ஏதாவதொரு ஆஸ்பத்திரிக்கு கொண்டு போகுமாறு நான் கெஞ்சினேன்.

ஆனால் அர்பாபு அதை கேட்டதாகவே காட்டிக் கொள்ளாமல், மீண்டும் வண்டியில் ஏறிப் போய்விட்டார். நான் கட்டிலிலேயே கிடந்தேன்.

கொஞ்ச நேரத்துக்குப்பின் கையில் ஏதோ சில பச்சிலைகளுடன் திரும்பி வந்த அர்பாபு, அவற்றை ஒரு பாத்திரத்தில் போட்டு இடித்து என் கையில் நீர்போட்டிருந்த இடங்களில் பற்று போட்டார். பின்பு ஆதிவாசிகள் செய்வதைப்போல் அதைச் சுற்றிலும் கம்பை வைத்து அதை ஒரு துணியால் இறுக்கமாக சுற்றிக் கட்டினார்கள்.

நெஞ்சில் நீர்கோர்த்திருப்பதையும் நான் அவரிடம் காட்டினேன். அர்பாபு அதன்மீதும் பச்சிலை மருந்தைப் புரட்டிவிட்டார்.

"என்னை ஆஸ்பத்திரிக்கு கொண்டு போவீர்களா" அழுதுகொண்டே நான் கேட்டேன்.

"பயப்படாதே, இது சீக்கிரமே சரியாகிவிடும்" அர்பாபு சொன்னார்.

எனக்கு நம்பிக்கை இல்லை. என்னுடைய கை மேலும் வீங்கிப் பழுத்து கடைசியில் அதை வெட்டி எடுக்கத்தான் போகிறார்கள்.

அர்பாபு கொண்டு தந்த குபூஸ்களை நான் வெறும் தண்ணீரில் நனைத்து அவசரஅவசரமாக உள்ளே தள்ளினேன்.

"இப்போதே நேரமாகிவிட்டது. ம்... வேகமாகப் போய் ஆடுகளை நடக்க கொண்டு போ" அர்பாபு என்னை அடித்து விரட்டினான்.

எதிர்த்துப் பேச எனக்குத் தோன்றவில்லை. ஒற்றைக் கையுடன் நான் மஸராவை நோக்கிப் போனேன்.

மதியத்தோடு கையில் வலி சற்றே குறைந்திருப்பதைப்போலத் தோன்றியது. ராத்திரியுடன் வலி பூரணமாகக் குறைந்துபோனது. இரண்டு நாட்களுக்குள் கையிலும், நெஞ்சிலும் போட்டிருந்த நீர் வற்றிவிட்டது. ஒரு வாரத்துக்குப் பின் கைகட்டுகளை அவிழ்த்தெடுத்தேன்.

இத்தனை நாட்களாக நான் ஒற்றைக் கையுடனேயே எல்லா வேலைகளையும் பார்த்திருக்கிறேன். அப்போதெல்லாம் ஒரு நாள்கூட ஆடுகள் என்னை காலால் உதைக்கவில்லை. கோபத்துடன் முட்டவில்லை. பால் பாத்திரத்தை தட்டிவிடவில்லை என்பதை நினைத்து நான் ஆச்சரியப்பட்டேன்.

பல நேரங்களிலும் அர்பாபுவை விடவும் என்னை நன்றாக புரிந்து கொண்டவை ஆடுகள்தான். அவை எனக்கு எவ்வளவோ தொந்தரவுகள் கொடுத்தாலும், நான் அவற்றை திருப்பி ஒன்றும் செய்வதில்லை என்பதை அவை புரிந்து கொண்டிருக்க வேண்டும்.

ஆனாலும் 'பொலி' ஆடுகளிடமிருந்து நான் சற்று விலகியே இருந்தேன். முட்ட வந்தால் நான் துள்ளி விலகிவிடுவேன். சில சமயம் கையிலுள்ள கம்பால் ஓங்கி ஒரு அடி கொடுப்பேன். அதன்பின் ஒருபோதுமே அவற்றின் இடியால் கீழேவிழ வேண்டியது வரவில்லை.

நான் இதுவரையிலும் சொல்லாத ஒரு உண்மையை சொல்லட்டுமா. நான் சிறுவனாக இருந்தபோது என் வாழ்க்கையின் மிகப் பெரிய ஆசை நான் ஒரு ஆட்டிடையனாக வேண்டும் என்பதுதான், என்று சொன்னால் உங்களால் அதை நம்பமுடியுமா...?

ஒரு வேளை நமது ரமணன் போன்றோர் பாடியதைக் கேட்டதனால் ஏற்பட்ட ஆசையாக இருந்திருக்கலாம்.

என் உம்மாவுக்கு ரமணனை ரெம்பப் பிடிக்கும். நாடு விட்டு நாடுகள் போவது. புல் மேடுகளிலும் மலைச்சரிவுகளிலும் ஆட்டு

மந்தைகளுடன் காலார நடப்பது. ஒவ்வொரு நாளும் வெவ்வேறிடத்தில் கூடாரமடிப்பது, பனி பொழியும் இரவில் தீ மூட்டி ஆடுகளுக்கு காவல் இருப்பது...

'ஆடு மேய்த்தல்', கதைகளில் படித்த கனவு போன்ற இனிமையான அனுபவம்.

ஆனால், 'ஆட்டு வாழ்க்கை' என்னுடைய வாழ்வில் நிஜமாக வந்து வாய்த்தபோது, அது எனது கனவுகளைவிட வெகு அன்னியமாக இருந்தது என்று நான் வேதனையோடுதான் நினைத்துப் பார்க்கிறேன்.

நமக்குத் தெரியாத விஷயங்களைப் பற்றியும், எங்கோ நடக்கும் விஷயங்களைக் குறித்தும் விளையாட்டாகக்கூட கனவு கண்டு விடாதீர்கள். தப்பித் தவறி என்றாவதொருநாள் அது உங்கள் வாழ்வின் யதார்த்தமாகி விட்டால், அப்போது அதை நேருக்கு நேராக பார்ப்ப தற்குகூட உங்களால் இயலாத விதத்தில் அது அத்தனை பயங்கரமாக இருக்கும் என்று நான் உங்களை எச்சரிக்கிறேன்.

# 19

நானும், ஓர் அர்பாபுவும், கொஞ்சம் ஆடுகளும் மட்டுமேயிருக்கும் ஒரு வேற்றுக் கிரகத்தில்தான் என் வாழ்க்கை என்பதை பொய்யாக்கு கின்றன, வாரத்தில் இரண்டு தடவை வந்துபோகும் தண்ணீர் வண்டியும், வாரம் ஒருமுறை வரும் வைக்கோல் டிரெயிலரும், மாதமொரு தடவை வரும் கோதுமை லாரியும்.

எனது கிரகத்தை, இந்த பிரபஞ்சத்தின் பிற பகுதிகளுடன் இணைக்கும் ஒரே பாதை இந்த வண்டிகள்தான்.

அதில் வருபவர்கள் எல்லோருமே பாகிஸ்தானிய பட்டாணிகள். அவர்களுடன் பழக்கம் வைத்தால் என்னால் புற உலகுடன் தொடர்பு கொள்ளலாம். இங்கே இப்படியொருவன் வாழ்ந்து கொண்டிருக்கிறேன் என்றாவது அவர்களுக்குத் தெரியவைக்கலாம்.

என்றாவதொருநாள் நான் தப்பிக்க வேண்டுமென்றாலும் அது இவர்கள் மூலமாக மட்டுமே சாத்தியமாகும். அப்படி ஒரு சந்தர்ப்பம் என்றாவதொரு நாள் வாய்க்கும் என்னும் நம்பிக்கை என் உள்ளத்தின் ஏதோவொரு மூலையில் உறங்கிக் கிடக்கிறது.

ஆனால் எனது நம்பிக்கைகளையெல்லாம் எரித்து சாம்பலாக்கும் விதமாக வண்டிகள் வரும் தினத்தன்று வெகு சீக்கிரத்திலேயே என்னை பாலைவனத்துக்குள் விரட்டிவிடுவான் அர்பாபு.

வண்டிகள் திரும்பிப்போன பிறகுதான், நான் ஆடுகளுடன் மஸரா வுக்கு திரும்ப வேண்டும்.

வண்டியிலிருந்து தொட்டிக்கு தண்ணீர் ஊற்றவும், வைக்கோல் கட்டுக்களையும், கோதுமை மூட்டைகளையும் வண்டியிலிருந்து இறக்கி வைக்க கூடமாட உதவுவதும் மட்டுமே எனக்கு விதிக்கப்பட்டிருந்தது.

ஆனாலும் அந்த வண்டிகள் மஸராவை நெருங்கும்போது இனம்

புரியாத ஏதோவொரு சந்தோஷத்தில் என் மனது விம்மும். எனக்கு விருப்பமான எவரோ ஒருவர் என் வீட்டிற்கு விருந்துண்ண வருவதைப் போன்று என் மனம் ஆனந்தம் கொள்ளும்.

அப்போதெல்லாம் நான் ஆடுகளிடம் வழக்கத்தைவிடவும் அதிக மாக கொஞ்சி விளையாடுவேன். உரத்த சத்தத்தில் அவற்றுடன் பேசுவேன்.

அதுபோல் அந்த வண்டிகள் மஸராவிலிருந்து திரும்பிப் போகும் போது ஓர் உலகமே என்னைப் புறக்கணித்து விட்டு போவதைப் போல் தோன்றும். அப்போது என் இதயம் உடைந்து சுக்கு நூறாவதைப் போன்றதொரு உணர்வில் நான் களைத்துப்போவேன்.

எதேச்சையாக ஒருநாள் சுமையிறக்கும் ஆளில்லாமல் ஒரு டிரெ யிலர் வந்து விட்டது. வேறு வழியில்லாமல் அர்பாபு என்னை பாலை வனத்திலிருந்து திரும்பி வருமாறு கூப்பிட்டான்.

அந்த டிரெயிலரின் டிரைவரும் ஒரு பாகிஸ்தானி தான். எத் தனையோ காலங்களுக்குப்பிறகு இப்போதுதான் முதன்முதலாக ஒரு மூன்றாவது மனிதனை நான் அத்தனை நெருக்கத்தில் பார்க்கிறேன். அந்த மனிதனின் வியர்வையில்கூட ஒரு வித மணமிருப்பதாக எனக்குப்பட்டது.

அப்போதுதான் நான் எப்படிப்பட்ட ஒரு துர்நாற்றத்திற்குள் வாழ்ந்து கொண்டிருக்கிறேன் என்று எனக்குப் புரிந்தது.

ஒரு மனிதனைக் கண்ட சந்தோஷத்தில் நான் அவனது உடலை ஒரு முறை தொட்டுப்பார்க்கக்கூட செய்தேன். அப்போது என் உள் ளத்தில் ஆத்ம திருப்தியின் ஒரு குளிர்வீச்சு பாய்ந்து செல்வதை என்னால் உணர முடிந்தது.

சுமடு இறக்கிக் கொண்டிருக்கும்போதே, நான் எனக்குத் தெரிந்த எல்லா மொழிகளிலும் என் உள்ளத்தில் உறைந்து கிடந்த அத்தனை கஷ்டங்களையும் இறக்கி வைத்து, அவனிடம் இந்த நாகத்திலிருந்து என்னை எப்படியாவது காப்பாற்ற வேண்டும் என்று கெஞ்சிக் கேட்டேன்.

ஆனால் அவனது முகமோ கருங்கல் பாறை போன்று சலனமற்றுக் கிடந்தது. அவன் என்னை கண்டதாகவே காட்டிக்கொள்ளவில்லை.

அப்போது என் உள்ளத்தில் ஏற்பட்ட விரக்தி...

டிரெயிலருக்கு பக்கத்தில் வருமாறு அர்பாபு என்னைக் கைகாட்டி கூப்பிட்டபோது, ஆடுகளையெல்லாம் அப்படியே விட்டுவிட்டு, நான் ஓடிய ஓட்டமிருக்கிறதே...

அது, வாழ்க்கையின் நம்பிக்கையையும் வெளிச்சத்தையும் நோக்கிய எதிர்பார்ப்பு நிறைந்த ஒரு ஓட்டமாகும். இதோ நான் எதிர்பார்த்த அந்த நிமிடம் வந்துவிட்டது என்றுதான் அப்போது எனக்குத் தோன்றியது.

ஆனால் அந்த மனிதனின் சலனமற்ற ஒரு பார்வை எனது அனைத்து எதிர்பார்ப்புகளையும் கரைத்துப் போட்டுவிட்டது.

புல்கட்டுகளைத் தலையில் சுமந்து போகும்போது நான் பரிதாபமாக அவனைப் பார்ப்பேன். ஏதாவதொரு சேஷ்டை மூலம் அவனுடைய கவனத்தை ஈர்க்க முயலுவேன். எதேச்சையாக நடப்பது போல் அவனுடைய அருகில் சென்று என்னை எப்படியாவது இங்கிருந்து காப்பாற்றுமாறு வேண்டுவேன்.

இதற்கிடையே ஒரு தடவை வேண்டுமென்றே ஒரு புல்கட்டை கீழே போட்டுவிட்டு, அதை எடுக்கும் பாவனையில் நான் அவன் கால்களைப் பிடித்து கெஞ்சவும் செய்தேன்.

ஆனாலும் ஒருமுறைகூட அவன் என் கண்களைப் பார்க்கவில்லை.

கடவுளே! என் இதயம் உடைந்து சுக்கல் நூறாகிப்போனது.

சாமான்களை எல்லாம் இறக்கி வைத்துவிட்டு நட்புடன் என்னைப் பார்த்து ஒரு புன்சிரிப்பைக்கூட உதிர்க்காமல் அவன் வண்டியுடன் மறைந்து போனான்.

எனது நம்பிக்கை உதிர்ந்து வீழ்ந்தது.

அப்போது நான் அவனை சபித்த விதம்...!

இப்போதுகூட என்னால் அதை நினைத்துப் பார்க்க முடியவில்லை.

இந்த உலகில் எவருமே, முன்பின் அறிமுகமில்லாத ஒரு மனிதனை அந்த அளவுக்கு சபித்திருக்க மாட்டார்கள்.

ஆடுகளை ஒன்று சேர்ப்பதற்காக நான் மறுபடியும் பாலைவனத்துக்குள் நடக்கும்போது ஆத்திரம் தாங்காமல் என் நெஞ்சில் நானே 'டமார் டமார்' என்று அடித்துக் கொண்டேன். அப்படியும் என் கோபம் தீரவில்லை.

பல வருடங்களாக அர்பாபுவுடன் தொடர்பு வைத்துள்ள அவனுடைய அன்றைய மௌனத்தின் பொருளை இப்போது என்னால் ஊகிக்க முடிகிறது.

அவன் மட்டும் அன்று என்னோடு பேச முயன்றிருந்தால், அர்பாபு அவனை என்ன செய்திருப்பான் என்றே சொல்லமுடியாது.

ஒரு முறை கோதுமை இறக்க வந்த ஒரு லாரிக்காரன் என்னோடு ஏதோ பேசத் தொடங்கும் போதே கையில் துப்பாக்கியுடன் அர்பாபு அங்கே ஓடிவந்துவிட்டான்.

அதுபோலத்தான் தண்ணீர் வண்டிக்காரனொருவன் என்னோடு ஏதோ பேசியதற்காக, துப்பாக்கியின் பின்புறத்தால் அர்பாபு அவனை அடி அடியென்று அடித்தது இப்போதும் என் நினைவிலிருக்கிறது.

எனக்கு முன்பாக எத்தனை 'ஆடுகள்' இந்த மஸராவுக்குள் அகப்பட்டுபோயிருக்கும். ஒருவேளை அவரில் சிலரையாவது காப்பாற்ற முயன்றதன் 'பலன்' அந்த பாகிஸ்தானியர்களின் உள்ளத்தில் இப்

போதும் ஆறாத ரணமாக இருந்திருக்கக்கூடும்.

ஒருவேளை அன்று என்னை அப்படியே நிர்க்கதியாக விட்டுவிட்டு வண்டியில் திரும்பிப்போகும்போது வேதனை தாங்காமல் அவன் அழுதிருக்க மாட்டான் என்று யாரால் சொல்லமுடியும்?.

இல்லையென்றாலும் அவன் என்னை அலட்சியப்படுத்தவில்லை என்று நினைக்கவே நான் விரும்புகிறேன்; அப்படித்தான் நினைக்க வேண்டும் என்று என் மனதுக்கு நான் கற்றுக்கொடுத்திருந்தேன். நான் சந்தித்த பல வேதனைகளிலிருந்தும் நான் அப்படித்தான் நீந்திக் கரையேறியிருக்கிறேன்.

'கருணை மிகுந்த அல்லாவே, நீ எனக்கு நல்கிய கடினமான நாட்களின் மீது நடக்க வேண்டியது எனது விதி. அதன் பெயரில் நிரபராதியான ஒரு மனிதன் மீது கோபப்பட்டதற்காகவும், வசைபாடியதற்காகவும் என்னை நீ மன்னிக்க வேண்டும்.'

ஆரம்பத்தில் மஸராவெங்கும் ஒருவித முசுடு வாடை அடித்துக் கொண்டிருந்தது. வாந்தியை வரவைக்கும் துர்நாற்றம். ஆட்டு மூத்திரத்தின் நெடியும், புழுக்கைகளின் கந்தமும், மூத்திரத்தில் தொப்பலாக நனைந்து கிடக்கும் வைக்கோல் வாடையும் கலந்த தாங்க முடியாத ஒரு துர்நெடி. அப்படிப்பட்ட வாடையை நான் சர்க்கஸ் கூடாரத்தில் தான் அனுபவித்திருக்கிறேன்.

ஆட்டுப் பாலில் கூட அந்த நெடி இருந்தது. குபூஸ் துண்டுகளை பாலில் நனைக்கும்போதெல்லாம், இந்த வாடைகளெல்லாம் என் நாசிக்குள் பாய்ந்து செல்லும். துவக்கத்தில் பல நாட்கள் வாடை தாங்காமல் நான் வாந்தியெடுத்திருக்கிறேன்.

ஆனால் நாட்கள் செல்லச்செல்ல அந்த வாடை என்னிடமிருந்து விலகிப் போய்விட்டது. இல்லையென்றால் அப்படியொரு வாடையைப் பற்றி நான் மறந்தே போனேன். பின்பு பலமுறை முயற்சித்தபோதும் என்னால் அந்த பழைய வாடையை மீண்டும் அனுபவிக்கவே முடியவில்லை. அப்படியொரு வாடை இருந்ததாகவே நம்ப முடியாத விதத்தில் அது என்னுடனேயே ஐக்கியமாகிப் போயிருந்தது.

ஆனால் ஆடுகளின் வாசனை வேறுபாடுகளை இனம் கண்டுபிடிப்பதில் நான் திறமைசாலியாகியிருந்தேன். அதாவது பொலி ஆடுகளிடமிருந்து வரும் வாசனை போலிருக்காது செம்மறியாட்டிடமிருந்து வீசும் வாசனை. செம்மறியாடுகளிலும் நூறுவிதமானவை உண்டு. அவை ஒவ்வொன்றுக்கும் தனித்தனி மணம்.

கர்ப்பிணி ஆடுகளுக்கு ஒரு மணம், பிரசவத்தை நெருங்கும் ஆடுகளிடம் வேறொருவித வாசனை. அந்த மணத்தை வைத்தே ஆடு பிரசவிக்கப்போகும் நாட்களை துல்லியமாகக் கணக்கிடும் அளவுக்கு நான் திறமைசாலியாகிப் போயிருந்தேன்.

இனி ஆட்டின் வயிற்றிலிருந்து பிறந்து விழுந்த குட்டிக்குகூட தனி மணமுண்டு. வளர்ந்த குட்டிகளிடம் வேறொரு மணம். சினைக்குத்

தயாராகும் ஆடுகளிடம் வித்தியாசமான ஒரு தனி மணம்.

இதிலிருந்தெல்லாம் முற்றிலும் வித்தியாசமானது ஒட்டகங்களின் உடம்பிலிருந்து வீசும் வாசம். ஒட்டகங்களில் ஒரு திமில் உள்ளது என்றும் இரு திமில் உள்ளது என்றும் இரண்டு வகை உண்டு. இரண்டிற்கும் வெவ்வேறு வாசனை. எவ்விதமான வாசனையும் இல்லாமல் மஸராவில் வாழும் ஒரேயொரு உயிரினம் நஜீப் என்னும் விலங்கு மட்டுமே.

ஒரு நாள் எனக்கு திடீரென்று ஒரு ஆசை ஏற்பட்டது. என் சைனுவுக்கு ஒரு கடிதம் எழுத வேண்டும். அது எப்படி அவளிடம் போய் சேரும் என்பதை பற்றியெல்லாம் நான் ஆலோசிக்கவில்லை. எழுத வேண்டும், ஒரு கடிதம். அவ்வளவுதான்.

மதிய குபூஸுக்கும், பச்சைத் தண்ணீருக்கும் பிறகு கிடைத்த சிறிய இடைவெளியில் நான் கட்டிலுக்கு அடியில் கிடந்த என் பையை வெளியே எடுத்தேன். அதற்குள் பம்பாயில் வாங்கிய ஒரு லெட்டர் பேடும் பேனாவும் கிடந்தது. பல தடவை கிறுக்கிய பிறகே பேனா மங்கலாக எழுத ஆரம்பித்தது.

நான் எழுதும் முதல் கடிதம் இது. எப்படியெழுதவேண்டும் என ஒன்றும் புரியவில்லை. ஆனாலும் மனதிற்குள் ஒளிந்திருந்த விஷயங்கள் ஒவ்வொன்றாக வெளியே வந்து விழுந்தன.

"எனக்கு மிகவும் பிரியப்பட்ட சைனு,

நான் இங்கு நல்ல சுகமாக வந்துசேர்ந்தேன். ஆனால் வேலை நெருக்கடியால் என்னால் ஒரு கடிதம்கூட எழுத முடியவில்லை. நீ அங்கே கவலைப்பட்டுக் கொண்டிருப்பாய் என்று எனக்குத் தெரியும்.

கவலைப்படாதே. உன்னுடைய ஆசை மச்சான் இங்கே நல்ல சுகமாக இருக்கிறேன். பாலும், கம்பளியும் தயாரிக்கும் ஒரு பெரிய கம்பெனியில்தான் எனக்கு வேலை. நல்ல கௌரவமான பதவி.

நாம் எதுவுமே செய்ய வேண்டாம். எல்லாம் மிஷின்கள்தான். நான்தான் சூபர்வைசர். என்னுடைய அர்பாபுக்கு என்மேல் மிகுந்த மரியாதை. என்னுடைய வேலை அவருக்கு பிடித்திருக்கிறது. இடையிடையே அவர் எனக்கு நல்ல 'வெகுமதிகள்' தருகிறார். பல ஏக்கர் விஸ்தீரணமுள்ள ஒரு இடத்தில்தான் என்னுடைய தங்கும் அறை இருக்கிறது.

என்னுடைய கட்டிலில் இருந்து பார்த்தால் வெகு தொலைவிலுள்ளவற்றைக்கூட பார்க்கலாம். அந்த அளவுக்கு வசதியான இடம் இது.

சாப்பாட்டைப பற்றி சொல்லவே வேண்டாம். இதுவரை நான் சாப்பிட்டே பார்க்காத விதவிதமான பதார்த்தங்களை அர்பாபு எனக்கு வாங்கித் தருகிறார். இப்போதுகூட குபூஸும், சிக்கன் கறியும், மட்டன் மசாலாவும் சாப்பிட்டுவிட்டு, ஒரு டம்ளர் கெட்டிப் பாலும் குடித்துவிட்டுதான் இந்தக் கடிதம் எழுத உட்கார்ந்தேன்.

இத்தனை நாட்களில் நான் சற்றே குண்டாகி விட்டது போல் தோன்றுகிறது. இப்போ பகல் ஓய்வு வேளை. கொஞ்ச நேரம் கழித்து வேலைக்குப் போனால் போதும். அதுவரையிலும் நல்ல ஆனந்தமான காற்றை அனுபவித்துக் கொண்டிருக்கலாம்.

நம்முடைய ஊர்க்காரர்கள் சிலரும் இங்கே என்னுடன் வேலை பார்க்கிறார்கள். ராவுத்தர், ராகவன், விஜயன், போக்கர் என்று சிலர். நான் அவர்களுடன் அதிகமாக பேசுவது கிடையாது. அர்பாபுக்கு அது பிடிக்காது.

அர்பாபுக்கு அழகான ஒரு மகள் இருக்கிறாள். சாயங்கால நேரங்களில் நான் அவளுட்ன் நடக்கப்போவேன். நான்தான் அவளுடன் போகவேண்டும் என்று பிடிவாதம் பிடிப்பாள். அவள் பெயர் மேரி மைமூன்.

வேறு விசேஷங்கள் எதுவும் இல்லை. அங்கே நீயும், உம்மாவும் சுகமாக இருப்பீர்கள் என்று நினைக்கிறேன். நேரம் கிடைக்கும்போது எழுதுகிறேன்.

இப்படிக்கு,

உன் ஆசை மச்சான் நஜீப்."

பேப்பரை மூடி விட்டு, நான் கண்ணீர் விட்டு அழுதேன்.

அந்த கடிதமல்ல, அந்த அழுகைதான் உண்மையானது.

அது எவருமே படித்துப் பார்க்காத ஒரு உண்மை.

# 20

ஒருநாள் சாயங்காலம் ஆடுகளுடன் நடந்து கொண்டிருந்தபோது வானத்தின் கிழக்கு மூலை கறுத்து வருவதைப் பார்த்தேன். பாலை வனத்தை நான் பலதடவை கவனித்திருக்கிறேன். பருவமாற்றங்கள் பொதுவாக ஒரு தூசிப் படலத்தின் வரவோடுதான் துவங்கும். ஒரு தூசிப் படலம் அடித்து ஓயும்போது ஒட்டுமொத்த காலநிலையுமே அடியோடு மாறிப்போயிருக்கும்.

அங்கே ஒவ்வொரு மாற்றமும் மிக வேகமாக நிகழ்கிறது. 'மெதுவாக' என்னும் விஷயமே அங்கில்லை. முந்தைய நாள்வரை வெயில் கொளுத்திக்கொண்டிருக்கும். மறுநாள் பொழுது புலரும்போது கடும் குளிர் நடுங்க வைக்கும்.

நேற்றுவரை கம்பளி போர்த்தும் அளவுக்கு குளிரடிக்கும். இன்றோ பகல் தீயாய் விழும். ஒரு நிமிடம் முன்னால் வரை சுற்றுப்புறம் தூசி தும்பு எதுவுமில்லாமல் அமைதியாக காட்சியளிக்கும். அடுத்த நிமிடமே எங்கிருந்தோ ஒரு பெரும் தூசிப்படலம் வந்து பாலை வனத்தை சிதைத்து சூறையாடிவிடும். கொஞ்ச நேரம்தான். அதன் பின் சட்டென்று ஒரு சில நிமிடங்களில் சுற்றுப்புறம் துடைத்து விட்டது போல் மீண்டும் பளிச்சென்றாகி விடும்.

அன்றும் அப்படித்தான், பகல் முழுவதும் எந்தவித அறிகுறியு மில்லாமல் பூமி சூட்டில் தகித்துக் கிடந்தது. திடீரென்று வானத்தின் மூலையில் ஒரு கார்மேகப்படலம் தோன்றியது. ஒரு சில நிமிடங் களிலேயே அது ஆகாயம் முழுவதுமாக படர்ந்து பரவிட்டது.

பாலைவனத்தை ஒரு கம்பளிப் போர்வைக்குள் இழுத்துப் போட் டதைப்போல் அந்த பிராந்தியம் முழுவதுமே இருளில் மூழ்கியது குளிர்ந்த காற்று ஒரே நேரத்தில் என் மனதையும், உடம்பையும் துளைத்துச் சென்றது.

பாலைவனத்திலிருந்து எங்கோவொரு துருவப் பகுதிக்குள் தூக்கி யெறியப்பட்டவன்போல் உணர்ந்தேன் நான்.

மதம் பிடித்தவை போல் ஆடுகள் இலக்கில்லாமல் அங்குமிங்குமாக ஓடத் தொடங்கின.

இயற்கையின் சித்து விளையாட்டில் ஆடுகளைப்போலவே எனக்கும் உற்சாகம் பீறிட்டது.

ஆடுகளை அவற்றின் போக்கிலேயே விட்டுவிட்டு, அந்த குளிர்க் காற்றில் கைகளிரண்டையும் விரித்தபடியே நான் அங்குமிங்குமாக நடந்தேன்.

அர்பாபு வண்டியுடன் வந்து திட்டியபோதுதான் எனக்கு தன்னிலை வந்தது. நான் ஆடுகளையும் விரட்டிக்கொண்டு மஸராவை நோக்கி ஓடினேன்.

மஸராவுக்குள் நுழையவும் மழை பிடிக்கவும் சரியாக இருந்தது. முதல் துளி உடம்பில் விழுந்தபோது கடாரியால் குத்தப்பட்டது போல் நான் வலியால் துடித்தேன்.

எனது கணக்கு சரியாக இருந்தால் கடந்த எட்டோ ஒன்பதோ மாதங்களில் இப்போதுதான் முதன்முதலாக ஒரு துளி தண்ணீர் என் உடம்பை ஸ்பர்சிக்கிறது. ஆனால் அந்தத் துளியால் என் உடல் சிலிர்ப்பதற்கு பதிலாக வலியால் நான் துடித்தேன்.

ஒவ்வொரு துளியும் உடம்பை துளைத்து உள்ளே செல்வதைப் போலிருந்தது. ஒரு கட்டத்தில் வலி தாங்காமல் நான் ஓடிப்போய் கம்பளியை எடுத்து மூடிக்கொண்டேன்.

என்னால் மட்டுமல்ல, ஆடுகளாலும் அந்த வேதனையை பொறுக்க முடியவில்லை என்றுதான் தோன்றியது. அவை வினோதமான குரலில் அலற ஆரம்பித்தன.

அமைதியான குணம் படைத்த ஒட்டகங்கள் எங்கெல்லாமோ அலைந்து திரிந்து விட்டு பாதி மழையில்தான் மஸராவுக்கு திரும்பின. அவையும் இந்த ஊசி மழைக் குத்திலிருந்து தப்பவில்லை.

மழையும் இடியும் மின்னலுமாகச் சேர்ந்து அந்த பாலைவனமே அதிர்ந்தது. மின்னல் கீற்றுகள் வானிலிருந்து பாய்ந்து வந்து எங்கள் மஸரா முழுவதையும் எரித்துச் சாம்பலாக்கி விடுமோ என்று நான் பயந்து போனேன்.

என் தலையில் ஒவ்வொரு துளி விழும்போதும் மயிர்க்கால்கள் வலியால் சிலிர்த்தெழுந்தன.

ஒரே நேரத்தில் குளிரும், வியர்வையும் என்னை வாட்டி வதைத்தது. என் உடல் உருகி வழியத் தொடங்கியது. மழையில் நனையவும், குளிக்கவும் எனக்கு ஆசையாகத்தானிருந்தது.

ஆனால் என்ன செய்வது? ஊசியிறங்குவதுபோல் உடலுக்குள்

இறங்கும் மழைத் துளியின் வேதனையை என்னால் தாங்க இயல வில்லையே.

பொறுக்க முடியாமல் ஒரு கட்டத்தில் நான் அர்பாபுவின் கூடா ரத்தை நோக்கி ஓடினேன்.

ஆனால் அங்கே நான் கண்ட காட்சி!

கூடாரத்தின் மூலையில் ஒரு பூனையைப்போல் முகத்தை கால் களுக்கிடையில் புதைத்துக்கொண்டு அர்பாபு நடுங்கிக் கொண்டிருந் தான்.

இந்த உலகில், அர்பாபு அதிகமாக பயப்படுவது மழைக்கும், தண்ணீருக்கும் தானோ எனத் தோன்றியது.

மழைக்கு பயப்படும் ஒரு தொடை நடுங்கியை என் வாழ்க்கையில் நான் இதுவரை பார்த்ததே இல்லை.

மழைத்துளி அவன் உடம்பின்மீது படும்போதெல்லாம் ஒரு ஜின்–உருவமற்ற ஆவி– தன்னைத் தொடுவதுபோல் அர்பாபு நடுங் கினான்.

மழையின் எரிகணைத் துளிகள் கூடாரத்துக்குள் வீசியடித்த போது அர்பாபு மூலையோடு மூலையாக ஒட்டிக் கொண்டான்.

பிறந்தது முதல் இன்றுவரை ஒருமுறை கூட அர்பாபு குளித்திருக்க மாட்டானோ...?

அப்போது ஒரு அதிசயம் நிகழ்ந்தது.

அர்பாபு என்னை கூடாரத்துக்குள் வரும்படி அழைத்தான். நான் கீழே உட்கார போனபோது, என்னைக்கூட்டிக்கொண்டு போய் கட்டிலில் உட்கார வைத்தான்.

அச்சத்தால் நடுங்கும் ஒரு கைக் குழந்தையைப்போல் அர்பாபு எனது கையை இறுக்கமாகப் பிடித்துக் கொண்டான். பின்பு ஒரு போர்வையை எடுத்து மழை கண்ணுக்கு தெரியாத விதத்தில் முகம் முழுவதையும் மூடிக்கொண்டான்.

அப்படியே உட்கார்ந்திருந்தபோது ஏதோ ஒரு கணத்தில் என் கை தலையணைக்கடியிலிருந்த எதோவொரு பொருளின் மீது பட்டது. நான் சந்தேகத்துடன் தலையணைக்கடியில் என் கையை நுழைத்து மேலும் துளாவினேன்.

அது... அர்பாபுவின் துப்பாக்கி!

நான் தலையணைக்கடியிலிருந்து மெதுவாக அதை உருவி வெளியே எடுத்தேன்.

அர்பாபுவோ அதையெல்லாம் கவனிக்கும் நிலையில் இல்லை. அவன் அல்லா... அல்லா... என்று மனமுருகி தொழுது கொண்டி ருந்தான்.

மழை நிற்பதற்குள்... சட்டென்று எனக்குள் ஒரு குரூர எண்ணம் பளீரிட்டது. குறிபார்த்து விசையை ஒரு இழு இழுத்தால் மட்டும் போதும். நான் பிழைத்துவிடலாம். வெளியே வண்டி கிடக்கிறது. சாவியும் அதில்தான் இருக்கும். எப்படியாவது வழி கண்டுபிடித்துத் தப்பிவிடலாம்.

இதுதான் சரியான சந்தர்ப்பம். நான் தப்பித்துப் போவதற்காக கருணைமயமான அல்லா எனக்கு தந்த விலை மதிப்பில்லா நிமிடம் இது. இந்த சந்தர்ப்பத்தை நீ பயன்படுத்தாவிட்டால் இனிமேல் இப்படியொரு சந்தர்ப்பம் உனக்கு வாய்க்காமலே போய்விடலாம். சந்தர்ப்பங்கள் மீண்டும் வந்து உன் கதவைத் தட்டாது என்றுதான் உனக்குத் தெரியுமே!

செய், இப்போதே செய். இந்த நரகத்திலிருந்து எப்படியாவது தப்பித்து ஓடிவிடு.

என்னுடைய கை, துப்பாக்கியின் விசையை நோக்கி நகர்ந்தது.

அப்போது போர்வைக்குள்ளிருந்து அர்பாபுவின் பிரார்த்தனைக் குரல் ஒலித்தது.

"அல்லா! நீ என்னைக் காப்பாற்றி விட்டாய். இந்த நஜீப் மட்டும் இல்லையென்றால் நான் பயத்தால் உறைந்து செத்தே போயிருப்பேன்..."

மழையால் தொப்பலாக நனைந்து கிடந்த அந்த கூடாரமெங்கும் ஒலித்தது அந்த பிரார்த்தனை.

அர்பாபு இப்போதுதான் முதன்முதலாக என்னுடைய பெயரைச் சொல்கிறான்.

அர்பாபுவுக்கு என்னுடைய பெயர் தெரியுமா என்ற சந்தேகம் எனக்கிருந்தது.

இதற்கு முன்னால் 'ஹிமார்', 'இந்தி' போன்றவைதான் எனது பெயர்களாக இருந்தன.

'நஜீப்' என்ற அவனது அழைப்பிலும், பிரார்த்தனையிலும் என் மனம் நெகிழ்ந்தது.

எனது உதவியைக் கேட்டு அழும் ஒரு பேடியைக் கொன்றுவிட்டு தப்பிப்போக எனக்கு மனம் வரவில்லை. நான் துப்பாக்கியை முன் பிருந்ததுபோல் தலையணைக்கடியிலேயே வைத்தேன்.

அப்போது, என் உடம்பிலிருந்து தாங்கமுடியாத அளவுக்கு அனலடித்தது. பொறுக்க முடியாமல் ஒரு கட்டத்தில் போர்த்தியிருந்த ஈரக் கம்பளியை வீசியெறிந்து விட்டு, மேலே உடுத்திருந்த உடுப்பையும் அவிழ்த்தெறிந்து விட்டு நான் முழு நிர்வாணமாக மழையை நோக்கி ஓடினேன். ஆரம்பத்தில் சிறிது நேரம் மழை ஊசிகள் என் உடம்பை குத்திச் சிதைத்தன. பொறுத்துக் கொண்டேன். சற்று நேரத்திற்கெல்லாம் அந்த ஊசிக் குத்தல்கள் என்னை விட்டு மெதுவாக அகன்று போனது.

இப்போது ஒவ்வொரு துளியும் என் உடம்புக்கு இதமூட்டியது. அந்த மழையின் ஒவ்வொரு துளியையும் நான் நன்றாக அனுபவித்தேன்.

மழை மேகத்தை கண்டு ஆட்டுக்குட்டிகள் துள்ளிக் குதிப்பதைப் போல் நான் அந்த மழையிலேயே அங்குமிங்குமாக ஓடினேன்.

அப்படியாக நீண்ட காலத்துக்குப் பின்னால் மழை என்னை குளிப்பாட்டியது. என் உடம்பிலிருந்த அழுக்குகளெல்லாம் கரைந்து கொண்டிருந்தன.

ராத்திரி எப்போதோ ஒரு தடவை மழை சற்றே குறைந்தபோது அர்பாபு கூடாரத்திலிருந்து ஒரே ஓட்டமாக வெளியே ஓடி வண்டியில் ஏறி எங்கோ மறைந்து போனான்.

சற்று நேரத்துக்குப்பின் மழை மீண்டும் வலுக்கத் தொடங்கியது. அந்த இரவு முழுவதும் யாருடைய அச்சுறுத்தலும், கண்காணிப்பும் இல்லாமல் நான் முழுச் சுதந்திரத்துடன் இருந்தேன்.

அது எங்காவது ஓடிப்போக எனக்கு வாய்ப்பளித்த மழை இரவு. ஆனால் நான் எங்குமே போகவில்லை. வழக்கம்போலவே எந்த வழியாகப் போனால் தப்பிக்க முடியும் என்று எனக்கு தெரியவில்லை.

அப்படியாக 'தப்பித்தல்' என்னும் என் அடங்கா ஆசையை, அதற்கான அருமையான சந்தர்ப்பம் வாய்த்தபோது நானே அதை முளையிலேயே கிள்ளி எறிந்தேன்.

நாம் ஒவ்வொருவருமே இப்படித்தான். வலியவரும் எத்தனையோ வாய்ப்புகளை உதாசீனம் செய்கிறோம். ஆசையுடன் காத்திருந்த தங்கப்பாத்திரம் கையில் கிடைக்கும்போது அதை அலட்சியமாக தூக்கியெறிபவர்கள் நாம். அந்த வாய்ப்பை பயன்படுத்தாமல் போவதென்பதும் நமது விதிதானோ?

ஆனாலும் அர்பாபுவின் காவல் இல்லாத இந்த மழை இரவில் நான் ஏதாவது செய்தாக வேண்டும் என்று என் மனம் கிடந்து தவித்தது. அதுவும் இந்த கட்டுக்காவலை உடைத்து வெளியேறி ஏதாவதொன்றை புதிதாகச் செய்ய வேண்டும். அப்படிச் செய்யாமல் போனால் எனக்குக் கிடைத்த இந்த சுதந்திரத்தின் பொன்னான நிமிடங்களை நான் வீணடித்தவனாவேன்.

திடீரென்று எனக்குள் அந்த நினைப்பு வந்தது. என்னுடைய ஹக்கீமை ஒரு தடவை போய் பார்த்தால்தான் என்ன?

அன்றிரவு வண்டியிலிருந்து இறங்கிப்போனவன்தான். அதன்பின் இன்றுவரை அவனைப் பார்க்கவேயில்லை. பக்கத்தில் இருந்தாலும் நெடுந்தூரம் விலகிப்போய்விட்ட ஒரு பரிதாப ஜீவன் அவன். அவனைப் பற்றி அர்பாபுவிடம் நான் ஒன்றிரண்டு தடவை விசாரித்திருக்கிறேன். ஆனால் அவனோ அதைக் கேட்டதாகவே காட்டிக்கொள்ளவில்லை.

அந்த கொட்டும் மழையிரவில் நான் ஹக்கீமின் மஸராவை நோக்கி நடந்தேன்.

இரும்புத் தாழ்ப்பாள் போட்டிருந்த அந்த பெரிய கேட்டில் நான் சந்தேகத்துடன் தட்டினேன். அதற்குள் யாராவது அர்பாபுக்கள் இருந்தால் என் நிலைமை என்னவாகும் என்ற பயம் ஒருபக்கம். என்றாலும் நான் உரத்த குரலில் கூப்பிட்டேன்.

"ஹக்கீம்... ஹக்கீம்... நான் கூப்பிடுவது உனக்கு கேட்கிறதா...? இது நான்தான்... நஜீப். உன்னோடு கல்ஃபுக்கு வந்த நஜீப்... நீ எங்கிருக்கிறாய்?"

நெடுநேரமாக கேட்டை குலுக்கிக் கூப்பிட்டுப் பார்த்தேன். ஒரு பதிலும் இல்லை.

நிராசையோடு நான் திரும்பி நடக்க ஆரம்பித்தபோது கம்பி வேலிக்கு அருகே ஏதோ நிழலாட்டம் தெரிந்தது.

"ஹக்கீம்... இது நீதானா? நான் நஜீப்."

நான் அலறினேன். மழையின் இரைச்சலில் என் அழைப்பு கேட்காமல் போய்விட்டால் என்ன செய்வது.

அந்த நிழல் மெதுவாக என் பக்கமாக நகர்ந்து வந்தது.

"ஹக்கீம்... இது நீதானா...? வாடா இங்கே வா... நான்தான் நஜீப்"

அந்த உருவம் எனக்கு அருகில் வந்துவிட்டது.

நான் கண்களை இடுக்கிக் கொண்டு அதைக் கூர்மையாக உற்றுப் பார்த்தேன். கறுத்து மெலிந்து, ஜடாமுடியுடனிருந்த மற்றொரு பயங்கரன்.

இவன் எனது ஹக்கீம் இல்லை. அவன் இப்படியிருக்க மாட்டான். நல்ல துறுதுறுவென்றிருப்பான். ஆள் நல்ல சிகப்பு, அழகன். அந்த பிராயத்துக்குத் தகுந்த திராணியான உடல்வாகு. பம்பாயில் வைத்து 'நீ இனி இங்கேயே இருந்துவிடு. ஹிந்தி சினிமாவில் ஏதாவது சான்ஸ் கிடைத்தாலும் கிடைக்கும்' என்று அவனை நான் கிண்டல் செய்திருக்கிறேன்.

"ஹக்கீம் என்ற பெயருள்ள யாரேனும் இங்கேயிருக்கிறார்களா...? நான் அவனுடைய நண்பன். அவன் என்னுடன்தான் இங்கே கல்ஃபுக்கு வந்தான். வந்த அன்று பார்த்தது, அதன் பிறகு அவனைப் பார்க்கவேயில்லை."

அந்த நிழல் உருவத்திடம் நான் மூச்சுவிடாமல் பேசிக்கொண்டே இருந்தேன்.

புரியாத ஏதோவொரு மொழியைக் கேட்டதைப்போல் அந்த பயங்கரன் கேட்டுக்கு மறுபக்கத்தில் எனக்கு நேராக வந்து மலங்க மலங்க விழித்தான்.

நான் எதிர்பார்க்காத ஒரு கணத்தில் திடீரென்று கேட்டின் மீது மடார் மடார் என்று தன் தலையை முட்டி, பெருங்குரலெடுத்து அவன் அழத்தொடங்கினான்.

நான் பயந்தேபோனேன்.

அந்த அழுகைக்கிடையே எப்போதோ "என்னுடைய நஜீபண்ணா" என்றொரு அவலக்குரலும் கேட்டது.

அப்போதுதான் அது ஹக்கீம் என்று எனக்குப் புரிந்தது.

ஒரு போதுமே கண்டுபிடிக்க முடியாதபடிக்கு மனித உடலின் வரைபடத்தை அப்படியே மாற்றி வரைக்க சந்தர்ப்பங்களால் முடியும் என்று எனக்கு புரிந்த கணம் அது.

அதே சந்தர்ப்பம் இப்போது என் உருவத்தை எப்படி மாற்றி வரைந்திருக்கும் என்று நினைத்தபோது நான் பீதியடைந்தேன்.

இங்கே வந்தபிறகு நான் என் உருவத்தை கண்ணாடியில் பார்த்ததே யில்லை. அப்படி மட்டும் பார்க்க முடிந்திருந்தால்...! எனக்கு என்னையே அடையாளம் தெரியாமல் போயிருக்கும்.

ஹக்கீம் அவனுடைய உம்மாவையும், வாப்பாவையும், குடும்பத்தை யும், அல்லாவையும் கூப்பிட்டு அழுது கொண்டேயிருந்தான்.

அவனுக்கு என்ன சொல்லி ஆறுதல் படுத்துவது?

எனக்கு எதுவுமே புரியவில்லை.

கம்பிகளுக்கிடையே கையை நுழைத்து அவனுடைய கையை வெளியே இழுத்து என் நெஞ்சோடு சேர்த்து வைத்தபடியே நானும் அவனுடன் சேர்ந்து அழுதேன்.

அப்படியாக அன்றைய இரவு கண்ணீரில் கரைந்துபோனது.

# 21

மழை மேலும் இரண்டு நாட்கள் பெய்து தீர்த்தது.

அதன்பின் பாலைவனத்தின் ஆகாய வாசல்கள் குளிருக்காக திறந்துவிடப்பட்டன.

இரவு நேர கடுங்குளிருக்குப் போட்டியாக அதிகாலையில் அடர்த்தியான பனிமூட்டம்.

காலையில் கண் விழித்து பார்க்கும்போது சுற்றிலும் குளிரின் வெண்படலம் மட்டுமே. அந்தப் பனிப்படலத்தில் மஸரா, ஆடுகள், அர்பாபு, அவன் கூடாரம் என்று அனைத்துமே மாயமாய் மறைந்து போயிருக்கும்.

பனிமூட்டம் விலகி, லேசாக காட்சிகள் தெரிய ஒன்பது மணிக்கு மேலாகும்.

என்னுடைய நேரக் கணக்கெல்லாம் வெறும் யூகம் மட்டும்தான். ஒரு ஏகாந்த நிலையில் காலம், நேரம் போன்றவையெல்லாம் வெறும் சங்கல்பங்களே.

அதனால் பனிக்காலத்தில் வழக்கமான வேலைகளெல்லாம் மெதுவாகவே துவங்கும்.

வேனல் காலத்தில் பகல் நீண்டு கிடக்கும். அதிகாலை மூன்று மணிக்கெல்லாம் சூரியன் எழுந்துவிடுவான். ராத்திரி எட்டுவரை வெளிச்சம் குறையாது.

ஆனால் குளிர்காலத்திலோ ஒன்பது மணிக்குக் கூட வெளுக்காத வானம், மதிய சாப்பாடு முடியும்போதே மீண்டும் மங்கத் தொடங்கி விடும். நான்கு மணிக்கெல்லாம் எங்கும் இருள் கவிந்து விடும். அதனால் வேலை செய்யக் கிடைக்கும் நேரம் மிகக் குறைவுதான்.

வெயில் காலத்தில் ஒரு பத்து பதினைந்து மணிநேரத்தில் செய்கின்ற வேலைகளையெல்லாம் இப்போது ஆறு அல்லது ஏழு மணிநேரத்துக் குள் செய்து முடித்தாக வேண்டும்.

குளிரில் எதையும் கைகளால் தொடக்கூட முடியாது. நடுப்பகலில் கூட முதுகெலும்பைத் துளைத்தெடுக்கும் குளிர். தண்ணீரில் கை வைக்கவே முடியாது. அப்படியே தண்ணீரில் கொஞ்சநேரம் கை நனைக்க வேண்டிய நிலை வந்தால்...

நம் பாடு அதோகதி தான்.

குளிர்ந்த தண்ணீரிலும் கை கொப்பளமாகும் என்பதை அப்போது தான் நான் தெரிந்துகொண்டேன்.

ஒரு நாள் கொஞ்ச நேரமாக குளிர்ந்த தண்ணீரிலேயே கை வைக்க வேண்டியது வந்தபோது எனது இடது கையின் நடுப்பகுதி தோல் முழுவதும் வெந்து போய்விட்டது, வெந்நீர் கொட்டியதைப் போல.

துருவப்பிரதேசங்களின் கடுங்குளிரைப் பற்றி கேள்விப்பட்டிருக் கிறேன். ஆனால் வறண்டு கிடக்கும் இந்த பாலைவனத்திற்குள் எப்படி இத்தனை குளிர் வந்து சேர்ந்தது என்பது இன்றுவரை எனக்கும் புரியாத புதிர்தான்.

குளிரிலிருந்து தப்பிக்க என்னிடம் பிரத்யேக துணிகள் எதுவும் இல்லை. முதல்நாள் அர்பாபு தந்த, ஒரு நிமிடம் கூட என் உடம்பை விட்டு நீங்காத, ஒரு முறைகூட துவைக்காத, அந்த பழைய ‘அபாயா’ என்னும் நீண்ட அங்கி மட்டுமே என்னிடமிருக்கிறது.

மற்றொன்று கம்பளி. பயங்கரன் போகும்போது விட்டுப் போனது. குளிர் காலத்தின் முதல் சில நாட்கள் நான் அதைத்தான் போர்த்திக் கொண்டிருந்தேன். ஆனால் அது மிகுந்த அசௌகரியமாக இருந்தது. அதையும் போர்த்திக்கொண்டு ஆடுகளின் பின்னால் நடக்கவும், அவற்றுக்கு தீனி கொடுக்கவும் எனக்கு வசதிப்படவில்லை. அதனால் நான் அதை கழற்றி எறிந்து விட்டேன். அதன்பின் நடுங்கும் குளிரில் ஒற்றைத் துணியுடன் திரிய நான் பழகிக்கொண்டேன்.

இந்த மூர்க்கமான குளிரிலும் நல்ல கதகதப்பான ஒருபொருள் பக்கத்திலேயே இருந்தது. சற்று தாமதமாகத்தான் நான் அதைக் கண்டுபிடித்தேன்.

அது... செம்மறியாடுகள்!

அவற்றோடு சேர்ந்து நடந்தால்... ம்... ம்... அப்படியொரு கதகதப்பு!

ஊளை சத்தமிட்டபடி குளிர்காற்று வந்து மோதும் போதெல்லாம் நான் செம்மறியாடுகளை அணைத்துக் கொள்வேன். இரவில் குளிர் ஊசிகள் என் கம்பளி இழைகளையும் தாண்டி உடம்பை துளைக்கும் போது, நான் எழுந்துபோய் மஸராவிலுள்ள செம்மறியாடுகளை கட்டிக் கொண்டு உறங்குவேன். ஆடுகளுடன் மற்றொரு ஆடாக

வாழ்ந்து, நான் அந்த குளிர்காலத்தை எதிர்கொண்டேன்.

இந்த குளிர்காலத்தின் பனிப்போர்வையை பயன்படுத்திக் கொண்டு நானும் ஹக்கீமும் எங்காவது ஓடி தப்பியிருக்கலாம். ஆனால் மழையிரவில் எனக்கு வந்த அதே சந்தேகம்தான் இப்போதும் என்னை எங்கும் போகவிடாமல் தடுத்தது.

எங்கே தப்பி போவது என்பது மிகப்பெரிய கேள்வி. இந்த நாட்டைப் பற்றி எனக்கெதுவுமே தெரியாது. நான் இப்போது எங்கே இருக்கிறேன் என்றுகூட எனக்குத் தெரியாது.

எந்தப் பக்கமாக ஓடினால், தப்பிக்கும் வழியை என்னால் கண்டு பிடிக்க முடியும்?

கிழக்கிலா, தெற்கிலா, மேற்கிலா, வடக்கிலா?

இங்கே எனக்கு சாப்பிட ஆகாரமில்லை, தண்ணீரில்லை, துணியில்லை, படுக்க ஓரிடமில்லை, கூலியில்லை, வாழ்க்கையில்லை, கனவுகளில்லை, ஆசைகளில்லை.

ஆனால் ஒன்றேயொன்று மட்டும் எஞ்சியிருக்கிறது, உயிர்!

இந்த கணம்வரை என்னால் அதை, எப்படியோ தக்க வைக்க முடிந்திருக்கிறது. ஆனால் இங்கிருந்து தப்பி ஓடுகிறேன் பேர்வழியென்று முன்பின் பரிச்சயமில்லாத வேறொரு இடத்தில் மாட்டிக்கொண்டு அதையும் இழந்து விட்டால்...!

அதன்பின் அந்த ஓட்டத்தால்தான் என்ன பயன்?

எல்லா சிறைச்சாலைகளுக்கும், மதில் சுவர்களுக்கும் பின்னால் கண்ணுக்குத் தெரியாத ஒரு பாதுகாப்பு வளையமொன்று இருக்கிறது.

அந்த வளையத்தை உடைத்தெறிய இப்போது எனக்குத் தோன்றவில்லை. சரியான சந்தர்ப்பம் வரும்வரை, பாதுகாப்பான இலக்கை அடைந்து விடுவோம் என்று உறுதியாகத் தெரிவது வரையிலும் நான் காத்திருக்க தீர்மானித்தேன்.

எனது முடிவு சரிதானா...?

தெரியவில்லை.

அதை முடிவு செய்வது நானில்லை. தனது தலைவிதியைக் குறித்து தீர்ப்பெழுத யாருக்குத்தான் முடியும்!

குளிர்காலம் வந்து விட்டதால் மேலும் அதிகமாக செம்மறியாடுகளை லாரியில் கொண்டு வந்தார்கள். இனி வேனிற்காலம் வருவது வரையில் அது செம்மறியாடுகளின் காலம்தான்.

செம்மறியாடுகள் உயரமான மலைச் சிகரங்களின் குளிர் மிகுந்த காலநிலையில் வாழ்வதற்காகவே படைக்கப்பட்டவை. அப்படிப்பட்டவற்றை இந்த பாலைவனத்துக்குள் கொண்டு வந்து தள்ளுவது அவற்றுக்கு இழைக்கும் பெரிய அநீதியாகும்.

வேனிற்காலம் துவங்கும்போதே பெரும்பாலானவற்றை அர்பாபு விற்று விடுவான். என்றாலும் எஞ்சியிருக்கும் ஒரு சில ஆடுகளின் நிலமை மிக பரிதாபமாக இருக்கும்.

வெயில் அதிகமாகும்போது சொந்த உடலின் செம்மறிப் போர்வைக் குள் கிடந்து அவை புழுங்கி வியர்த்துச் செத்துப்போகும்.

அப்படி எத்தனையோ செம்மறி மரணங்களை நான் பார்த்திருக் கிறேன்.

ஆனால் அவற்றில் ஒன்றைக் கூட அர்பாபு வீணாக்க மாட்டான்.

செத்த ஆடுகளைக்கூட வண்டியில் போட்டு எடுத்துப் போவான்.

பின் அவை நல்ல மணமுள்ள மட்டன் மசாலாவாக கடைகளில் மணக்கும்!

வரியாடுகள்தான் பாலைவனத்துக்கு ஏற்றவை. அவை எந்த கொடுஞ்சூட்டையும் தாங்கும் சக்தி பெற்றவை. ஆனால் செம்மறிகளை கசாப்பாக்கி விற்பதால் கிடைக்கும் பெரும் லாபத்தை எதிர்பார்த்து தான் அர்பாபு இந்த ஆடுகளையெல்லாம் இங்கே கொண்டுவந்து இறக்கியிருக்கிறான்.

மழைவிட்டதோடு மஸராவெங்கும் சொதசொதவென்று ஒரே சகதி. குவியலாகக் கிடந்த ஆட்டுப்புழுக்கை, கெட்டிக்கிடந்த மூத்திரம், புல், வைக்கோல்... என்று எல்லாம் கலந்த ஒரு துர்நாற்றம். அவற்றை யெல்லாம் அள்ளிப்போட்டு மஸராவை சுத்தப்படுத்தவே எனக்கு முதுகொடியும் மூன்று நாட்கள் ஆகிவிட்டது.

குளிர்காலம் துவங்கியவுடனேயே அழையா விருந்தாளிகளாக மஸராவுக்கு வந்தன, ஆயிரக்கணக்கான ஈக்கள். எங்கு பார்த்தாலும் ஈக்கள்தான்.

குபூஸ் சாப்பிட உட்கார்ந்தவுடனேயே அதில் வந்து மொய்க்கும் நூற்றுக்கணக்கான ஈக்கள். அவற்றை விரட்டுவதற்காக ஒரு கையை விசிறி போல் ஆட்டிக்கொண்டேயிருக்க வேண்டும்.

மஸராவுக்குப் போனால் குளவிக் கூட்டங்கள் போல ஈக்களின் ரீங்காரம் காதுகளை வந்து அடைக்கும்.

'ஐயோ! இது வேறயா...?' நான் மனம் சலிப்பேன்.

பின்பு, 'ம்... போகட்டும், அவையும் உயிர்வாழ வேண்டாமா? அவற்றுக்கு விருப்பமான இடம் இந்த மஸராவாகத்தான் இருக்க வேண்டும். ஆனந்தமாக வாழட்டும்' என்று என்னையே நான் சமா தானம் செய்து கொள்வேன்.

குளிர்காலம் முடியும்போது ஒருநாள் செம்மறியாடுகளின் நீண்ட உரோமத்தை கத்தரிப்பதற்காக ஆட்கள் வந்தார்கள். இரண்டு சூடானி கள்; முகம் கொள்ளா சிரிப்புடன் இருந்த இருவர்.

வெகு காலத்துக்குப்பின் இரண்டு மனிதர்களைப் பார்த்த சந்

தோஷத்தில் நான் அவர்களையே சுற்றிச் சுற்றி வந்தேன், ஒரு நாய்க் குட்டியைப்போல்.

ஆனால் நான் பேசியதில் பெரும்பான்மையும் அவர்களுக்குப் புரியவில்லை. அவர்கள் சொன்னது எதுவுமே எனக்கும் புரியவில்லை. புரியாத எனது பேச்சை அவர்கள் சிரிப்பால் மறைத்தார்கள்.

அந்த தடவை அவர்கள் முடி கத்திரிக்க ஒரு எலக்ட்ரிக் மெஷினும் அதை இயக்க ஒரு ஜெனரேட்டரும் கொண்டு வந்திருந்தார்கள். இதற்கு முன்னால் அவர்கள் கை கத்திரியால் தான் வெட்டிக் கொண்டிருந்தார்கள்.

ஜெனரேட்டர் ஓடத் தொடங்கியவுடனேயே அர்பாபு ஜின்னைத் தொட்டதைப்போல் சாமியாடினான்.

ஷாக்கடித்து அவனுடைய ஆடுகள் செத்து போகும் என்பது அவன் பயம்.

அந்த மெஷின் அப்படிப்பட்டதல்ல என்று அர்பாபுக்கு புரியவைப்பதற்குள் அந்த சூடானி அப்பாவிகள் சோர்ந்து போனார்கள்.

மெஷின் தேவைக்கதிகமான முடியை கத்தரித்து எடுத்துவிடுமென்றும், அதனால் வரவிருக்கும் வேனிற்காலத்தில் ஆடுகள் சூடு தாங்காமல் செத்துப்போகும் என்றும், அப்படி ஒட்ட வெட்டிய ஆடுகள் சந்தையில் நல்ல விலைக்குப் போகாது என்றும் கூப்பாடு போட்டான் அர்பாபு.

ஒரு அளவுக்குமேல் முடியை கத்திரிக்காத விதத்தில்தான் மெஷின் தயாரிக்கப்பட்டிருக்கிறது என்று சொன்ன அவர்கள் பரிசோதனைக்காக ஒரு ஆட்டின் முடியை கத்தரித்துக் காட்டினார்கள்.

அதன்பிறகே அவர்களை வேலை செய்ய அனுமதித்தான் அர்பாபு. அதுவும் அரை மனதுடன்.

ஆனாலும் அவர்கள் வேலை முடித்து போகும்வரையில் ஏதாவதொரு குறை சொல்லிக் கொண்டுதானிருந்தான்.

முடி கத்தரிக்க ஏதுவாக ஆடுகளைப் பிடித்துக் கொடுப்பதுதான் என் வேலை. வழக்கமான வேலைகளையெல்லாம் முடித்து விட்டுத் தான் அங்கு போகவேண்டும்.

ஆண்மையை வெட்ட விடலைக் குட்டிகளைப் பிடிப்பதுபோல ஆடுகளின் கழுத்தை என் கால்களுக்கிடையில் நெரித்துப் பிடிக்க வேண்டும். அதன்பின் கத்தரிப்பு தொடங்கும். ஒரு ஆட்டுக்கு அதிகம் போனால் இரண்டு நிமிடங்கள்தான். ஆனால் இரண்டு நாட்களுக்குள் ஐநூற்றுக்கும் அதிகமான ஆடுகளைப் பிடித்துக் கொடுப்பதென்றால்... முதுகு ஒடிந்துவிட்டது.

வால் நுனியில் மட்டும் குஞ்சம் போல் சிறிது உரோமத்தை பாக்கி வைத்துவிட்டு, எஞ்சிய எல்லா உரோமத்தையும் மெஷின் வழித்து எடுத்துவிடும்.

“இதுதான் எங்கள் நாட்டு வழக்கம். வால் நுனியில் விட்டுவைத்திருக்கும் உரோமம், ஈக்களை விரட்டுவதற்காக நாங்கள் ஆடுகளுக்கு கொடுக்கும் சலுகை.”

புன்சிரிப்புடன் சொன்னான் அந்த சூடானி.

இரண்டாம் நாள் மதியத்துடன் முடிவெட்டு முடிந்து ஆடுகள் பளிச்சென்றிருந்தன. சாயங்காலம் கத்தரித்த உரோமங்களையெல்லாம் மூட்டையாக்கிக் கொண்டு சூடானிகள் பிக்அப் வேனில் ஏறி மறைந்தார்கள்.

அவர்கள் போனபின்பு ஏனென்று தெரியவில்லை, என்னிடம் ஏதோவொரு மனவாட்டம். சோர்வு. கடந்த இரண்டு நாட்களும் அந்த புதிய மனிதர்களின் வாசனையை ஆழ்ந்து சுவாசித்திருந்தேன்.

இனி வழக்கம்போலவே நானும் ஆடுகளும் மட்டும்தான். எனக்கு மழைபோல் அழுகை வந்தது.

மனிதன் எத்தனைதான் முயன்றாலும், தனது சர்வ வலிமையையும் பிரயோகித்தாலும் இந்த பூமியிருந்து உயிர்த்துடிப்புகளை அவனால் முற்றிலுமாகத் துடைத்தெறிந்துவிடவே முடியாது என்று சிந்தித்த காலம் அது.

இந்த மணல் பூமி கடந்த எத்தனையோ மாதங்களாக கனலில் பழுத்துக் கிடக்கிறது. கொதிக்கும் மணல் துகளைத் தவிர உயிர்த்துடிப்பின் சின்னஞ்சிறு அம்சத்தைக்கூட இந்த பாலைப்பரப்பில் காண முடியவில்லை.

ஆனால் வேனிற்காலம் முடிந்து குளிர்காற்று வீசத் தொடங்கியவுடன், வறண்ட மண்ணின் மேற்பரப்பில் ஒரு பச்சைப் போர்வை படர்ந்து வந்தது, மிக வேகமாக. மழை முடிந்த இரண்டு நாட்களுக்குள்.

அதைப் பார்க்கும்போது, வெளியே தலைகாட்டும் இந்த சந்தர்ப்பத்தை எதிர்பார்த்து அவை எத்தனையோ காலமாக பூமிக்கடியிலேயே காத்துக் கிடந்தனவோ எனத் தோன்றும்.

கள்ளிச் செடிகள், மண்ணில் படர்ந்து கிடக்கும் கொடிகள், கற்பாறைகளின் மேல் அப்பியிருக்கும் பாசி, சில தொட்டாஞ்சிணுங்கிச் செடிகள், வானத்தில் சந்தோஷத்துடன் சிறகடிக்கும் புறாக்கள், விசிலடித்தபடி பறக்கும் குருவிகள், சலசலத்தபடியே பாயும் பச்சைக் கிளிகள், இளமை ததும்ப குறுகுறுக்கும் ஜோடிப் புறாக்கள்... இவையெல்லாம் இத்தனை நாட்களாக எங்கேயிருந்தன?

இந்த உயிரினங்கள் இத்தனை காலமும் இந்த பாலைவனத்தின் அனலையும் வறட்சியையும், மூச்சடக்கி பொறுத்துக் கொண்டிருந்தனவோ என்று நினைக்கும்போதே என் உள்ளத்தில் உற்சாகம் பீறிட்டது.

ஒரு சில நாட்களுக்குள்ளாகவே அந்த சின்னஞ்சிறு செடிகள் வளர்ந்து பெரிதாகி, பூ பூத்து, காய்த்து, எதிர்காலத்துக்காக தன் உயிரை பூமி

யின் கர்ப்பப்பையில் ஒளித்து வைப்பதை நேரடியாகப் பார்த்தபோது, எனக்கு அவற்றின் மீது மிகுந்த வாஞ்சை தோன்றியது.

நான் அவற்றுடன் பேசினேன். அவற்றின் துயரக் கதைகளைக் கேட்டேன். என்னுடைய துயரங்களை அவற்றிடம் பகிர்ந்து கொண்டேன்.

அச்சின்னஞ்சிறு செடிகள் எனக்கு வாழ்க்கையின் நம்பிக்கை பாடங்களைக் கற்றுத் தந்தன.

அவை மிக ரகசியமாக என் காதில் கிசுகிசுத்தன:

"நஜீப்! இந்த பாலைவனத்தின் வளர்ப்பு மகனே, எங்களைப் போல நீயும் உன் உயிரை கையில் பிடித்துக்கொண்டு இந்த பாலை வனத்துடன் போராடு. தீக்காற்றும், வெயில் நாளங்களும் உன்னைக் கடந்துபோகும்.

அவற்றிடம் நீ தோற்றுவிடாதே; போராடி சோர்ந்துவிடாதே. அவை உனது உயிரையே விலையாகக் கேட்கும். விட்டுக் கொடுத்து விடாதே.

இறந்தவனைப்போல் தியானத்தில் ஆழ்ந்துவிடு. முட்டாளைப் போல் நடி. மறுபடியும் நீ வீறுகொண்டு எழவே மாட்டாய் என நம்ப வை.

கருணை நிறைந்த அல்லாஹுவை மட்டும் ரகசியமாகக் கூப்பிடு. அவன் உன்னுடைய துயரத்தை அறிவான். அவனுக்கு உனது பரிதாபக் குரல் நிச்சயம் கேட்கும்.

நஜீபே...! முடிவில் உனக்காக ஒரு காலம் கனியும். இந்த வெப்பக் காற்று மறையும்; இந்த கனல் குளிர்ந்து வரும். காலத்தின் இளம் காற்று உன்னை இந்த பூமிக்கடியிலிருந்து கைபிடித்து வெளியே கொண்டுவரும்.

அப்போது நீ உன் உயிர்த்துடிப்பின் முளையை மெதுவாக உயர்த்திப் பிடி. இந்த பூமிக்கு உன் வருகையை வெளிப்படுத்து. அதன் பின் கண்மூடித் திறப்பதற்குள் தப்பித்துப் போய்விடு. நாளைக்கான இதழ் விரித்து, காய்த்து கனி கொடு!"

எனது காலத்திற்காக நான் பொறுமையுடன் காத்திருக்கத் தொடங்கினேன்.

# 22

பொலி ஆடுகளிடம் எனக்கு வெறுப்பும், பயமும் உண்டு. ஆனாலும் ஒருமுறை அந்த பொலி ஆடுகளில் ஒன்று என் உயிரைக் காப்பாற்றிய ஒரு சம்பவமும் நடந்தது.

ஒருநாள் வழக்கம் போலவே ஆடுகளைக் கூட்டிக்கொண்டு நான் வெளியே நடக்கப்போனேன். அவைகளை நடக்க அனுப்பிவிட்டு நான் அங்கிருந்த ஒரு மணல் குன்றின் மேல் ஏறி உட்கார்ந்தேன்.

திடீரென்று காரணமே இல்லாமல் எனக்கு வீட்டு நினைவு வந்தது. அதுவரை என் மனதின் ஆழத்தில் உறங்கிக் கிடந்த நினைவுகளெல்லாம், எரிமலைக் குழம்புபோல எனக்குள்ளிருந்து பொங்கி வழிந்தன.

'எனக்கு இங்கிருந்து தப்பிக்கணும். எனக்கு என்னுடைய ஊருக்குப் போகணும். எனக்கு என் உம்மாவைப் பார்க்கணும். எனக்கு என் ஸைனுவைக் காணணும். எனக்கு என் நபீலைப் பார்க்கணும். எனக்கு என் தோழர்களைப் பார்க்கணும். எனக்கு என் ஊரைக் காணணும். எனக்கு என் ஊர் மண்பாதைகளில் நடக்கணும். எனக்கு எங்களூர் குளத்தைக் காணணும். எனக்கு என் படகைப் பார்க்கணும். எனக்கு என் மழையைப் பார்க்கணும். எனக்கு என் மண்ணைப் பார்க்கணும்...

சரியாகச் சொன்னால் குடும்பம் என்றால் என்ன என்பதை நான் இப்போதுதான் சரியாகப் புரிந்து கொண்டேன். அதுவொரு ஆசை. பாலைவனத்தைப் போல் மனதைப் பொசுக்கும் பேராசை. நமது இயல்பையும், வாழ்வையும், சூழலையும் அதன் மிக உச்சத்தில் வெறுக்கச் செய்யும் ஒரு ஆசை. அதன்பின்பு அந்த பேராசையை எப்படியாவது அடைந்துவிட வேண்டும் என்ற தவிப்பு. குண்டடிபட்ட பன்றி கரும்புக் காட்டுக்குள் பாய்ந்தோடுவதைப் போல மனம் பாய்ந்தோடியது. எப்போதோ ஒரு தடவைதான் அது நிகழும். ஆனால் அப்படியொன்று மனதில் நுழைந்துவிட்டால் பின்பு அதை கட்டுப்படுத்துவது சாத்தியமேயில்லை.

அர்பாபு எங்கிருக்கிறான் என்று நான் பார்த்தேன். அவன் பைனா குலருடன் வண்டியின் மேல் ஏறி உட்கார்ந்திருக்கிறான்.

நான் இருப்பது மணல் குன்றின் எதிர்ப்பக்கம் என்பதால், தற்போது நான் பைனாகுலரின் எல்லைக்கு வெளியே இருக்கிறேன்.

இதுவே... தப்பிக்க சரியான தருணம். தாமதித்தால் இனிமேல் இப்படியொரு வாய்ப்பு ஒருபோதுமே கிடைக்காது எனத் தோன்றியது.

அல்லாவின் அழைப்பு என் கண்முன்னால் இருப்பதைப் போலி ருந்தது.

நான் சட்டென எழுந்தேன். பின் எதைப்பற்றியுமே ஆலோசிக்க வில்லை. விரிந்து கிடந்த அந்த பாலைவனத்துக்குள் ஒரே ஓட்டமாக ஓட ஆரம்பித்தேன்.

அப்போது... இது என்ன எழவு..! என் பக்கத்தில் நின்றுகொண்டி ருந்த ஒரு பொலி ஆடும் என்னோடு ஓடிவரத் தொடங்கியது.

நான் என் கையிலிருந்த கம்பால் அதை அடித்து விரட்டியடிக்கப் பார்த்தேன். ஆனால் அதுவோ விடாமல் என்னைத் துரத்திக் கொண்டே வந்தது. தப்பித்துவிடவேண்டும் என்ற அளவு கடந்த ஆசையால் நான் பின்பக்கம் திரும்பவேயில்லை.

தொலைவு, நெடுந்தொலைவு, அதுமட்டும்தான் என் மனம் முழுக்க. எந்தபக்கம் போவதென்று தெரியவில்லை. ஓட வேண்டும். எப்படி யாவது தப்பிக்க வேண்டும். அதுமட்டும்தான்.

பொலியாடோ என் பின்னாலேயே ஓடி வந்துகொண்டிருக்கிறது. இப்போது என்னை முட்டித் தள்ளிவிடும் என்ற அளவுக்கு அது வேகமெடுத்துக் கொண்டிருந்தது. அந்த பீதியில் நான் இன்னும் வேகமாக ஓட ஆரம்பத்தேன்.

திடீரென்று என் பின்னால் வண்டியின் உறுமல் சத்தம். அதைக் கேட்டு பீதியால் என் நெஞ்சு பதை பதைத்தது. நான் ஓடுவதை அர் பாபு கவனித்துவிட்டான்! அவன் இதோ இப்போது என் அருகில் வந்துவிடுவான். நான் சாவது உறுதி.

திடீரென்று பின்னால் 'டுமீல்' என்று ஒரு வேட்டுச் சத்தம்.

நல்லவேளை அது என்மீது படவில்லை.

தோற்றுப்போவோம் என்று தெரிந்தபிறகும் நான் வேகமாக ஓடிக்கொண்டிருந்தேன்.

அடுத்த வெடிச் சத்தம் கேட்பதற்கும், ஒரு பெரும் அலறலுடன் பொலியாடு என் மேல் விழுவதற்கும் சரியாக இருந்தது.

பம்ப் செட்டிலிருந்து தண்ணீர் பாய்வது போல், அதன் நெஞ்சிலி ருந்து பச்சை ரத்தம் பீச்சியடித்தது. அந்த ரத்தக் குளியலுடனேயே சற்றுதூரம் ஓடிய பொலியாடு பின் பொத்தென்று கீழே விழுந்தது.

அப்போது அர்பாபு என் பக்கத்தில் வந்துவிட்டான்.

நான் தோற்றுவிட்டேன்.

நான் ஓடிப்போய் அர்பாபுவின் கால்களில் விழுந்தேன்.

அவனோ வழக்கம்போல் பெல்ட்டை அவிழ்த்து என்னை விளாசித் தள்ளினான்.

நான் கதறி அழுதேன்.

"போ, போய் வண்டியில் ஏறு" அர்பாபு உறுமினான்.

அடிபட்ட நாய்க் குட்டி ஈனஸ்வரத்தில் முனகிக்கொண்டு வாலைச் சுருட்டியபடியே கூண்டைப்பார்த்து ஓடிப்போவதைப் போல நான் பிக்-அப் வேனின் பின்பக்கம் ஏறி உட்கார்ந்தேன்.

ஆடு இறந்து போயிருந்தது.

அர்பாபு அதை இழுத்து வந்து பிக்-அப் வேனின் உள்ளே வீசியெறிந்தான்.

அப்போதும் எனக்கு சில பெல்ட்டடிகள் கிடைத்தன.

நான் அலறிக்கொண்டே வண்டியின் மூலைக்கு ஓடினேன்.

குண்டடிபட்ட ஆடு கண்களை விரித்தபடியே என் பக்கத்தில் சலனமற்றுக் கிடந்தது.

எனக்காகத்தானே இவன் தன் உயிரை பறி கொடுத்திருக்கிறான். என் கண்களிலிருந்து கண்ணீர் மழையாய் வழிந்தோடியது.

என் தோழனே... நான் ஓடும்போது என் பின்னால் ஓடிவர, துப்பாக்கி குண்டு சீறிப்பாய்ந்து வரும்போது எனக்காக உன் மார்பை திறந்து காட்ட உனக்கு யார் சொன்னார்கள்?

தப்பிக்கும் நேரம் வந்து விட்டது என்னும் என் நினைப்பு தவறாகி விட்டது. அது அல்லாவின் அழைப்பு என்று தவறாக நினைத்து விட்டேன். பெரும்பாலும் இப்படித்தான், திடீரென்று தோன்றும் சில நினைப்புகள், அது அல்லாவின் அழைப்பு என்று நம்மை தவறாக நினைக்க வைத்துவிடும்.

ஆனால் அல்லாவுக்குத் தெரியும், ஒருவனின் சரியான நேரம் எது என்று. அதை சரியாகக் கணிக்கும் அளவுக்கு நமக்கு அல்லாவுடன் நெருக்கமான உறவு இருக்கவேண்டும். என்னிடம் அது இல்லாமல் போனதே!

ஆனாலும் அவர் என்னைக் காப்பாற்றி விட்டார். இறைவனின் கட்டளைப்படி, இப்ராஹிம் நபி தனது மகனுக்குப் பதிலாக ஆட்டை பலி கொடுத்தது போல, எனக்குப் பதிலாக வைக்கப்பட்ட பலியாடு நீ...?

சற்று நேரத்திற்குள் வண்டி கூடாரத்தின் முன்னால் போய் நின்றது.

அர்பாபு என்னை தரதரவென்று இழுத்துக்கொண்டுபோய் ஒரு மஸராவுக்குள் கட்டிப்போட்டான்.

அதன்பின் அவன் ஆத்திரம் தீரும்வரை என்னை அடித்து துவைத்தான். என் உடம்பிலிருந்து ரத்தம் ஆறாய் வழிந்தது.

ஆனாலும் நான் அழவில்லை. என் கண்ணிலிருந்து ஒரு சொட்டுக் கண்ணீர்கூட கீழே சிந்தவில்லை. அத்தனை வலியையும் நான் பொறுமையாக தாங்கிக்கொண்டேன்.

எனக்காக ஒரு ஆடு தன்னுடைய உயிரையே பறி கொடுத்திருக்கிறது. இன்னமும் மிச்சமிருக்கும் என் விதிக்காக நான் அழுதால் அந்த அல்லா கூட என்னை மன்னிக்க மாட்டார்.

என் கண்முன்னாலேயே அந்த ஆட்டின் தோலை உரித்தெடுத்த அர்பாபு, கத்தியால் அதைக் கண்டதுண்டமாக வெட்டினான். பின்பு வெட்ட வெளியில் தீ மூட்டி அதை சுட்டெடுத்தவன், ஆசை தீரும் வரை அதை அள்ளியள்ளித் தின்றான். மிச்சமிருந்த சில துண்டுகளைக் கொண்டு வந்து என்னிடம் தந்தான்.

நான் வேண்டாம்... வேண்டாம் என மறுத்தேன்.

மூர்க்கத்துடன் என்னை உதைத்தவன், சில துண்டுகளை என் வாய்க்குள் வலுக்கட்டாயமாகத் திணித்தான்.

சொந்த சகோதரனின் மாமிசத்தை உண்பதைப் போல் மனம் அதிர்ந்த நான் வாயை இறுக்கமாக மூடிக்கொண்டேன்.

கண்ணீரும், வாந்தியுமாக நான் பெருங்குரலெடுத்து அலறினேன்.

உள்ளே திணிக்கப்பட்ட சிறு துண்டுகள் வாந்தியில் வெளியே வந்து விழுந்தன.

அதன்பின் என் வாழ்க்கையில் நான் ஒரு போதுமே ஆட்டு மாமிசம் தின்றதில்லை, தின்னத் தோன்றவுமில்லை.

அன்றும், மறுநாளும் அர்பாபு என்ன மஸராவுக்குள்ளேயே அடைத்துப்போட்டிருந்தான்; வெளியே எங்குமே விடவில்லை. ஒருதுளி தண்ணீர்கூட தரவில்லை. குபூஸை கண்ணிலேயே காட்டவில்லை.

இரண்டு நாட்களை எப்படியோ பல்லைக் கடித்துக் கொண்டு தள்ளிவிட்டேன். இவையெல்லாம் எனக்காக உயிர்விட்ட அந்த ஆட்டுத் தோழனுக்காக நான் செய்யும் தியாகம் என்று என்னை நானே சமாதானப்படுத்திக் கொண்டேன்.

இரண்டாம் நாள் இரவு என்னால் பசியைத் தாங்கவே முடிய வில்லை. அர்பாபு உறங்கிவிட்டதை நிச்சயப்படுத்திக் கொண்டு நான் மெதுவாக என் கட்டுகளை அவிழ்த்தெறிந்தேன்.

ஆடுகளுக்கிடையே ஆடாக ஊர்ந்து போய் தண்ணீர் தொட்டியிலிருந்து தண்ணீரை அள்ளி அள்ளி குடித்தேன்.

அப்பாடா, இப்போதுதான் உயிர் வந்தது.

பசி! தண்ணீர் தொட்டிக்கு பக்கத்திலிருந்த கோதுமைத் தொட்டியில் ஆடுகள் தின்றது போக கொஞ்சம் கோதுமை சிதறிக் கிடந்தது

நான் அதைப் பொறுக்கியெடுத்து வேகமாகத் தின்றேன்.

தவிடு நீக்காத பச்சைக் கோதுமை!

அந்தத் தொட்டிக்கு அருகிலுள்ள சிறிய தொட்டியில் உப்புப் பரல்கள் நிறைத்து வைக்கப்பட்டிருந்தன.

அதிலிருந்து கொஞ்சம் உப்பையெடுத்து கோதுமையுடன் கலந்து சாப்பிட்டேன். அப்போதுதான் பச்சைக் கோதுமைக்கு அப்படியொரு ருசியிருப்பதைத் தெரிந்துகொண்டேன்.

வாய் வலிக்க கோதுமையைத் தின்றுவிட்டு தண்ணீர் தொட்டியிருந்து மேலும் கொஞ்சம் தண்ணீர் எடுத்துக் குடித்தபிறகு தான் எனக்கு ஆசுவாசம் வந்தது.

களைப்புடன் நான் மெதுவாக ஆடுகளுக்குப் பக்கத்தில் போய்ப் படுத்துக் கொண்டேன். படுத்த உடனேயே உறங்கியும் போனேன் நல்ல சுகமான உறக்கம்.

அப்போது நான் உண்மையிலேயே ஓர் ஆடாகிப் போயிருந்தேன்

# 23

வெயிலின் உக்கிரம் கூடிக்கொண்டே வந்தது.

வந்திறங்கிய தினம் "ஸ்... இது என்ன சூடு?" என்று நான் ஆச்சரியப்பட்டேன். ஆனால் அது சூட்டின் வெறும் துவக்கம் மட்டுமே. நாட்கள் போகப்போக அதன் உக்கிரம் கூடிக் கொண்டேயிருந்தது.

வெக்கை அதன் சர்வ சக்தியையும் காற்றில் நிரப்பி அனுப்பியது. ஒவ்வொரு முறை காற்று வீசும்போதும் ஒரு செங்கல் சூளைக்குள் அகப்பட்டவனைப்போல் நான் வெந்து கொண்டிருந்தேன்.

அப்போதைய எனது மிகப் பெரிய ஆசை... கனவு... பிரார்த்தனை என்னவாக இருந்திருக்கும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்? இங்கிருந்து தப்பித்து போவதா? குடிக்க தண்ணீர் கிடைப்பதா? கொஞ்சம் நல்ல சாப்பாடு? என் மகனை ஒரு தடவை பார்ப்பது? என் சைனுவுடன் ஒரு தடவை பேசுவது?

இல்லை... இவை எதுவுமேயில்லை. ஒரு நிழலில் போய் கொஞ்ச நேரம் உட்கார வேண்டும். அதுதான் அப்போதைய எனது தணியாத ஆசை.

நிழல் ஒரு கனவாகிப் போனவனின் வேதனையைக் கொஞ்சம் எண்ணிப் பாருங்கள்! எனது அங்கியைக் கழற்றி ஒரு நிழலை உருவாக்கக்கூட நான் முயற்சித்திருக்கிறேன்.

என்ன சொல்ல? சொன்னால் நீங்கள் நம்புவீர்களா? என் கையிலிருக்கும் கம்பிலிருந்து விழும் நிழலைக்கூட நான் ஆசையுடன் பார்த்திருக்கிறேன். நிழல் என்னும் அம்சமே இல்லாத முழு மொட்டைப் பாலைவனம் அது.

ஆடு தொடங்கியதோடு அந்த நாற்றம்பிடித்த கம்பளிப் போர்வையைக் கழற்றி கட்டிலின் மேல் இழுத்துக் கட்டி நானொரு நிழல் கூடாரம் அமைத்தேன்.

அதற்கடியில் இருந்தால் கொஞ்சம் ஆசுவாசமாக இருக்கும்.

ஆனால் அதில் உட்கார நேரம் எங்கே இருக்கிறது?

நேரம் வெளுக்கும் முன்னால் தொடங்கும் வேலை, ராத்திரி மணி பத்தானாலும் தீராது.

ஒரு செட் ஆடுகளை நடக்கக் கூட்டிக் கொண்டுபோய் பின்னர் மஸராவுக்குத் திரும்புவதற்குள், அடுத்த செட்டைத் திறந்து விட்டிருப்பான் அர்பாபு.

இரும்பு டாங்கிலுள்ள கொதிக்கும் வெந்நீரிலிருந்து அவசர அவசரமாக ரெண்டு குவளையை வாய்க்குள் கவிழ்ப்பதற்குத்தான் அப்போது நேரமிருக்கும்.

அதற்குள் ஆடுகளெல்லாம் நெடுந்தூரத்துக்கு ஓடிப்போயிருக்கும்.

அப்போதே அவற்றின் பின்னால் போகாவிட்டால் அவை வழக்கம் போல் தமது காட்டுப்புத்திக்கு தாவிவிடும். அதன்பின் அவற்றை ஒன்று சேர்க்க என்ன பாடுபட வேண்டும் என்று சொல்லவேண்டியதில்லை.

அதனால் ஒரு நிமிஷம்கூட தாமதிக்காமல் நான் பாலைவனத்துக்குள் ஓடுவேன். அப்படி ஓடியோடி என் வாயிலிருந்து பதையும் நுரையுமாக வழியும், வெறிநாயின் வாயிலிருந்து ஒழுகுவதைப்போல.

"தறுதலைப் பையனின் கதை போல பாலைவனத்தில் இந்த விலங்குகளுடன் கிடந்து அல்லாட என் அல்லாவே நான் உன்னோடும், என் பிதாவோடும் அப்படி என்னதான் பாவம் செய்துவிட்டேன்," நான் வானத்தைப் பார்த்துக் கேட்பேன்.

அங்கிருந்து சுட்டெரிக்கும் சூரியனின் வடிவத்தில் அல்லா என்னைப் பார்ப்பார். 'நீ கடந்து போகவேண்டிய துயரங்களின் தினங்கள் இனிமேல்தான் வரப்போகின்றன' என்று என்னிடம் சொல்வார்.

பாலைவனத்தின் மீட்பன் போல நான் அந்த வறுபட்ட மணலில் முழந்தாளிட்டு ஆகாயத்தைப் பார்த்து பிரார்த்தனை செய்வேன்.

"எனது அல்லாவே, இந்த வேதனைகளிலிருந்து என்னை சீக்கிரமாக விடுவித்துவிடுங்கள். உனது ஜனங்களான இஸ்ரேலியருக்காக மூஸா என்னும் மீட்பரை அனுப்பி வைத்ததைப்போல, எனக்கும் ஒரு மீட்பரை அனுப்பி வையுங்கள். இந்த அடிமைத்தளையிலிருந்து விடுதலை பெற எனக்கு உதவுங்கள்..."

அல்லா எனது பிரார்த்தனையைக் கேட்டாரா என்று தெரியவில்லை. ஆனால் கேட்டிருப்பார் எனும் ஒரு நம்பிக்கை எனக்களித்த ஆத்ம பலம் மிகப் பெரியது.

“நம்பிக்கையற்றவர்களே... பரம காருண்யனான அல்லா நல்கிய அழகிய பசுஞ்சோலையில் மெய் மறந்து வாழும் பாக்கியம் பெற்றவர்களே... உங்களைப் பொறுத்தவரை பிராத்தனைகள் வெறும் பிரசங்கங்களாகவும், சடங்குகளுமாக இருக்கலாம். ஆனால் எனக்கோ அதுதான் என் வாழ்க்கையின் கடைசி அச்சாணி.

உடலளவில் உருக்குலைந்து சல்லடையாகிப் போனாலும் என் ஆத்மா உறுதி பெற்றிருந்தது இந்த நம்பிக்கையின் மீதுதான். அதுமட்டும் இல்லையென்றால் அந்த நெருப்புக் காற்றில் நானொரு நாணல் புல்போல எரிந்து சாம்பாலாகிப் போயிருப்பேன்.”

பாலைவனம் எவ்வளவு வேகமாக சூடாகிறதோ அதைவிடவும் விரைவாகக் குளிர்ந்துவிடும். ராத்திரி எட்டு அல்லது ஒன்பது மணிக்கெல்லாம் மணல் ஜில்லென்று குளிர்ந்து போகும். குளிர்ச்சியான அந்த மணலில் படுத்து உறங்குவது ஒரு சுகமான அனுபவம்.

பூமியின் மடியிலிருந்து ஒரு குளிர்ந்த நீரூற்று மேல்நோக்கி பீறிட்டு வந்து நம் உடலெங்கும் பாய்வது போன்ற ஆனந்தமான அனுபவம். அதில் பகல் நேர களைப்பெல்லாம் கரைந்து ஆவியாகிப் போய்விடும். பூமியின் அடித்தட்டு முழுவதும் தகதகவென கொதிக்கும் உருகிய பாறைக்குழம்பு என்று சொன்னால் நான் நம்பவேமாட்டேன். பாலை வனத்தில் தண்ணீரே கிடையாது என்று யாராவது சொன்னாலும் நான் நம்பத் தயாராக இல்லை.

நான் படுத்திருக்கும் மண் தரையின் கீழே ஒரு நதி நிசப்தமாக ஓடிக்கொண்டிருப்பதாகவே நம்பிக்கொண்டிருக்கிறேன். அந்த நீர்ப் பரப்பின் மீதுதான் நான் படுத்து உறங்குகிறேன், ஒரு படகுக்குள் இருப்பதைப்போல். அந்த நினைவு தரும் திருப்தியில் நான் ஆழ்ந்து உறங்குகிறேன். ஆனால் இந்த சுகம் அதிகநாள் நீடிக்கவில்லை.

அந்த குளிர்மண் படுக்கையை பயத்துடன் உதறி விட வேண்டிய ஒரு சம்பவம் விரைவிலேயே நிகழ்ந்தது.

ஒரு நாள் காலை வழக்கம்போல் மஸராவுக்குள் நுழைந்த நான் அந்தக் காட்சியைப் பார்த்து அதிர்ந்து போனேன்.

மூன்று ஆடுகள் இறந்து கிடந்தன!

நேற்றுவரை உற்சாகமாக துள்ளிக்குதித்தாடிய ஆடுகள். அவற்றிலொன்று முழு கர்ப்பிணி. என்ன நடந்தது என்று எனக்கு எதுவுமே புரியவில்லை.

ஏதாவது நோயா? அப்படியிருந்தாலும் அதெப்படி ஒரே நேரத்தில் மூன்று ஆடுகள்!

கடவுளே, இது ஏதாவது தொற்று நோயா? ஆனால் அதன் சுவடுகள் எதையுமே காணவில்லையே! கவலையும் பயமுமாக நான் கூடாரத்தை நோக்கி ஓடினேன்.

தட்டுத்தடுமாறி அர்பாபுவிடன் விஷத்தைச் சொன்னேன், மலையாளத்தில்தான்.

இத்தனை நாட்களுக்குள் அர்பாபு என்னுடைய மொழியைப் புரிந்துகொண்டிருக்க வேண்டும். இல்லையென்றாலும் கேட்பவனுக்குத்தான் அது தேவை என்னும் நிலை வந்தால் எந்த மொழியானாலும் அது அவனுக்குப் புரிந்துவிடும் என்பதைப் பல சந்தர்ப்பங்கள் எனக்குக் காட்டித்தந்திருக்கின்றன.

அப்படியில்லாமல், அது சொல்பவனின் தேவையென்றால், அதை எந்த மொழியில் சொன்னாலும் அது கேட்பவனுக்குப் புரியாது என்பதும் எனது அனுபவம்!

என்னுடன் மஸராவுக்கு வந்த அர்பாபு, இறந்து கிடந்த ஆடுகளைச் சுற்றிச் சுற்றி வந்தான். அவற்றை அப்படியும் இப்படியுமாக புரட்டிப் பார்த்தான். அவற்றின் சலனமற்ற கண்ணிமைகளை விலக்கிப் பார்த்தான்.

ஆடுகள் இறந்த குற்றம் என் மீது எப்போது விழப்போகிறதோ? எப்போது அடி வந்து இறங்குமோ? என்னும் நடுக்கத்துடன் நானும் அவன் கூடவே நின்று கொண்டிருந்தேன்.

ஆனால் என்ன ஆச்சரியம், அப்படி எதுவுமே நிகழவில்லை.

மஸராவின் வெளிப்பக்கமாக ஒன்றிரண்டு தடவை சுற்றி வந்த அர்பாபு, நேராக வண்டிக்குள்போய் ஒரு மண்வெட்டியை எடுத்து வந்து என்னிடம் தந்து, ஒரு பெரிய குழி வெட்டும்படியாகச் சொன்னான். நான் குழி வெட்டி முடித்ததும் அந்த ஆடுகளை தானே இழுத்து வந்து குழிக்குள் தள்ளி மூடினான்.

எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

'அறுத்த கைக்கு உப்பு வைக்காத' இந்த கஞ்சமகாப் பிரபு நல்ல விலை கிடைக்கும் இந்த ஆடுகளை குழியில் தள்ளி மூடுகிறான் என்றால்..?

எனக்கு எதுவுமே புரியவில்லை.

அர்பாபுவும் என்னிடம் எதுவும் சொல்லவில்லை.

நான் என்னுடைய வழக்கமான வேலைகளைப் பார்க்கப்போனேன். பால் கறந்தேன். அதில் கொஞ்சமெடுத்து அர்பாபுவுக்கு கொண்டுபோய் கொடுத்தேன். நானும் கொஞ்சம் குடித்தேன். எஞ்சியதை ஆட்டுக் குட்டிகளுக்கு ஊற்றி வைத்தேன். ஆடுகளுடன் நடக்கப்போனேன்.

ஒன்றிரண்டு குபூஸ்களை தண்ணீரில் நனைத்து விழுங்கினேன். மஸராவை சுத்தம் செய்தேன். தொட்டிகளில் தண்ணீரும் கோதுமையும் நிறைத்து வைத்தேன். வைக்கோலும் புல்லும் கொண்டு வைத்தேன். இப்படியாக என்னுடைய வழக்கமான வேலைகள் ஒருவித மாற்றமும் இல்லாமல் தொடர்ந்தன.

ஆடுகள் செத்தாலென்ன, பிழைத்தால் என்ன? அர்பாபுக்குத்தான் நஷ்டம். எனக்கு லாபமுமில்லை, நஷ்டமுமில்லை. ஆனாலும் அன்றைய

தினம் முழுவதுமே மனதின் ஓரத்தில் வேதனை என்னுமொரு முள் தைத்துக் கொண்டேயிருந்தது.

அப்போதெல்லாம் நான் திரும்பத்திரும்ப எனக்குள்ளேயே சொல்லிக் கொண்டேன்: 'ஆடுகள் செத்துப் போனால் உனக்கென்ன? இல்லை உயிரோடிருந்தால்தான் என்ன? அர்பாபுக்கு மூன்று ஆடுகள் நஷ்டம், அவ்வளவுதான். இதில் உனக்கு இலாபமோ, நஷ்டமோ எதுவுமே இல்லை.'

ஆனால் என்னதான் முயன்றாலும் அந்த சாவு மீண்டும் மீண்டும் என் மனதை அலட்டிக் கொண்டேயிருந்தது. அதிலும் அந்த கர்ப்பிணி ஆட்டின் மரணம்..

தலைப்பிரசவத்திற்காக தயாராகிக் கொண்டிருந்த ஆடு அது! அதன் நடையிலும், பார்வையிலும் அதற்குரிய பெருமிதமும் கர்வமும் நிறைந்திருந்தது. ஆடென்றாலும் அதற்கும் சிந்தனைகள் இருக்குமே! அம்மாவாகி, குழந்தைக்கு பாலூட்டுவது, குட்டி துள்ளிக் குதிப்பது... என்று எத்தனை கனவுகள் கண்டிருக்கும் அது!

பாவம், ஓரிரவில் எல்லாம் அஸ்தமித்து விட்டதே.

இவ்வளவுதானோ நாம் கனவு காணும் வாழ்க்கை!

"என் பிரிய ஆடே, நாம் வாழும் இந்த வாழ்க்கை எவரோ ஒருவர் தந்த பரிசு. பரிசைத் தந்தவன் அனுமதித்த காலத்தைவிட ஒருநாள் கூட அதிகமாக வாழ நமக்கு உரிமையில்லை. அதுபோல பட வேண்டியதையெல்லாம் பட்டு முடிக்காமல் இங்கிருந்து போகவும் முடியாது.

சொல்லப்போனால் ஆடே, நீ பாக்கியசாலி. இந்த நரகத்தில் கிடந்து கஷ்டப்படாமல் உன்னால் வேகமாகப் போய்விட முடிந்ததே... ஆடே நீ துர்பாக்கியசாலி. உன் குழந்தையின் முகத்தை ஒரு தடவைகூட நீ பார்க்காமல் போய்விட்டாயே!

நானோ இரண்டு விதத்திலும் துர்பாக்கியசாலி. இந்த மஸராவுக் குள்ளேயே ஒரு புழு போல் கிடந்து உழல வேண்டும். அதே வேளையில் பிறந்த என் மகனை ஒரு முறை கூட பார்க்கவும் முடியாது, சபிக்கப் பட்ட வாழ்க்கை!"

ராத்திரி நேர குபூஸை தின்றுவிட்டு, வெறுந்தரையில் ஒரு கல்லைத் தலையணையாக வைத்து படுக்கப்போனேன். அப்போது வழக்கத்துக்கு மாறாக அர்பாபு வண்டியை ஸ்டார்ட் செய்யும் சத்தம் கேட்டது.

அர்பாபு வெளியே எங்காவது போகிறானோ...?

சட்டென்று எனக்குள் ஓர் ஆசை முளைத்தது.

அப்படியென்றால் இன்று எப்படியாவது தப்பித்துவிட வேண்டும்.

நான் ஆழ்ந்து உறங்குவதைப்போல் பாசாங்கு செய்தேன்.

ஆனாலும் என்னுடைய புலன்களெல்லாம் படு கூர்மையாக விழித்துக் கிடந்தன.

அர்பாபு வண்டியைக் கிளப்பி மெதுவாக மஸராவைச் சுற்றி சுற்றி வந்தான். அவன் எதையோ தேடிக்கொண்டிருப்பதுபோல் தோன்றியது.

இரண்டு மூன்றுமுறை மஸராவைச் சுற்றி வந்தவன், வண்டியை கூடாரத்தின் முன்னால் நிறுத்திவிட்டு உள்ளே இறங்கிப்போனான்.

ஆசையில் உதித்து வந்த எதிர்பார்ப்பின் சர்வ நட்சத்திரங்களும் ஒரு நொடியில் இருளில் ஆவியாகிப்போனது.

வருத்தமும், கோபமும் மேலிட நான் எல்லாவற்றையும் சபித்தேன், அல்லாவைக் கூட.

அன்றிரவு அப்படியே பல தடவை அர்பாபு வண்டியுடன் மஸராவையே சுற்றிச் சுற்றி வந்தான்.

என்ன செய்கிறான் இவன்...?

எனக்கு எதுவுமே புரியவில்லை. அவன் என்னிடம் எதுவுமே சொல்லவில்லையே. நானும் அவனிடம் கேட்கவில்லை. ஆடுகள் மனிதனிடம் பேசுமா என்ன?

மணல் தந்த சுகத்தில் நான் எப்படியோ உறங்கிப்போனேன். நேரம் நடு இரவைத் தாண்டியிருக்க வேண்டும். மஸராவுக்குள் ஆடுகள் அங்குமிங்குமாக ஓடும் சத்தத்தைக் கேட்டு நான் திடுக்கிட்டு கண் விழித்தேன்.

நான் பார்க்கும்போது அர்பாபு கலவரத்துடன் கம்பி வேலியைச் சுற்றி ஓடிக்கொண்டிருந்தான். அதற்கிடையே என்னையும் பெயர் சொல்லிக் கூப்பிட்டான். "ஹய்யா . . . ஹய்யா" என்று பயத்தால் அவன் கூப்பாடு போட்டுக் கொண்டிருந்தான்.

நான் விழுந்தடித்துக் கொண்டு ஓடினேன். என்னைப் பார்த்ததும் அர்பாபு என் கையில் ஒரு கம்பைத் தந்து என்னை மஸராவுக்குள் தள்ளிவிட்டான். என்னவென்றே புரியாமல் நான் திகைப்புடன் அங்குமிங்குமாகப் பார்த்தேன்.

அர்பாபுவோ "ஹூப்... ஹூப்... ஹைய்யா" என்று கூச்சலிட்டபடியே வண்டியை ஸ்டார்ட் செய்து, ஹெட்லைட்டை ஆன் செய்தான்.

சட்டென்று பளீரிட்ட அந்த வெளிச்சத்தை பார்த்து ஆடுகள் மேலும் மிரண்டன. நான் ஒவ்வொரு ஆடாக விலக்கிக்கொண்டு மெதுவாக முன்னேறினேன்.

இங்கே அப்படி என்னதான் நடக்கிறது?

நடந்து கொண்டிருந்த நான் சட்டென்று திடுக்கிட்டு நின்றேன்.

அல்லா! நான் வாய்விட்டு அலறினேன். என் ரோமங்கள் சிலிர்த்தன. நான் அலறிக்கொண்டே வாசலை நோக்கி ஓடிவந்தேன்.

ஒரு ஆட்டின் காலைச் சுற்றிக்கொண்டு ஒரு கருநாகம் சீறிக் கொண்டிருந்தது.

ஊரில் ஒரு தண்ணீர் பாம்பையோ சாரைப் பாம்பையோ பார்த்தால் பின்பு கொஞ்ச நாட்கள் அந்த பக்கமே போகாதவன் நான். 'பாம்பு' என்ற பெயரைக் கேட்டாலே என் உடல் நடுங்கும். வேர்க்க விறுவிறுக்க நான் மஸராவிலிருந்து வெளியே ஓடி வந்தேன்.

அதைப் பார்த்த அர்பாபு வண்டியிலிருந்து கோபத்துடன் இறங்கி வந்து என் கழுத்தைப் பிடித்து மீண்டும் மஸராவுக்குள் தள்ளினான். பின்பு கதவை வெளியிலிருந்து பூட்டிவிட்டான்.

இனி என் கண்முன்னால் இரண்டே இரண்டு வழிகள்தான். ஒன்று எப்படியாவது அந்த பாம்பை அடித்துக் கொல்வது. இல்லையென்றால் ஆடுகளுடன் ஆடாக நானும் பாம்பு கடிபட்டுச் சாவது.

தேவையே மனிதனுக்குள் வலிமையை நிரப்புகிறது. எனக்குள்ளோ பூர்த்தியாகாத பல்வேறு ஆசைகள் உறைந்து கிடக்கின்றன.

நான் இப்போது வீரனாகியே தீரவேண்டும். நான் வாழ்ந்தே ஆகவேண்டும்.

நான் ஆடுகளுக்கிடையே பதுங்கி பதுங்கி போய் பாம்பு சுற்றியிருந்த ஆட்டின் காலை குறிவைத்து ஓங்கி ஒரு அடி அடித்தேன். ஆட் கூட்டத்தைப் போலவே ஆட்டுக் கூட்டத்திலும் பாம்பின்மீது அடி படுவதில்லை.

முண்டியடித்து நிற்கும் ஆடுகளுக்கிடையில் பாம்புக்கு எப்படி அடிபடும்? அதன் உடலில் கம்பு ஒரு தட்டு தட்டியிருக்கும். அவ்வளவு தான். அது கோபாவேசத்துடன் என்னை நோக்கி சீறி வந்தது. நான் ஓடினேன்.

ஆனால் மஸராவின் கதவுகள்தான் பூட்டப்பட்டிருக்கிறதே. என்ன செய்வது...?

பயத்தால் வெளிறிய நான் சட்டென திரும்பி பைத்தியம் பிடித்தது போல் எந்த இலக்குமில்லாமல் கம்பால் தரையில் அங்குமிங்குமாக வேகமாக அடித்தேன். பெரும்பாலான அடிகள் ஆடுகளின் முதுகில் தான் பதிந்தது. அவை சிதறியோடின. நான் அடிப்பதை நிறுத்தவே யில்லை.

ஒரு அடிகூட பாம்பின் மீது பட்டிருக்காது. ஆனால் என் அடியின் வேகத்தைப் பார்த்து அது மிரண்டு போயிருக்க வேண்டும். எப்படியோ அது வெளியே தப்பி ஓடிவிட்டது.

அர்பாபு என்னை திட்டித் தீர்த்தான். அப்போதே ஆடுகளில் ஒன்று இறந்து போயிருந்தது. நான் அமைதியில்லாமல் தவித்தேன்.

அந்த இரவின் இறுதி பலன், அது மட்டுமே.

அன்றிரவுடன் என் குளிர் மண் படுக்கையும் காணாமல் போனது, என்றென்றைக்குமாக.

எத்தனையோ நாட்களாக நான் பல இரவுகள் தரையில் தான் படுத்து உறங்கியிருக்கிறேன்.

அப்போதெல்லாம் ஏதாவதொரு பாம்பு என்னைக் கடித்திருக்கலாமே; விஷம் தலைக்கேறி நான் இறந்து போயிருக்கலாமே. பாலைவனப் பாம்புகள் பயங்கர விஷம் கொண்டவை என்று கேள்விப்பட்டிருக்கிறேன். அது போகிற போக்கில் சற்றே என்னைத் தீண்டியிருந்தாலும் போதும், என் உயிர் பறந்திருக்கும்.

ஆனால் இதுவரை ஒரு பாம்பு கூட என்னைத் தேடிவரவில்லை. நான் படுத்திருப்பதைப் பார்த்து அவை விலகிப் போயிருக்கவேண்டும்.

கருணை நிறைந்த அல்லாதான் அனைத்தையும் முடிவு செய்கிறார். அதன்படியேதான் எல்லாம் நடக்கும். ஒரு பாம்பு கூட அவன் முடிவை மீறி நடக்காது. அல்லாவின் திருப்பாதங்களுக்கு ஆயிரம் நமஸ்காரம்.

மறுநாள் காலையில் மூன்று ஆட்டுக்குட்டிகள் மஸராவில் இறந்து கிடந்தன.

அவற்றிலொன்று எனது நபீல்!

# 24

இதுவரை நான் பார்த்ததிலேயே மிக ரம்மியமான காட்சி எதுவென்று கேட்டால் அது பாலைவனத்தின் சூரிய அஸ்தமனம்தான் என்று நான் உறுதியாகச் சொல்வேன்.

அப்போது சூரியன் மண்ணுக்குள் தலை நுழைக்கும் ஆமையை நினைவூட்டும். சற்று நேரத்திற்கெல்லாம் அது பதுங்கிப் பதுங்கி மணல் காடுகளுக்குள் மறைந்துவிடும்.

இந்த அற்புதக் காட்சியைப் பார்க்க ஸைனுவும் என்னுடன் இருந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருக்கும் என்று நான் ஏங்கி யிருக்கிறேன்.

நான் பிறந்த ஊரும், என் உறவுகளும், ஏன் என்னுடைய ஸைனுவும் என் மனதிலிருந்து மாயமாய் மறைந்து போய்விட்டார்கள் என்று நான் சொன்னாலும், இப்படிப்பட்ட சில அபூர்வ நேரங்களில் அவள் என் மனம் முழுக்க வந்து நிறைந்துவிடுவாள்.

அப்போதெல்லாம் வெறும் அழுகையும் தேம்பலும்தான். அழகிய காட்சிகளையும், மனம் லயித்த அனுபவங்களையும் பகிர்ந்து கொள்ள எவருமே இல்லாமல் போவது உலகின் பெருந்துயரங்களில் ஒன்று.

நான் சோர்வுடன் கட்டிலில் வந்து படுத்தேன், ஒரு அனாதைச் சடலம் போல.

நான் உறங்கப்போகும்போது வானம் முழுக்க நட்சத்திரங்களை வாரியிறைத்திருந்தது.

ஆனால் காலையில் கண் விழித்தபோது சுற்றுப்புறம் முழுவதுமே தூசிப்படலமாக காட்சியளித்தது. காற்றே இல்லை.

எங்கும் நிச்சலனம். ஆனால் எங்கிருந்தோ ரகசியமாக வந்தது போல் ஒரு தூசிக்காற்று சுற்றுப்புறம் முழுவதுமே வியாபித்துக் கிடந்தது.

அப்போது என்னைப் பார்த்து எனக்கே சிரிப்பு வந்தது. திரைப் படங்களில் வரும் கோமாளியைப் போலிருந்தேன் நான்.

புற்று போல் உடம்பெங்கும் மண் அப்பிக் கிடந்தது. திரும்பி ஆடுகளைப் பார்த்தேன். அவையும் தூசியில் குளித்துக் கிடந்தன.

மஸரா, தொட்டிகள், கம்பி வேலி, ஒட்டகங்கள், அர்பாபுவின் கூடாரம், வண்டி, என்னுடைய கட்டில், புல்கட்டு... என்று எல்லாமே தூசி மயம்.

குளிர் நாடுகளில் பனி பொழிந்து கிடக்கும் சினிமாக் காட்சிகள் தான் அப்போது என் நினைவுக்கு வந்தது.

நான் தலையை ஒரு சிலுப்பு சிலுப்பினேன். ஒரு செங்கல் சூளைக்குத் தேவையான மண் படலம் அதிலிருந்து உயரே பறந்தது. பயந்துபோன நான் தலைக்குள் விரலை நுழைத்து முடியிழைகளைத் துளாவ முயன்றேன்.

விரல்கள் உள்ளே போக முடியாதபடிக்கு அழுக்கும், தூசியுமாக முடி சடைபிடித்து கிடந்தது. தோளுயரத்துக்கு வளர்ந்த தலைமுடியும், நீண்ட தாடியும் புதர் மண்டிக் கிடந்தது.

செம்மறியாட்டின் உரோமத்தை வெட்டப் பயன்படுத்தும் பெரிய கத்திரியால் என்னுடைய தாடியையும், தலைமுடியையும் நான் பைத்தியம் பிடித்தவன்போல் கத்தரித்துத் தள்ளினேன்.

தண்ணீரே படாததால் தாடியும் முடியும் சொறி பிடித்து புண்ணாகியிருந்தது. மர்மப் பிரதேசத்திலும், அக்குளிலும் வளர்ந்திருந்த மயிர் ஏற்கனவே புண்ணாகி சொதசொதவென்றிருந்தன.

நினைத்தாலே குமட்டுகிறது. அங்கெல்லாம் ஆடுகளின் உடம்பிலிருந்த ஈரும் பேனும், பெயர் தெரியாத செள்ளுகளும் குடியேறியிருந்தன.

ராத்திரியாகி விட்டால் போதும், பகல் முழுவதும் வழிந்த வியர்வையும் அதில் சேர்ந்துகொள்ள... நமநமவென்று ஒரே அரிப்பும் சொறியுமாக இருக்கும். என் உடம்பு பேன்களின் வாழ்விடமாகவே மாறிப்போயிருந்தது. உடம்பெங்கும் அடை அடையாக சீலைப்பேன்கள், செள்ளுகள். என்னை விடவும் ஆடுகள் சுத்தமாக இருப்பதாகத் தோன்றியது எனக்கு.

# 25

புல்காரி ரமணியைப் பற்றி சொல்கிறேன் என்று உங்களிடம் சொல்லியிருந்தேன் அல்லவா? புல்காரி ரமணிக்கு மட்டுமல்ல மஸராவுக்குள் என்னால் இனம் காண முடிந்த எல்லா ஆடுகளுக்குமே நான் ஒவ்வொரு பெயர் வைத்திருந்தேன்.

சும்மா ஒரு சுவாரசியத்துக்காக. தேவைப்பட்டால் திட்டித் தீர்ப்ப தற்காக, கொஞ்சுவதற்காக.

கசாப்பு ராவுத்தர், மேரி மைமுனா, இண்டிப்போக்கர், நண்டு ராகவன், பருப்பு விஜயன், சக்கி, அம்மிணி, கௌஸு, ரௌஃப்பக், நபீல், பிங்கி, அம்மு, ரஸியா, தாஹிரா என்ற கிராமத்துப் பெயர் களுடன் ரஜினிகாந்த், வடிவேல்... ஏன் அரசியல் தலைவர்கள் வரை என்னுடைய மஸராவில் இருந்தார்கள்.

இவர்கள் எல்லோருமே ஏதாவதொரு விதத்தில் எனக்கு பிடித்த மானவர்கள்.

நீங்கள் ஆடுகளின் முகத்தைக் கூர்ந்து பார்த்திருக்கிறீர்களா? பார்த்திருந்தால் தெரியும், அவை ஒவ்வொன்றுக்கும் ஒரு மனிதனின் முகச்சாயல் இருப்பதை. ஆடுகளுக்கு, முகச்சாயலை வைத்து மட்டுமே நான் பெயர் கொடுப்பதில்லை. அதன் இயல்பு, நடை, குரல், பார்க்கும் பார்வை, போன்றவற்றோடு தொடர்புபடுத்த ஏதோவொரு சம்பவம் என்று, ஆடுகளின் பெயர்க் காரணம் நீண்டு போகும். ஊரில் ஆட்களின் பட்டப்பெயர்களுக்கு காரணமிருப்பதைப் போல.

ஒரு தடவை என் நெஞ்சில் முட்டி என் கையை ஒடித்த பொலி ஆட்டைப் பற்றி சொல்லியிருக்கிறேன் அல்லவா? அவனுக்கு நான் வைத்த பெயர் கசாப்பு ராவுத்தர்.

பெயரைப்போலவே எங்கள் ஊரில் ஒரு பிரபலமான ரவுடி இருந்தான். அவன் பெயர் கசாப்பு ராவுத்தர். ஒரு நாள் என்னுடைய வாப்பா ஒரு மரப் பாலத்தின் வழியாக வாய்க்காலை கடந்து கொண்டிருந்தார். ஏகதேசம் பாலத்தின் பாதி தூரம் வந்தபோது தான் பார்த்தார்.

எதிர்முனையில் கசாப்பு ராவுத்தர் வந்து கொண்டிருக்கிறான். அதுவோ ஒற்றைத்தடி பாலம். சிரமத்துடன் ஒருவர் மட்டுமே நடந்து போக முடியும்.

கசாப்பு ராவுத்தரோ எதைப்பற்றியும் கவலைப்படாமல் பாலத்தில் நெஞ்சை நிமிர்த்தியபடியே வந்து கொண்டிருக்கிறான். பக்கத்தில் வந்ததும் அப்பாவை திரும்பிப்போகும்படி சொன்னான்.

வாப்பாவோ முடியாது என்று தலையாட்டினார். ராவுத்தர் ஒன்றிரண்டு தடவை சொல்லிப் பார்த்தான். வாப்பா கேட்கவில்லை. மூன்றாவது முறை ராவுத்தர் பேசவில்லை. வேகமாக வந்து தலையால் வாப்பாவின் நெஞ்சில் ஓங்கி ஓர் இடி. பன்னிரெண்டடி ஆழமுள்ள வாய்க்காலின் ஒரு ஓரத்தில் கிடந்த கருங்கல்லில் கை இடிக்க நிலைகுலைந்து விழுந்தார் வாப்பா.

உடனடியாக ஆலப்புழை மருத்துவக் கல்லூரி ஆஸ்பத்திரிக்கு கொண்டு போய் சிகிச்சையளித்தாலும் அதன்பின் வாப்பாவின் கை வலியும், ஒரு பக்க வளைவும் அவர் இறக்கும் வரையிலும் சரியாகவேயில்லை.

அந்த சம்பவத்துக்கு பிறகு வாப்பாவுக்கு 'நொண்டிக் கை அப்துல்லா' என்ற பட்டப்பெயரும் நிலைத்துவிட்டது.

கசாப்பு ராவுத்தர் அன்று வாப்பாவை முட்டித் தள்ளிய அதே விதத்தில்தான் பொலியாடும் என்னை முட்டித் தள்ளியது. வாப்பாவின் கையைப் போலவே என் கையும் ஒடிந்தது. அதனால்தான் அந்த பொலியாட்டுக்கு நான் 'கசாப்பு ராவுத்தர்' என்று பொருத்தமாகப் பெயர் வைத்தேன்.

அதே நேரம் ஒருவருக்குப் பட்டப்பெயர் வைக்க விசித்திரமான, அதே வேளையில் வெளியே சொல்ல முடியாத, நமக்கு மட்டுமே தெரிந்த பல காரணங்களும் இருக்கலாம். அதனால் எல்லா பெயர்களின் காரணத்தையும் பிறரிடம் சொல்லிக்கொண்டிருக்க முடியாது.

அப்படிப்பட்ட ஒரு பெயர்தான் மேரி மைமுனா.

என் காதல் கதையின் முதல் நாயகி. ஐந்தாம் வகுப்பில் தான் என் முதல் காதல் அரும்பியது.

என்னுடைய வகுப்பின் மிக அழகான, துடிப்பான, நல்ல சங்கீத ஞானம் உள்ளவள் மேரி. அந்த சின்னஞ்சிறு பருவத்தில் நான் அவளுடன் சேர்ந்திருப்பதாகக் கண்ட கனவுகளுக்குப் பஞ்சமேயில்லை.

ஆனால் இந்த காதல் விஷயம் எப்படியோ என் உம்மாவுக்கு

தெரிந்துவிட்டது. என்னுடைய வாயைப் பிடுங்கி விஷயத்தை உம்மா விடம் போட்டுக் கொடுத்த நயவஞ்சகன், என்னுடைய மூத்த அண்ணன் அப்துல்.

என் உம்மா ஒரு சிரிப்புக்காரி. எதைக் கேட்டாலும் உடல் குலுங்கச் சிரிப்பாள். இந்த கதையைக் கேட்டபோதும் வழக்கம்போலவே உம்மா குலுங்கி குலுங்கிச் சிரித்தாள்.

"இந்த பேரைக் கேட்டால் ஒரு கிருஸ்தவ பிள்ளைய போலல்லடா இருக்கு!" சிரிப்புக்கிடையில் உம்மாவின் நெற்றி சுருங்கியது.

"இல்லம்மா... அவளும் நம்ம ஜாதிதான்." நான் அவசர அவசரமாக சொன்னேன்.

"நம்முடைய ஜாதிலெ ஒரு மேரியா?" உம்மா மறுபடியும் சிரித்தாள்.

அப்போதுதான் அவள் நம்முடைய ஜாதிக்காரியாக இருக்க மாட்டாளோ என்று எனக்கு உறைத்தது.

மேரி அவளுடைய முழுபெயரில்லை என்று நான் அப்போது என் வாயில் வந்த ஒரு பெயரைச் சொல்லி வைத்தேன்.

மேரி மைமுனா!

"அப்ப சரி. நான் பள்ளிக்கூடத்துக்கு வரும்போது அந்த பேர்க் காரியை ஒண்ணு பார்க்கணம்..." உம்மாவின் சிரிப்பு தொடர்ந்தது.

ஆனால் என்னுடைய மேரி மைமுனாவைப் பார்க்க அம்மா பள்ளிக்கு வரவேயில்லை. அதற்கு முன்பே நான் படிப்பை நிறுத்தி விட்டேன். எனது வாப்பா இறந்தது அந்த வருடத்தில்தான்.

எத்தனையோ காலங்களாகி விட்டது, அந்த பெயரை நினைத்து.

ஆனால் எப்போதோ மஸராவுக்குள் ஓர் அழகிய ஆட்டை பார்த்த போது சட்டென்று எனக்குள் பழைய நினைவுகள் ஆர்ப்பரித்து எழுந்தன. அந்த ஆட்டைப் பார்க்கும்போதெல்லாம் எனக்கு மேரி மைமுனாவின் நினைவுதான் வந்தது.

வடிவேலுவைப்போல் சிரிக்கும் ஆடுகள், கமலஹாசனைப்போல் கால்களை அகற்றி வைத்து நடக்கும் ஆடுகள், சந்திரபாபுபோல் நீண்ட முகம் கொண்ட ஆடுகள் என்னுடைய மஸராவில் இருந்தன, என்று சொன்னால் உங்களால் நம்பமுடியுமா?

மஸராவைப் பொறுத்தவரையில் சில ஆடுகள்தான் அங்கு நிலை யாக இருக்கும். நல்ல பேற்றுத்திறனும், பால் சுரப்பும் கொண்ட பெண்ணாடுகள், நல்ல 'வித்து' திறன்கொண்ட சில பொலியாடுகள், இவை மட்டுமே.

பாக்கியிருந்தவையெல்லாம் அவ்வப்போது சந்தைக்கும், கசாப்பு கடைக்கும் அனுப்பி வைக்கப்பட்டுவிடும்.

இதில் வேடிக்கையான ஒரு விஷயம் என்னவென்றால், அந்த பெயர்க்காரன் போய்விட்டால் அதோடு அந்த பெயரே அழிந்து

போவதில்லை என்பதுதான். கொஞ்ச நாளுக்குள்ளேயே அதே இயல்பும், முகச்சாயலும் கொண்ட வேறொரு ஆடு என் கண்ணில் தட்டுப்பட்டுவிடும்.

பின் மறுபடியும் வடிவேல், கமலஹாசன், சந்திரபாபு, நண்டு ராகவன், கௌஸ், அம்மணி. . .

ஆடுகளும் மனிதனைப்போலவே தலைமுறை தலைமுறையாக பாரம்பரியத்தை எடுத்து செல்கின்றன என்றே எனக்குத் தோன்றுகிறது.

நான் மஸராவுக்கு போன தினத்தில், முதன்முதலாக பால் கறக்கச் சென்ற ஆட்டுக்குத்தான் பின்பு நான் 'புல்காரி ரமணி' என்று பெயர் வைத்தேன். நான் முதலாக 'கை வைத்த' ஆடு என்பதே அந்த பெயருக்கு காரணம்.

நான் சிறுவனாக இருந்தபோது நடந்த சம்பவம். அது இப்போதும் என் நினைவிலிருக்கிறது.

என்னுடைய மாமா ஒருவர் அடிக்கடி எங்கள் வீட்டுக்கு வந்து போவார். நான் அவரை 'போக்கர் மாமா' என்று தான் கூப்பிடுவேன். போக்கர் மாமா வரும்போதெல்லாம் மதிய சாப்பாட்டுக்குப்பின் என்னையும் வெளியே நடக்க கூட்டிக்கொண்டு போவார்.

அப்படிப் போகும்போது, "அக்கா ஒரு இருபத்தஞ்சு பைசா தா. போகும் வழியில் இவனுக்கு சாக்லேட் வாங்கிக் கொடுக்கணும்" என்று சொல்லி உம்மாவிடம் இருபத்தியஞ்சு பைசா வாங்கிக் கொள் வார். ஆனால் எனக்கு சாக்லேட் எதுவும் கிடைக்காது.

போக்கர் மாமா என்னையும் கூட்டிக்கொண்டு சற்று தூரத்திலிருக் கும் ஒரு பம்ப் செட்டுக்கு போய், புல் அறுக்க வரும் பெண்களுக்காகக் காத்துக் கொண்டிருப்பார். அப்படி வரும் பெண்களில் ஒருத்திதான் ரமணி.

எனக்கு சாக்லேட் வாங்க வேண்டும் என்று உம்மாவிடம் வாங்கிய பைசாவை ரமணியிடம் கொடுத்துவிட்டு, அவள் மார்பைப் பிடித்து கசக்குவதுதான் மாமனின் தினசரி வேலை.

இதைப் பார்த்து எனக்கும் ஒரு நாள் ஆசை வந்தது. 'புல்காரி ரமணியின் முலையை ஒரு தடவையாவது தொட்டுப் பார்க்கணும்.'

"இருபத்தியஞ்சு பைசா கொண்டு வந்தால் உனக்கும் முலை பிடிக்கலாம்" என்று ரமணி சொன்னாள்.

"பைசா இல்லையே" என்று சொன்னபோது, "போடா. . ." என்று செல்லமாக என் தலையில் ஒரு தட்டு தட்டி, விரட்டி விட்டாள்.

வீட்டில் பைசா கேட்க பயம், அடி விழும்.

ஆனால் அந்த ஆசை மட்டும் குறையவேயில்லை.

ஒரு நாள் உம்மாவின் அரிசிப் பெட்டியிலிருந்து ஒரு இருபத்தியஞ்சு பைசாவை திருடி, புல்காரி ரமணியின் முலையைக் கசக்கினேன். அதன் சுகம் புரிந்தது.

ஆனால் ஒரு பைசாவுக்குகூட கணக்கு வைத்திருக்கும் உம்மாவிடம் வெகு சீக்கிரத்திலேயே நான் பிடிபட்டுவிட்டேன். அதட்டி உருட்டிய போது நான் விஷயத்தைப்போட்டுடைத்தேன்.

அதன்பிறகு போக்கர் மாமா என் வீட்டுப் பக்கமாக தலை வைத்துகூட படுப்பதில்லை. மட்டுமல்ல அவருக்கு 'மொல மாமன்' என்னும் பட்டப்பெயரும் வாய்த்தது.

எங்களூரின் பெயர் பெற்ற ஒரு தாசிதான் புல்காரி ரமணி.

# 26

இவ்வுலகில் எப்படிப்பட்ட வேதனைகளையும் சகித்து விடலாம், – அதைப் பகிர்ந்து கொள்ள யாராவது ஒருவர் மட்டும் நம்முடனிருந்து விட்டால். தனிமையில் வாடுவதைப்போன்ற கொடுமையைப்போல் இவ்வுலகில் வேறெதுவும் இல்லை.

வரால் மீன்களைப்போல் சொற்கள் நமக்குள் கிடந்து துள்ளிக் குதிக்கும். பகிர்ந்து கொள்ளப்படாத மன உணர்வுகள் விம்மிப் புடைத்து வாயிலிருந்து நுரையாய் வழியும்.

இந்த துயரங்களைக்கேட்க ஒரு காது வேண்டும். நம்மை நேருக்கு நேராகப் பார்க்க இரண்டு கண்கள் வேண்டும். நம்முடன் சேர்ந்து நடக்க ஒரு காலடித்தடம் இருக்கவேண்டும். இல்லையென்றால் அது பைத்தியத்தில்தான் போய் முடியும். அல்லது தற்கொலையில்.

தனிமைச் சிறையில் அடைக்கப்படுபவர்களில் பலரும் பைத்திய மாகிப் போவதன் காரணம் அதுதான்.

தேவைக்குச் சொற்களை வெளியேற்றுவது என்பதில்தான் மனதின் நிம்மதி அடங்கியிருக்கிறது. அதற்கு வாய்ப்பில்லாதவன் சொற்களை விழுங்கி, விழுங்கி மரணிப்பான். நானும் அப்படிச் சாகவேண்டியவன் தான்.

ஆனால் என்னுடைய ரமணியோடும், என் காதலி மேரி மைமுனா வுடனும், எனது கசாப்பு ராவுத்தரோடும் பேசிப்பேசியே நான் விழுங்கிய சொற்களையெல்லாம் வாந்தியெடுத்தேன்.

நடக்கும்போதும், பால் கறக்கும்போதும், தொட்டியில் தண்ணீர் நிரப்பும்போதும், புல் கொடுக்கும்போதெல்லாம் நான் அவர்களுடன் எனக்கு நெருக்கமானவர்களிடம் பேசுவதைப்போல் பேசிக்கொண்டே யிருப்பேன்.

அதில் என் கண்ணீரும், வேதனையும், கஷ்டங்களும், ஆசைகளும், உணர்வுகளும், கனவுகளும் அடங்கியிருந்தன. ஆடுகளுக்கு அது எவ்

வளவு தூரம் புரிந்திருக்குமோ என்று எனக்குத் தெரியாது. ஆனால் அவை எனக்காகக் காது கொடுக்கும். என்னைப் பார்த்து கண்களை விடர்த்தி நிற்கும். என்னோடு சேர்ந்து கண்ணீர் விடும்.

போதும்... இது போதும் எனக்கு.

ஆடுகளுடன் ஆடாக வாழ்ந்த அந்த வாழ்க்கையில் என்னுடைய வேதனைகளையும், துயரங்களையும் மட்டுமல்ல, எனது உடலையே அவற்றுடன் நான் பங்கு வைத்த ஒரு அனுபவமும் எனக்குண்டு.

ஒரு நாள் இரவு எத்தனை முயன்றும் எனக்கு தூக்கமே வரவில்லை. அந்த உணர்வு எனக்குள் எப்படி வந்ததென்றே தெரியவில்லை. என் உடல் முழுவதும் உஷ்ணத்தால் கிடந்து தகிக்க ஆரம்பித்தது. அடக்கவே முடியாத ஏதோ ஒரு ஆசை. பாலைவனக் காற்றுபோல் சுகம் தேடும் முறுக்கம்.

இந்த பாலைவன வாழ்க்கையில் எனக்குள் ஆண்மை உணர்வு கிளர்ந்ததேயில்லை. வற்றிப்போன உணர்வுகள் இனி ஒருபோதுமே திரும்பி வராது என்று நினைத்துக் கொண்டிருந்தபோதுதான் அது நிகழ்ந்தது. எத்தனையோ நாட்களாக உறைந்து கிடந்த உணர்வுகள் தலைவிரித்தாடின.

எப்படியாவது அதை அடக்கிவிட வேண்டும் என்ற எனது முயற்சி களெல்லாம் அதை அடக்குவதற்குப் பதிலாக அதை நோக்கியே என்னை வேகமாக இழுத்துச் சென்றது.

என் கண்முன்னால் பெண்கள் நிர்வாணமாக நடக்கத் தொடங்கி னார்கள். நான் வேட்கையால் துடித்தேன். என்னோடு படுக்கையைப் பகிர்ந்து கொள்ள இப்போது ஒரு உடல் வேண்டும். நான் நுழைந்து செல்ல ஒரு குகை வேண்டும். நான் வெறி பிடித்தவன் போலானேன்.

அந்த வெறியின் உச்சத்தில் நான் என்னையுமறியாமல் எழுந்து வெளியே ஓடினேன். பின் எப்போதோ அரை மயக்கத்தில் கண் திறந்து பார்த்தபோது நான் மஸராவுக்குள் விழுந்து கிடந்தேன். என் பக்கத்தில் 'புல்காரி ரமணி' கிடந்தாள்.

பக்கத்து மஸராவில் ஹக்கீம் உயிரோடு இருக்கிறான் என்று தெரிந்த பின்னால், அவனைப் போய் பார்க்க வேண்டும் என்ற ஆசை அவ்வப்போது வலுத்து வந்தது.

ஒரு மனித உயிரைப் பார்க்க வேண்டும் என்னும் 'கண்ணின் பேராசை' அது.

என்னைப் பார்ப்பதற்காக அவனும் சந்தர்ப்பத்தை தேடிக்கொண்டு தானிருந்தான்.

நாங்களிருவரும் எதிரெதிர் திசைகளில் ஆடுகளைக் கொண்டு போய்க் கொண்டிருப்பதால்தான் எங்களால் ஒருவரையொருவர் பார்க்க முடியவில்லை என்று விரைவிலேயே நாங்கள் தெரிந்து கொண்டோம்.

எங்களுக்கிடையே ஒரு உயர்ந்த மலைச் சரிவு. அதுதான் எங்களிரு வரையும் பார்க்க விடாமல் மறைத்துக் கொண்டிருந்தது. நான்

மெல்லமெல்ல அந்த மலைச்சரிவையும் தாண்டி அப்பால் போக ஆரம்பித்திருந்தேன்.

அப்போது தொலை தூரத்தில் ஹக்கீம் ஆடுகளுடன் நடப்பதை பார்க்க முடிந்தது. நான் இப்படி போவதை அர்பாபு பல தடவை கண்டித்தான்.

ஆனால் நான் அதை பொருட்படுத்தவேயில்லை. பட்டுப்பட்டு மரத்து போய்விட்டது. இதற்குமேல் அவன் என்னை என்ன செய்து விடுவான். வாய் நிறைய வசவு, பெல்ட்டடி. இவையிரண்டுமே எனக்கு பழகிப்போனவை.

என்னுடைய அர்பாபுவை விடவும் மூர்க்கமானவனாக இருந்தான் ஹக்கீமின் அர்பாபு. அவன் அனுபவித்த கஷ்டங்களை ஹக்கீம் சில சமயம் என்னிடம் சொல்வான். முகத்தில் வெந்நீரை ஊற்றுவது, தலைமுடியை கைகளால் பிடுங்குவது, ஆசனத்திற்குள் கம்பை நுழைப்பது, நெஞ்சில் ஓங்கி மிதிப்பது, கழனிப்பானைக்குள் மூச்சுமுட்ட தலையை அமுக்கி வைப்பது... என்று அவனது மூர்க்கத்தனத்தைக் கேட்டு என் குலை நடுங்கியது.

அதனால் பயந்து பயந்துதான் ஹக்கீம் என்னைப் பார்க்க வருவான். வந்தாலும் ஒன்றிரண்டு வார்த்தைகள் பேசிவிட்டு ஓரே ஓட்டமாக ஓடிவிடுவான்.

ஒருவரையொருவர் பார்ப்பதற்கு 'உண்மையான' காரணங்களை உருவாக்குவது அடுத்த கட்டம். அதற்காக ஆடுகளின் மல துவாரத்தில் கம்பால் ஒரு குத்து குத்துவோம். இல்லையென்றால் வாலைப் பிடித்து ஒரு முறுக்கு. ஆடு பைத்தியம் பிடித்ததுபோல் கண்மண் தெரியாமல் ஓடும் அதைப் பிடிக்க ஓடுவதுபோல் ஓடி அதை மேலும் விளாசுவோம். ஆடு முன்னைவிடவும் வேகமாக ஓட்டமெடுக்கும். அப்படியாக ஒரு விதத்தில் நான் ஹக்கீமுக்கு அருகில் போய் விடுவேன்.

தொலைவிலிருந்து அர்பாபு பைனாகுலர் வழியாகப் பார்க்கும் போது நான் ஆடுகளின் பின்னால் இயல்பாக ஓடிக்கொண்டிருப்பதை போலவேயிருக்கும்.

ஏதோ ஒன்றிரண்டு வார்த்தைகள். அத்துடன் முடிந்து போகும் எங்கள் பேச்சு. அத்துடன் முடித்தாக வேண்டும். அதற்குத்தான் நேரமிருக்கும். அதிக நேரம் நின்றுவிட்டால் அப்போதே அர்பாபு வண்டியுடன் வந்துவிடுவான்.

மனம் நிறைந்து பொங்கி வழியும் அத்தனை பேச்சையும் நான்கு வார்த்தைகளில் சுருக்க நாங்கள் எத்தனை மெனக்கெடுவோம் என்று ஆலோசித்துப் பாருங்கள்!

நாள் முழுவதும் வாய் ஓயாமல் பேசும் வாய்ப்பு பெற்ற உங்களால், ஒருவேளை அத்தனை எளிதில் அந்த சிக்கலை புரிந்துகொள்ள முடியாதுதான்.

# 27

ஒருநாள் நான் ஆடுகளை நடக்க விட்டுவிட்டு ஒரு மணல் குன்றின் மேல் வெறித்த பார்வையுடன் உட்கார்ந்திருந்தேன். அப்போது தூரத்தில் ஹக்கீம் ஆடுகளுடன் போவது என் கண்ணில்பட்டது. ஓடிப்போய் அவனிடம் ஒரு வார்த்தை பேசிவிட்டு வந்தால் என்ன என்றொரு ஆசை மனதில் தோன்றிது.

ஆனால் அர்பாபுவோ பைனாகுலரிலிருந்து கண்ணெடுப்பதாகவே தெரியவில்லை.

கடந்த ரெண்டு மூணு நாட்களாக 'வேவு பார்த்தல்' அதிகமாக இருக்கிறது. எந்தக் காரணம் கொண்டும் ஹக்கீமைத் தேடிப் போவதோ, அவனுடன் பேசுவதோ கூடாது என்று நான் கடுமையாக எச்சரிக்கப் பட்டிருந்தேன்.

நாங்களிருவரும் அடிக்கடி சந்தித்துப் பேசினால் தப்பிப் போகும் எண்ணம் எங்களுக்குள் துளிர்த்துவிடும் என்று அர்பாபு பயந்திருக் கலாம்.

ஆனால் அர்பாபு அதற்கு கூறும் காரணமே வேறு. அங்குள்ள மஸராவில் நோய்க்கிருமிகள் இருக்கக்கூடும், அவர்களுடன் பழகினால் அந்த கிருமித் தொற்று நமது மஸராவுக்கும் பரவி, அதனால் நமது ஆடுகளுக்கும் நோய் வந்துவிடும்.

இதைக் கேட்டு எனக்கு சிரிப்புத்தான் வந்தது. என்னுடைய மஸரா ஒரு பரிசுத்த கூடாரமாம்!

நான் என்னுடைய ஆசையை அடக்கிக் கொண்டேன். ஏச்சும், பேச்சும், அடியும் எனக்குப் புதிதல்ல. ஆனால் அந்த பாவத்துக்கும் வீணாக நான் ஏன் அடியும் உதையும் வாங்கிக் கொடுக்கவேண்டும்?

ஹக்கீமை பார்த்ததனாலாக இருக்க வேண்டும், எனக்கு சட்டென்று ஊர் நினைவு வந்துவிட்டது. எனது மஸரா வாழ்வில் வெகு அபூர்வமாக நிகழும் சம்பவம் அது. எனது ஆசைகளெல்லாம் ஒன்று சேர்ந்து பீறிட்டடித்தது. எனது ஸைனு, எனது உம்மா, எனது மகன், எனது மகள், என்னுடைய வீடு, எனது படகு...

அயல்நாட்டு வாசிகளின் வீட்டு நினைவுகளைப் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் இத்தனை கஷ்டங்களுக்கிடையிலும் நான் என்னுடைய கனவுகளை நினைத்து மனம் நோகவில்லை என்பது என்னை எப்போதும் ஆச்சரியப்பட வைத்தது.

கண் முன்னால் திரும்பிப்போகும் சந்தர்ப்பம் திறந்து கிடப்பவர்களுக்கே அப்படிப்பட்ட சிந்தனைகள் தோன்றும் என்று நினைக்கிறேன்.

எனக்கு இந்த நரகத்திலிருந்து தப்பிப் போகவேண்டும் என்ற எண்ணமே ஏற்பட்டதில்லை. வந்து மாட்டிக் கொண்டோம். இனி என் வாழ்க்கை இங்கேதான். இறந்தவர்கள், வாழ்க்கையைக் குறித்து கனவுகள் காண்பதில்லையே! ஆனாலும் நம்பிக்கை அதன் முழு வலிமையையும் வெளிப்படுத்தும்போது, என்றாவதொருநாள் நானும் இந்த நரகத்திலிருந்து, தப்பிப் பிழைத்து விடுவேன் என்னும் ஆசை மட்டும் என் உள்ளத்தில் அவ்வப்போது துளிர்விடும்.

கருணாமயனான அல்லாவே! நீர் எத்தனையோ மனிதர்களின் வாழ்க்கையில் அற்புதங்கள் நிகழ்த்தியிருக்கிறீர்கள். தெருவில் பிச்சையெடுக்கும் ஒருவன் லாட்டரி விழுந்து ஒரு நாளிலேயே பணக்காரனாகி விடுகிறான். தீரா நோயால் அவஸ்தைப்படுபவன் ஒரு புலர்காலையில் குணமடைந்து வாழ்க்கையைத் திரும்பிப் பார்க்கிறான்.

பஸ்ஸுக்கடியில் விழுந்தவன் அரைந்து கூழாகி விட்டான் என்று நினைத்துக்கொண்டிருக்கும்போது, ஒரு சிறு கீறல்கூட விழாமல் வெளியே வருகிறான். விமானம் நொறுங்கி நூற்றுக்கணக்கானவர்கள் மரணமடைய, அதில் ஒருவன் மட்டும் தப்பிப் பிழைக்கிறான். கப்பல் விபத்தில் அகப்பட்டவன் பல வருடங்களுக்குப் பிறகு கரைக்குத் திரும்பி வருகிறான். பூகம்ப இடிபாடுகளுக்கிடையே சிக்கிக் கொண்ட ஒருவன் ஒரு மாதத்துக்குப்பின் உயிரோடு எழுந்து வருகிறான்.

இவையெல்லாம் சாதாரண மனிதனின் அறிவுக்கு அப்பாற்பட்ட விஷயங்கள். அப்படியொரு அற்புதத்தை என் வாழ்க்கையில் நீ உருவாக்கித் தரமாட்டாயா...?

நீ சற்றே மனம் கனிந்தால் போதும். புல் வண்டிக்காரன் தன்னுடைய வண்டியை எனக்காக நிறுத்துவான். தண்ணீர் வண்டிக்காரன் என்னை இங்கிருந்து கடத்திப்போய் பாதுகாப்பான ஏதோவொரு இடத்திற்கு கொண்டு சேர்ப்பான்.

ஏன்... அர்பாபுவே மனம் திருந்தி என்னைத் திருப்பிக் கொண்டு விடுவான்.

தேவை உனதருள்... அருள் மட்டுமே!

நான் அண்ணாந்து வானத்தைப் பார்த்தேன். அங்கு எவ்வித அறிகுறியுமில்லாமல் சூனியத்தை விதைத்தபடியே மேகக் கூட்டங்கள் அனாதையாக அங்குமிங்குமாக அலைந்து கொண்டிருந்தன.

அப்போதுதான் இரண்டு பொலி ஆடுகள் கோபத்துடன் கொம்பு கோர்ப்பதைப் பார்த்தேன். அவை பிற விலங்குகளுடன் மோதுவதை விடவும் தமக்குள்தான் அதிக வீறுடன் தாக்கிக் கொள்ளும்; ஒன்றை யொன்று முட்டி மோதி மண்டை உடைந்து இரத்தம் சொட்டிய பின்புதான் அவற்றின் ஆவேசம் அடங்கும். அத்தனை வெறி. ஒரு ஆணுக்கு மற்றொரு ஆணிடம் ஏற்படும் கொலை வெறி.

நான் ஓடிப்போய் அவற்றை அடித்து விரட்டினேன். ஒன்று கோபத் துடன் விலகியோடியது. மற்றொன்றோ கோபமடங்காமல் என்னை நோக்கி சீறியது. மூக்கு விடைக்க நின்ற அதன் கண்களிலிருந்து ஆவி பறந்தது; தன் கோபம் முழுவதையும் கொம்புக்குக் கொண்டு சென்றது. நான் நின்ற இடத்திலிருந்து அசையவேயில்லை. என் மார்பை குறிவைத்து தாவி குதித்து வந்தபோது நான் சட்டென்று விலகிக்கொண்டேன்.

பல நாள் அனுபவத்தால் கற்றுக்கொண்ட பாடம் அது. ஆடுகள் எவரையும் சட்டென்று தாவி முட்டிவிடாது. சற்றே நிதானித்து, குறி பார்த்து அதன் பின்பே தாவிப் பாயும். அதுவரையிலும் நாமும் அசையாமல் நிற்க வேண்டும். அது குறி பார்க்கட்டும் என்று. அது தாவிக்குதிக்கும் போது நாமும் துள்ளிக் குதித்து விலகி விட வேண்டும். அதன் பிறகு அதனால் தான் வச்ச குறியை மாற்ற இயலாது. இது வொன்றுதான் ஆட்டடியிலிருந்து தப்பும் ஒரே வழி.

குறி தவறிய ஆடு சற்று தள்ளிப்போய் தரையில் தலைகுப்புற விழுந் தது. அதோடு சேர்த்து நான்கைந்து அடிகளும் போட்டபோது அதன் ஆவேசம் சற்றே அடங்கியது. எப்படியோ தடுமாறி எழுந்து அது வேறொரு திசையில் பாய்ந்து ஓடியது.

ஆடு விழுந்த இடத்தில் மண் சற்றே விலகியிருந்தது. எதேச்சையாக அதைப் பார்த்தபோது, அங்கு ஏதோவொன்று இருப்பதாகத் தோன்றி யது. மட்டுமல்ல, சமீபத்தில் எப்போதோ அங்கிருந்து மண் அகற்றப் பட்டதைப்போல் மண் இளகி இருந்தது.

ஆர்வம் மேலிட நான் அங்கே ஓடினேன்.

ஆனால் அங்கே நான் காண்ட காட்சி... என்னை திடுக்கிட வைத்தது.

நான் திரும்பி அர்பாபுவின் பக்கம் பார்த்தேன். அவன் பைனா குலரை கீழே வைத்துவிட்டு ஓய்வெடுத்துக் கொண்டிருக்கிறான். இனி, அடுத்த ரவுண்ட் வர சற்று நேரமாகும்.

நான் உட்கார்ந்து மெதுவாக மண்ணை அகற்றத் தொடங்கினேன். என் மனதில் புகைந்து வந்த சந்தேகம் மிகச் சரியாக இருந்தது. அதைப் பார்த்து நான் திடுக்கிட்டு எழுந்தேன்.

அது... ஒரு மனிதனின் கை... உள்ளங்கை! அழுகிச் சிதைந்த வெறும் எலும்புக் கை.

பயமும், ஆர்வமும் மேலிட நான் வேகமாக பாக்கியிருந்த மண்ணையும் விலக்க ஆரம்பித்தேன். ஒரு அடுக்கு மண்ணைத் தான் அகற்றியிருப்பேன். ஒரு முழு மனித எலும்புக் கூடு!

பயத்தால் என் வாயடைத்தது, கால்கள் நடுங்கின. நான் பின் பக்கமாக நகர்ந்தபோது ஏதோவொன்று காலில் இடறியது.

அது... அழுகாத ஒரு தோல் பெல்ட்.

இதை எங்கேயோ பார்த்திருக்கிறோமே...! சட்டென்று எனக்குள் பொறி தட்டியது.

இது... நான் இங்கு வந்த மூன்றாவது இரவில் மஸராவிலிருந்து மாயமான அந்த பயங்கரனின் பெல்ட்டல்லவா?

நான் ஆடுகளை அங்கேயே விட்டுவிட்டு மஸராவை நோக்கி ஓடினேன். கூடாரத்துக்குள் போய் அர்பாபுவின் காலில் விழுந்து கதறி அழுதேன்.

"வேண்டாம், எனக்கு எங்கேயும் போக வேண்டாம். எனக்கு தப்பிக்கும் ஆசையே இல்லை. என்னைக் கொன்றுவிடாதே. அது போதும் எனக்கு. நான் எப்படியாவது உயிர் வாழ வேண்டும், எனக்கு சாகப் பயமாக இருக்கிறது."

நான் குலுங்கி குலுங்கி அழுதேன்.

அர்பாபு திகைத்து நின்றான்.

'இவன் எதற்காக கிடந்து இப்படியழுகிறான்?' அர்பாபுவுக்கு எதுவுமே புரியவில்லை!

# 28

நமது வாழ்க்கையின் ஒவ்வொரு அனுபவத்துக்கும் ஒரு தீவிரமான உச்சமுண்டு. அது சந்தோஷமோ, துக்கமோ, பட்டினியோ எதுவாக இருந்தாலும் சரி. அதுதான் அனுபவத்தின் உன்னத நிலை என்று நான் சொல்வேன்.

அந்த நிலையில் நம் முன்னால் இரண்டேயிரண்டு வழிகள்தான் இருக்கும்.

ஒன்று, நாம் அச்சூழ்நிலையுடன் சமரசப்பட்டு போவது. மற்றொன்று, அச்சூழலுடன் மோதி, எப்படியாவது அதிலிருந்து விடுபட்டு போவதற்கான இறுதி முயற்சிகளில் இறங்குவது.

போராடி ஜெயித்தால் நாம் பிழைத்தோம். இல்லையென்றால் அது பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலோ, தற்கொலையிலோதான் போய் முடியும்.

நான் ஒருமுறைகூட என் முழு பலத்துடன் தப்பிக்க முயற்சித்ததேயில்லை. நான் செய்து பார்த்த ஒன்றிரண்டு முயற்சிகளையெல்லாம் ஒரு ஆரம்பக்காரனின் அரைவேக்காட்டுத் தனம் என்பதே சரி. அப்போதெல்லாம் நான் இந்த அளவுக்கு முதிர்ச்சியுடனிருந்தேனா என்பது சந்தேகம்தான்.

சொல்லப்போனால் இங்கே வந்த போது நான் அச்சூழ்நிலையோடு சமரசப்பட்டு போகவே முயன்றேன். எத்தனை பெரிய கஷ்டங்களும், தீவிரமான வேதனைகளும் கால ஓட்டத்தில் நமது வாழ்க்கையின் ஒரு அம்சமாகவே மாறிப்போகும் என்பது என் அனுபவம் சொல்லும் உண்மை.

இப்படியாக என் வாழ்க்கை துயரக்கடலில் மூழ்கி ஒரு வருஷம் ஓடிப்போய்விட்ட நிலையில் நான் அதில் நீந்திப் பிழைக்கக் கற்றுக் கொண்டேன்.

இப்போது இந்த வாழ்க்கை ஒரு சுமையாகவே தோன்றவில்லை. பிச்சைக்காரர்கள், பரம ஏழைகள், தீரா வியாதியஸ்தர், குருடர், ஊனமுற்றோர் இவர்களெல்லாம் எப்படி தமது துயர்மிகுந்த வாழ்க்கையைத் தள்ளிக்கொண்டிருக்கின்றார்கள் என்று நினைத்து நான் மனம் கசிந்திருக்கிறேன்.

இத்தனை கஷ்டங்களுக்கிடையிலும் எப்படி அவர்கள் முகத்தில் புன்சிரிப்பு தவழ்கிறது?

அதற்கான பதில் இப்போது எனக்குக் கிடைத்தது.

வேறெங்கிருந்தும் அல்ல, என் சொந்த வாழ்க்கையிலிருந்துதான். இப்போது என் வாழ்க்கையில் சிரமங்கள் ஏதும் இருப்பதாக எனக்குத் தோன்றவேயில்லை.

எனக்கென்ன... காலையில் எழுந்து கொஞ்சம் பால் கறக்கணும். ஆடுகளுக்கும் ஒட்டகங்களுக்கும் தீனி வைக்கவேண்டும். ஆடுகளை வெளியே நடக்க கொண்டு போய் வரவேண்டும். கொஞ்சம் குபூஸ் தின்ன வேண்டும். பழுத்த வெயிலிலும் குளிர் நிலாவிலும் படுத்து உறங்கவேண்டும். சிந்தனை இல்லை. புகார்கள் இல்லை, ஆசைகளில்லை. பின் வேறென்ன வேண்டும்?

நான் எனது குடும்பத்தை, வீட்டை, கிராமத்தை மறந்தே போய் விட்டேன். அவர்களெல்லோரும் ஏதோவொரு ஜென்மத்தில், ஏதோவொரு கிரகத்தில் என்னுடன் வாழ்ந்திருந்தவர்கள். அவர்களுடைய துக்கம், வேதனை, சந்தோஷம் எதுவுமே என்னைப் பாதிக்காது.

என்னுடைய வாழ்க்கை இப்போது சுகம், பரம சுகம்.

அப்படியாக வாழ்க்கையில் மீண்டும் வேனிற்காலம் வந்தது. குளிர் வாட்டியது. காற்று வீசியது. தூசிப்படலம் உடம்பை மூடியது. எப்போதோ சில சமயம் மழையும் பெய்து தீர்த்தது.

வாரம் ஒருமுறை டிரக் வந்தது. எல்லாம் வந்தன; எல்லாம் போயின. எனது மஸராவில் நானும் ஆடுகளும்; பக்கத்து மஸராவில் ஹக்கீமும் ஆடுகளும். எங்களுக்கு மட்டும் இடப் பெயர்ச்சியேயில்லை.

அப்படியிருக்கும்போதுதான் ஒரு நாள் எங்களுக்கிடையே ஒரு மூன்றாவது துர்பாக்கியசாலி வந்து சேர்ந்தான். ஹக்கீமின் மஸராவுக்கு ஒரு புதிய வரவு. என்ன செய்தாலும் அவர்களிருவரும் ஒன்றாகவே சேர்ந்து செய்யத் தொடங்கினார்கள். வாழ்க்கையில் முதன்முதலாக ஒரு மனிதனின் மீது பொறாமை அரும்பியது அப்போதுதான்.

ஹக்கீமை நான் வெறுக்கத் தொடங்கினேன். அவனுக்கு ஒரு பேச்சுத் துணை கிடைத்துவிட்டதே. இங்கே நான் மட்டும்... ஆடுகளுடன் ஆடாக... தனியாக, தன்னந்தனியனாக...!

நான் என்னையே வெறுக்கத் தொடங்கினேன்.

# 29

ஒரு கூட்டாளி கிடைத்தவுடன் ஹக்கீமிடம் பெரிய மாற்றங்கள் தென்பட்டன. வந்தவனின் ஊர், பெயர் என்று எதுவும் எனக்குத் தெரியாது. ஆனால் அவன் வரவு ஹக்கீமின் வாழ்க்கையில் பெரிய மாற்றத்தை ஏற்படுத்தியது என்பது மட்டும் உண்மை.

இப்போதெல்லாம் அவன் முகத்தில் சிரிப்பைப் பார்க்க முடிகிறது. அவன் பேச்சில் சந்தோஷச் சாரல் தெறிக்கிறது.

சொல்லப்போனால் சுருங்கிப் போனது நான்தான். பொறாமையில் வெந்தது என் மனது. இவ்வுலகத்தின்மீது எனக்கு வெறுப்பும் கோபமும் வந்தது.

அப்போதெல்லாம் என் கோபத்தை நான் ஆடுகளின் மேல் காட்டினேன். அப்போதுதான் பிறந்து விழுந்த ஆணாடுகளின் ஆணுறுப்பை நசுக்கியும், கறவையாடுகளின் மடியில் கம்பால் குத்தியும், செம்மறியாடுகளின் ஆசனத்தில் கம்பைச் செலுத்தியும் நான் என் கோபத்தைத் தீர்த்துக் கொண்டேன்.

முன்பெல்லாம் நான் ஆடுகளை கூட்டிப் போகுமிடத்துக்கு வரவே ஹக்கீம் பயப்படுவான். ஆனால் புது நண்பனின் வரவோடு அவன் துணிச்சல் மிக்கவனாகியிருந்தான். இப்போதெல்லாம் அவன் அவ்வப்போது என் ஆடுகள் நிற்குமிடத்துக்கு வருகிறான். மிக அருகில் இல்லையென்றாலும், உரக்க பேசினால் கேட்கும் தொலைவு வரை.

அதற்காக அவனுடைய அர்பாபு அவனைப் பலமுறை அடித்து துவைத்த போதும், புது கூட்டாளி இருக்கும் தைரியத்தில் அதை அவன் பொருட்படுத்தவேயில்லை.

எனக்கு ஹக்கீமின் நண்பனை ஒரு தடவையாவது பார்க்க வேண்டுமென்று ஆசையாக இருந்தது. ஆனால் அவன் மஸராவை விட்டு வெளியே வருவதேயில்லை. வெளி வேலைகளை ஹக்கீமுக்கு கொடுத்துவிட்டு, அவன் மஸரா வேலைகளைக் கவனிக்கிறான் போலும்.

எப்படியோ ஒருநாள் ஹக்கீம் அவனையும் வற்புறுத்தி வெளியே கூட்டிக்கொண்டு வந்துவிட்டான். ஆஜானுபாகுவான தோற்றம். நல்ல உயரம். அதற்கேற்ற தடிமன்.

மூசா நபி காலத்து தீர்க்கதரிசி ஒருவன் பூமிக்கு இறங்கி வந்ததைப் போலிருந்தது, அவனை முதன் முதலாக பார்த்தபோது. அவனொரு பாகிஸ்தானி பத்தானாக இருக்கக்கூடும் என்று நினைத்துக்கொண்டேன்.

அவன் என் பக்கத்தில் வந்து தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டான். இப்ராஹிம் காதரி! சொமாலிய நாட்டுக்காரன்.

ஆப்பிரிக்க பாலைவனத்தின் ஒரு கறுத்த நெடுமரம். அந்த பெரு மரத்தின் முன்னால் நானும் ஹக்கீமும் வாடிய கீரைச் செடிகள் போல இருந்தோம் (அந்த சந்திப்பைச் சொல்லி ரெண்டு கீரைச் செடிகளுக்கும் பலத்த அடி கிடைத்தது தனிக்கதை.)

ஒருநாள் ஹக்கீம் பக்கத்திலிருந்த மணல் குன்றின் உச்சியிலிருந்து உரத்த சத்தத்தில் என்னிடம், “நானிங்கே ஒரு பேப்பர் எழுதி வச்சிருக்கேன், எடுத்துப் படிங்க” என்று சொல்லிவிட்டு ஆடுகளையும் விரட்டிக்கொண்டு வேகமாகப் போனான்.

சற்று நேரத்துக்குப்பின் நான் என்னுடைய ஆடுகளையும் விரட்டிக் கொண்டு அந்த இடத்துக்குப் போனேன்.

ஒரு கல்லின் அடியில் ஒரு பேப்பர் துண்டு படபடத்துக் கொண்டிருந்தது.

நான் மெதுவாக அதையெடுத்து வாசித்தேன்.

“இப்ராஹிம் காதரி இதற்கு முன் இங்கே இருந்திருக்கிறான். அவனுக்கு இங்குள்ள எல்லா வழிகளும், ஊர்களும் அத்துப்படி. தப்பிக்க ஆலோசித்து வருகிறோம், உங்களையும் உடன் கூட்டிக்கொண்டு. விரைவில் தகவல் தெரிவிக்கிறோம். கருணைமயனான அல்லாவை நம்புங்கள்.”

எனக்குள் குப்பென்று சந்தோஷம் நுரையடித்தது.

என் சந்தோஷத்தை எப்படி வெளிப்படுத்துவது...!

என்ன செய்வதென்றே புரியாமல் நான் திகைத்து நின்றேன்.

பாலைவனத்தில் சட்டென்று இதழ் விரித்த ஒரு பூவைப் போலிருந்தது என் சந்தோஷம். எனக்கு என் கிராமத்தைப் பற்றியும், வீட்டைப் பற்றியும் சிந்தனையே இல்லையென்று நான் சொன்னதெல்லாம் முழுப்பொய். எல்லா ஆசைகளும் எனக்குள்ளேதானிருந்தது. ஆனால் அவை சந்தர்ப்ப சூழ்நிலை என்னும் சாம்பலால் மூடிக் கிடந்தது, அவ்வளவுதான்.

ஆனால் சந்தர்ப்பத்தின் ஒரு சிறு பொறி விழுந்ததுமே அந்த ஆசைகளனைத்தும் பெரும் ஜ்வாலையாய் கனன்று எரியத் தொடங்கியது. மார்பு வலிப்பது போல் தோன்றியது. துயரத்தால் சோர்ந்து போகும் போது ஏற்படும் ஒரு நெஞ்சு வலி.

நான் வாய்விட்டு அழுதேன்.

பக்கத்தில் என்னையே ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டிருந்த மேரி மைமுனாவை கட்டிப்பிடித்து அவளுக்கு ஒரு முத்தம் கொடுத்தேன்.

"உன்ன விட்டுக்கிட்டு நான் போறேண்டி பெண்ணே. உனக்குத்தான் இங்கே நிறைய கசாப்பு ராவுத்தர்களும் மூறிவாசுக்களும் இருக்கிறார்களே.

எனக்குத்தான் யாருமேயில்லை. என் ஸைனுவுக்கும் யாருமில்லை. எனக்கு அவள் வேணும்; அவளுக்கு நானும்."

நான் மண்ணைத் தொட்டு கண்ணில் ஒற்றிக்கொண்டேன். கருணையனான அல்லாவுக்கு நன்றி சொன்னேன். என்னையும் நினைவில் வைத்திருந்ததற்காக, என்னுடைய சங்கடங்களை கேட்டதற்காக, என்னை விடுவிக்க இப்ராஹிம் காதரி என்னும் தீர்க்கதரிசியை அனுப்பி வைத்ததற்காக.

அல்லாஹ் அக்பர்! அல்லாஹ் அக்பர்!

அதன்பின் அன்றைய தினம் முழுவதுமே உற்சாகமாக இருந்தது. என் வேலைகளையெல்லாம் படு உற்சாகத்துடன் மளமளவென்று செய்து முடித்தேன்.

'என்ன ஆச்சு இவனுக்கு?' என்று அர்பாபுகூட நினைத்திருப்பான்.

"ஏ, அர்பாபு நினைவில் வைத்துக் கொள். இன்னும் கொஞ்ச நாட்கள்தான். அதன்பின்... நான் போயே... போய் விடுவேன். அதற்குப் பின் நீ யாரை ஏசுவாய், யாரை அடிப்பாய், யார் முகத்தில் காறித் துப்புவாய் என்று பார்க்கத்தானே போகிறேன். ஒற்றைக்கு இங்கே கிடந்து கொஞ்ச நாள் தண்ணி குடி. அப்போ தெரியும் உனக்கு, இந்த நஜீபின் அருமை."

இப்போதே தப்பித்துப் போய்விட மாட்டோமா என்று மனம் கிடந்து துடித்தது. ஆனால் அப்படியெதுவும் நிகழவில்லை. அதற்கடுத்த நாளும் நான் ஆசையோடு காத்திருந்தேன்.

அன்று முதல் நாளைவிடவும் எதிர்பார்ப்பு சற்று அதிகமாகவே இருந்தது. ஆனால் அன்றும் எதுவும் நிகழவில்லை.

அதற்கு அடுத்த நாள் எதிர்பார்ப்பிலிருந்தது. ஆனால் அதன் தீவிரம் சற்றே குறைந்து போயிருந்தது. ஆனால் அது நிகழவேண்டும் என்னும் ஆசை மட்டும் குறையாமல் அப்படியே கனன்று கொண்டிருந்தது.

நாட்கள் போகப்போக அந்த எதிர்பார்ப்பின் அலை மெதுவாக அடங்கத் தொடங்கியது. முடிவில் அது கடும் நிராசையிலும், சுய வெறுப்பிலுமே போய் முடிந்தது.

எனக்கு ஆசை காட்டி மோசம் செய்த இப்ராஹிம் காதரியின் மீதும், ஹக்கீமின் மீதும் எனக்கு கோபமோ கோபம். ரெண்டு மூன்று

தினங்களுக்கு அந்த கோபம் எனக்குள்ளேயே கனன்று கொண்டே யிருந்தது.

அப்போது திடீரென்று எனக்கொரு சந்தேகம் எழுந்தது. 'என்னை விட்டுவிட்டு, அவர்களிருவரும் தப்பி ஓடிவிட்டார்களா?'

அப்படியொரு சம்பவத்தை என்னால் நினைத்தே பார்க்க முடிய வில்லை. 'ஒருவேளை அப்படி ஏதாவது நடந்தால் அன்றைய தினமே நான் தற்கொலை செய்து அவர்களைப் பழிவாங்குவேன்' என்று கூட என் மனம் குரூரமாக நினைத்தது.

ஒவ்வொரு நாளும் ஆடுகளையும் கூட்டிக்கொண்டு வெளியே போகும்போதெல்லாம் நான் ஹக்கீம் இருக்கும் திசையையே ஆர்வத் தோடு பார்ப்பேன்.

இப்போதும் அவர்கள் அங்குதான் இருக்கிறார்கள் என்று தெரிய வரும்போது, என் மனம் இனம்புரியாத மகிழ்ச்சியில் லயிக்கும். அது 'நான் தனித்து விடப்படவில்லை' என்னும் உணர்வு தந்த சுகம்.

நாட்கள் பல கடந்தபோது 'என் விதி இப்படித்தான்' என்றொரு விரக்தியும் வந்தது.

"யாரையாவது அனுப்பி, பொய் வாக்குறுதி சொல்ல வைத்து ஆசையைத் தூண்டுவது அல்லாவுக்கு ஒரு விளையாட்டோ என்னவோ?"

இருந்து விட்டுப்போகட்டும், என்னை சீண்டி விளையாடட்டும். எல்லாத்துக்குந்தான் இந்த நஜீப் இருக்கிறானே.

ஏ, அல்லா... ஆனாலும் என்னோடு நீ இப்படி விளையாடியிருக்க வேண்டாம்.

அந்த வேதனை வாக்குகளில் என் நிராசையை ஒடுக்கினேன்.

அதற்கு பிந்தைய தினங்கள் விரக்தி நிறைந்தவை. என்னைக் காப் பாற்ற காதரியும் இல்லை; பேதரியும் இல்லை. இங்கே கிடந்து சாவது ஒன்றுதான் என் விதி.

முடிவில் நான் மீண்டும் என் பழைய நிலைக்கே திரும்பினேன். எதிர்பார்ப்பு எதுவுமில்லாத தினங்கள். கனவு எதுவுமில்லாத வெறு மொரு ஆட்டு வாழ்க்கை!

# 30

சற்றும் எதிர்பாராத ஒரு நாளில் அது நிகழ்ந்தது. ஹக்கீம் ஓர் ஆட்டையும் விரட்டிக் கொண்டு என் பக்கமாக ஓடி வந்தான்.

"நாளை மறுநாள் ஒரு சம்பவமிருக்கிறது, தயாராக இரு!" சொல்லி விட்டு அவன் ஓடி மறைந்தான்.

நெஞ்சில் ஒரு அனல் துண்டையல்லவா வீசிவிட்டுப் போயிருக் கிறான்.

'ஒரு சம்பவம்!' அப்படி என்னதான் சம்பவம் அது? ஆனாலும் 'தயாராக இருக்கவும்' என்பது அர்த்தம் நிறைந்தது. அதுவொரு அதிர்ஷ்டக் குறிப்புதான்.

ஆனால் அப்போது சந்தோஷத்துக்குப் பதிலாக என் மனதில் ஏதோவொரு அச்சம்...!

தப்பிப்பதுதான் அந்த சம்பவமென்றால் இனி எங்கேயும் போக எனக்கு விருப்பமில்லை.

கூட்டில் அடைத்து வளர்க்கும் ஒரு ஆட்டைத் திறந்து வெளியே விட்டாலும், சற்று நேரத்திற்கெல்லாம் அது மறுபடியும் கூட்டுக்கே திரும்பி வந்துவிடும். நானும் அந்த ஆட்டைப் போலத்தான். இந்த அசிங்கமான உருவத்துடன் எனக்கு இந்த மஸராவிலிருந்து வெளியே போகவே விருப்பமில்லை.

நானொரு ஆடு. எனது வாழ்க்கை இந்த மஸராவுக்குள்தான். ஒருவேளை எனது இந்த வாழ்க்கை முடிவது வரையில் அல்லது ஏதாவது நோய்பிடித்து நான் திடீரென்று இறப்பது வரை. என்னுடைய இந்த அசிங்கமான உருவத்தையும் அவலட்சணமான முகத்தையும், அலங்கோலமான வாழ்க்கையையும் வெளியே காட்ட நான் விரும்ப வில்லை. எனது வாழ்க்கை, ஆட்டு வாழ்க்கை தான்!

சந்தர்ப்பத்துக்காக காத்திருப்பது... அந்த சந்தர்ப்பம் வந்து கதவைத் தட்டும்போது அதைப் பயன்படுத்த விருப்பமின்றி விரக்தியில் மூழ்குவது... உண்மையிலேயே இந்த வாழ்க்கை முரண்பாடுகள் நிறைந்ததுதான்.

அந்த இரண்டு தினங்களும் என்னளவில் நான் எந்த தயாரெடுப்பும் செய்யவில்லை. சொல்லப்போனால் உற்சாகம் வற்றிப்போய் சோர் வாகவே இருந்தேன். இதுபோல் எத்தனையோ சந்தர்ப்பங்களுக்காக நான் என் மனதை குளிப்பாட்டி அலங்கரித்து நிறுத்தியிருக்கிறேன். ஆனால் ஒவ்வொரு தடவையும் மாப்பிள்ளை காணாமல் போன புது மணப்பெண்ணைப் போலத் தேம்பி அழுவதுதான் என் விதியாக இருந்தது.

அதனால் மீண்டுமொருமுறை அப்படி அலங்கரித்து நிற்க எனக்கு விருப்பமேயில்லை. அத்துடன், 'ஏதாவதொன்று' நிகழ்வதற்கான ஒருவித அறிகுறியும் அன்று மாலைவரை எனக்குக் கிடைக்கவேயில்லை.

"அந்த இப்ராஹிம் காதரி... ஆப்பிரிக்கப் பயல். வாய்க்கு வந்தபடி ஏதோ சொல்லியிருக்கிறான். அதைக் கேட்டு அந்த சின்னப்பயல் ஹக்கீமும் துள்ளிக் கொண்டு திரிகிறான்." மனதுக்குள் அவர்களிரு வரையும் திட்டித் தீர்த்தேன்.

ஆனால், அன்று சாயங்காலம் ஒரு அஞ்சு மணியிருக்கும். வழக்க மில்லாமல் அர்பாபு என்னை அவன் கூடாரத்துக்கு அழைத்தான்.

போனவனை உள்ளே வந்து உட்காருமாறு சொன்னான்.

எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

"இன்றைக்கு ராத்திரி நம்முடைய மூத்த அர்பாபுவின் மகளுக்குக் கல்யாணம். நாங்களிருவரும் போகிறோம். நீ உறங்காமல் ஆடுகளைக் கவனமாகப் பார்த்துக் கொள்ள வேண்டும். நரிகள் வரும். பாம்புகளும் வரலாம். ஏன், சில சமயம் திருடர்கள்கூட வருவார்கள். நீ மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

காலையில் நான் திரும்பி வரும்போது உனக்கு குபூஸும், பிரியாணியும், மஜ்பூஸும் கொண்டு வருவேன். என்ன, புரிந்ததா? நீ எனது நம்பிக்கைக்குரிய வேலைக்காரன். உன்னைப்போல் ஒரு நல்ல வேலைக்காரன் இன்றுவரை எனக்குக் கிடைத்ததேயில்லை. வந்தவர்களெல்லாம் வேலைக் கள்ளன்கள். நீ நல்லவன். எனக்குப் பிடித்தமானவன். உன்னை அல்லா கப்பாற்றுவார்."

நான் தலையாட்டிக்கொண்டே எல்லாவற்றையும் கேட்டேன்.

'அப்போ இதுதான் ஹக்கீம் சொன்ன அந்த சம்பவமா?'

அப்படியானால் காத்திருந்த அந்த சுபதினம் நிச்சயமாக இன்றுதான்.

சந்தோஷத்தால் என் மனம் பட்டாம்பூச்சி சிறகாய் பட படத்தது.

ஆனால் நான் அதை வெளியே காட்டிக் கொள்ளவில்லை.

மௌனமாகக் கூடாரத்திலிருந்து வெளியே நடந்தேன்.

அத்தனை நாள் கடின வேலைக்குக் கிடைத்த பரிசுகளே அர்பாபு வின் அந்த வாக்குகள்! ஆமாம், வெறும் வாக்குகள் மட்டும்தான், அதைத் தவிர வேறெதுவும் எனக்குக் கிடைக்கவில்லை.

இரவானதும், வண்டியுடன் ஒருத்தன் வந்தான். நான் அவனை இதுவரையில் பார்த்ததேயில்லை. அவனுடைய பளீர் வெள்ளை உடையைப் பார்த்தபோதுதான் எனக்கு என்னுடைய தோற்றம் உறைத்தது.

ஐயோ, எத்தனை மோசமாக இருக்கிறேன் நான்.

அவலட்சணத்தின் தேவதை நான்தானோ...!

அர்பாபுவையும் ஏற்றிக் கொண்டு கார் கிளம்பிய அடுத்த நொடி என் மனம் முழுக்க உற்சாகம்; அதுவரையில்லாத புத்தம்புது உற் சாகம். பெற்றோர்கள் விருந்துக்கு போகும்போது, விளையாட சந்தர்ப்பம் கிடைத்த பிள்ளைகளின் சந்தோஷம் அது.

உற்சாகத்துடன் நான் மஸராவைச் சுற்றிச் சுற்றி ஓடினேன். ஓவென்று சத்தமிட்டேன். உரக்கச் சிரித்தேன். துள்ளிக்குதித்தேன். ஹக்கீமின் மஸராவை நோக்கி வேகமாக ஓடினேன்.

அங்கே ஹக்கீமும் படு சந்தோஷத்துடனிருந்தான். என்னைப் பார்த்ததும் அவன் ஓடிவந்து என்னைக் கட்டி அணைத்தான். ஆவேசத் துடன் முத்தமிட்டான். நாங்களிருவரும் கட்டிப்பிடித்து கதறினோம்.

"அண்ணா, எனக்கு என்ட உம்மயப் பாக்கணும். வாப்பாவைப் பாக்கணும். என் தங்கச்சி ஷாஹனாவைப் பாக்கணும். இனியும் என்னால் பொறுக்க முடியாது." அவன் அழுது புலம்பினான்.

"போலாண்டா... இப்ப போயிடலாம். எப்படியோ அல்லா. நம்மள இங்கவர கொண்டு சேத்துட்டான்லா... இனி கொஞ்ச நேரம்தான். இறைவன் நம்முடன் உண்டு. நீ தைரியமா இரி." நான் அவன் கன் னத்தை தடவி ஆறுதல் சொன்னேன்.

இப்ராஹிம் ஒரு கட்டிலில் இருக்கிறான்.

"நாம புறப்படாண்டாமா?" நான் ஏக்கத்துடன் அவனை நோக்கி நடந்தேன்.

ஓரக்கண்ணால் என்னைப் பார்த்தவன், ஈறு தெரிய பளீரென்று சிரித்தான்.

ஒரு குழந்தையின் சிரிப்புபோல் களங்கமற்ற சிரிப்பு.

"இத்தனை நாள் பொறுத்திருந்தாயே நஜீப்", அவன் எழுந்து என் தோளில் தட்டினான். "இன்னும் கொஞ்ச நேரம்தான். அர்பாபுக் கள் போக வேண்டிய இடத்துக்குப் போய்ச் சேரட்டும், திரும்பிவர பல மணி நேரம் ஆகும் தொலைவுக்கு. நாம் கால்நடைக்காரர்கள் என்பதை மறக்க வேண்டாம். நீ இப்போ உன் மஸராவுக்கு போ. போகும்போது நாங்கள் வந்து உன்னை கூப்பிடுகிறோம்."

இதோ இன்னும் கொஞ்ச நேரத்தில் என் கஷ்டங்களின் கறுப்பு தினங்கள் முடியப் போகின்றன. நான் இந்த ஆட்டுத் தொழுவத்திலிருந்து தப்பிக்கப் போகிறேன். நாளை என்ன நடக்குமென்று தெரியாது. அது எப்படியிருந்தாலும் இந்த அளவுக்கு கஷ்டங்கள் நிறைந்ததாக மட்டுமே இருக்காது, நிச்சயமாக."

பரம காருண்யனான அல்லாவே! எல்லாப் புகழும் உனக்கே!

நான் மஸராவை நோக்கி ஓடினேன். அங்கே என் கட்டிலுக்குக் கீழே என்னுடைய பை கிடக்கிறது, வெயிலும், மழையும், குளிரும், காற்றும், மண்ணும் பட்டு சிதிலமாகிப்போன ஒரு பை. நூற்றாண்டு கால தூசியில் உறைந்துபோய் கிடக்கிறது அது. எப்படியோ ஒரு விதத்தில் தூசியெல்லாம் தட்டி, அதன் ஸிப்பை திறக்க முயன்றேன். அது அசையவேயில்லை.

சற்று வேகமாக இழுத்தபோது... டர்ர்... பை கையோடு கிழிந்து வந்தது. அதற்குள்ளிருந்து குப்பென்று ஒரு துர்நாற்றம். இத்தனை காலமாக நான் அதை திறக்கவேயில்லை. அதற்கான தேவையும் வரவில்லை.

ஊரிலிருந்து ஸைனு அன்போடு தந்துவிட்ட ஊறுகாய் இப்போதும் அதற்குள் கிடக்கிறது.

காய்ந்து, கறுத்து... என்னவென்றே புரியாத ஒரு வஸ்துவாக.

ஆரம்பத்தில் ரெண்டு மூணு நாட்கள் குபூஸுடன் தொட்டுச் சாப்பிட்டதன் மிச்சம்.

ஸைனுவின் அன்பும், மணமும் என்னைவிட்டு போய்விடக் கூடாதென்ற கவலையில் நான் அதை தின்று தீர்த்துவிடாமல் பைக்குள் பத்திரமாக மூடி வைத்திருந்தேன். நாட்கள் செல்லச் செல்ல, இனி ஸைனுவை ஒருபோதுமே பார்க்க முடியாது என்ற எண்ணம் வலுப்பட்டபோது நான் அதை மறந்தே போய்விட்டேன்.

அப்போது வரும்போது புதிதாய் தைத்த சட்டையும், பான்ட்ஸும் அதற்குள் இருந்தது என் நினைவுக்கு வந்தது. நான் மெதுவாக அதை வெளியே எடுத்தேன். கையிலெடுத்து பார்த்தபோது தான் தெரிந்தது! பாலைவனத்துக்கு துணிகளைத் தின்னும் சுபாவமும் உண்டென்று. இதுவரையில் ஒரு முறை கூடப் போட்டிருக்காத அந்த சட்டையும், பாண்ட்ஸும் பொலவென்று பொடிந்து உதிர்ந்தன.

கடலுப்பை விடவும் அரிப்பு திறன் கூடிய பாலைவனக் காற்றின் சக்தி அது. "அப்படியானால் இத்தனை காலமாக அந்த காற்று என்னை எந்த அளவுக்கு அரித்து தின்றிருக்கும்." நான் திகைத்தேன். என்னுடன் எடுத்துப் போக எதுவுமேயில்லை. வெறுங்கையுடன் ஒரு மீள் பயணம். நான் அந்த பையை வீசியெறிந்தேன்.

என்னுடைய திட்டம் அவற்றுக்கு தெரிந்து போனதோ என்னவோ, மஸராவுக்குள் கிடந்து ஆடுகளெல்லாம் அல்லாடத் தொடங்கின. நான் மெதுவாக மஸராவுக்குள் நுழைந்தேன்.

ஆடுகளெல்லாம் ஓடிவந்து என்னைச் சூழ்ந்து கொண்டன. அவற்றின் கண்களில் ஏக்கத்தின் நிழல்.

'நீ போய்விட்டால் பின் எங்களுக்கு வேறு யார் இருக்கிறார்கள்?' என்ற கேள்வி அந்த ஏக்கத்தில் மறைந்து கிடந்தது.

என் வாழ்க்கையில் இனி ஒருபோதுமே சந்திக்கும் வாய்ப்பில்லாத அந்த ஆடுகளின் அருகே உட்கார்ந்தேன் நான்.

"என் பிரிய சகோதரர்களே, இதோ நான் போகிறேன். இதற்குமேலும் இங்கிருந்தால் நான் செத்துப் போய்விடுவேன். நான் இங்கிருந்து தப்பித்தாக வேண்டும். உங்களிடமிருந்தல்ல, என் விதியிடமிருந்து.

நீங்கள் ஒவ்வொருவருமே எனக்கு பிடித்தமானவர்கள். நீங்கள் மட்டும் இல்லையென்றால் நான் என்றோ செத்துப் போயிருப்பேன். நீங்கள், உங்கள் அன்பு... அது மட்டும்தான் இதுவரையில் என்னை உயிரோடு வைத்திருந்தது. உலகின் எந்த மூலையிலிருந்தாலும் என் கஷ்ட காலங்களில் எனக்கு தோள்கொடுத்த உங்களை நான் எப் போதும் என் நினைவில் வைத்திருப்பேன்.

இந்த மஸரா என்னும் நரகத்துக்குள் என்னைக் கொண்டு சேர்த்தவர் அல்லாதான். இப்போது இங்கிருந்து என்னை விடுவிக்கப்போவதும் அவர்தான். உங்களையும் இந்த விதியிலிருந்து விடுவிக்க நான் அவரிடம் பிரார்த்திக்கிறேன்.

என் தோழர்களே, என் சகோதரர்களே, என் இரத்தத்தின் ரத்தங் களே... விடைபெறுகிறேன் உங்களிடமிருந்து..."

ஆடுகள் ஒவ்வொன்றாக என் பக்கத்தில் வந்தன. முதலில் வந்தது கசாப்பு ராவுத்தர். நான் அதன் கன்னத்தைத் தடவினேன். 'எனக்குப் பதிலாக வரும் துர்பாக்கியசாலியிடம் (அப்படியொருவன் ஒருபோதுமே வராமலிருக்கட்டும்) நீ மென்மையாக நடந்து கொள்ளவேண்டும். முட்டி இடித்து அவன் கைகளை ஒடித்து விடாதே.' நான் அவனுக்கு அறிவுரை சொன்னேன், அவன் தலையாட்டினான்.

அடுத்து வந்தது புல்லுக்காரி ரமணி. என்னைப் பார்த்ததும் அவள் கதறி அழுதாள், நானும் அழுதேன்.

பின்பு மேரி மைமுனா. நான் அவளை முத்தமிட்டேன், அவள் என்னையும். 'எஞ்சியிருக்கும் உன் காதலை இனி வருபவனிடம் கொடுத்து விடுவாயா...' நான் இரக்கத்துடன் அவளையே பார்த்தேன். அவள் வருத்தத்துடன் தலை குனிந்தாள்.

அதன்பின் வரிசையாக இண்டிப்போக்கர், நண்டு ராகவன், பருப்பு விஜயன், சக்கி, அம்மணி, கௌஸு, ரௌஃப்த்...

எல்லோரிடமும் நான் விடைபெற்றேன்.

ஆட்டுக்குட்டிகளின் மஸராவுக்குள் போனபோது நான் உடைந்து போனேன். ஊர்விட்டுப் போகும் ஒரு மருத்துவச்சி, தன் கைகளில்

பிறந்து விழுந்த குழந்தைகளை கடைசியாக ஒரு தடவை பார்ப்பதைப் போலிருந்தது அது.

அங்கிருந்த குட்டிகளில் பெரும்பாலானவை என் கைகளில் பிறந்து விழுந்தவையே. அன்றிலிருந்து அவற்றின் அம்மாவும் நான்தான். அவற்றுக்குப் பாலூட்டி, உணவூட்டியதும் நானே.

ஒரு நிமிடம் நபீல் என் மனதில் வந்து நிறைந்தான். அவனது பிரிவு என் நெஞ்சை எரித்தது. துயரத்தால் என் மனம் விம்மியது.

பிங்கியையும், அம்முவையும், ரஸியாவையும், தாஹிராவையும் நான் கையிலெடுத்து கொஞ்சினேன். முன்பெல்லாம் நான் அவற்றைப் பிடிக்கப் போகும்போது அவை திமிறிக் குதித்து ஓடத்தான் பார்க்கும். ஆனால் இப்போதோ அவை என் பக்கத்தில் வந்து உரசிக்கொண்டிருக்கின்றன. என் மார்புச் சூட்டுக்காக தலை சாய்த்தன.

“என் பிள்ளைகளே, நீங்கள் வளர்ந்து பெரியவர்களாகும்போது உங்கள் விதி எப்படியிருக்குமென்று நான் அறிவேன். சந்தைக்கும், கசாப்புக் கடைக்கும் இழுத்துச் செல்லப்படுவீர்கள். அந்த கொடுமையான கணத்தில் நீங்கள் வலிமையுடன் நிமிர்ந்து நிற்க நான் அல்லாவிடம் பிரார்த்தனை செய்கிறேன்.

இந்த பாவப்பட்ட நஜீபால் அதை மட்டுமே செய்ய முடியும். இந்த பூமியின் மிக பரிதாபகரமான ஜீவன் நான்...” அழுதபடியே நான் அந்த மஸராவிலிருந்து வெளியே ஓடினேன்.

அடுத்ததாக நான் ஒட்டகங்களின் மஸராவுக்குப் போனேன். நான் புறப்படுவதை அறிந்து அவையும் வருந்தின. இவை எனக்கு அதிகம் கஷ்டம் தராத ஜீவன்கள்.

அவை தனியே போய் தனியே திரும்பி வரும். கொஞ்சம் புல்லும் தண்ணீரும் மட்டுமே போதும். அவை திருப்தி அடைந்துவிடும். ஆனாலும் எந்த அளவுக்கு அவை என்னைப் புரிந்து கொண்டனவென்றும், என்மீது எந்த அளவுக்கு அன்பு கொண்டிருந்தனவென்றும் அவற்றின் இப்போதைய பார்வையிலிருந்து என்னால் யூகிக்க முடிகிறது.

அவற்றின் கண்களிலிருந்து அன்பு உருகி வழிவதை நான் பார்த்தேன். நாங்கள் பரஸ்பரம் ஒருவரையொருவர் கட்டிப்பிடித்து அழுதோம்.

“இங்கேயிருந்து விடைபெற்றுச் செல்ல மனித ஜீவன்கள் எதுவுமேயில்லை. எனக்கிருப்பது நீங்கள் மட்டும்தான். இத்தனை காலமாக நீங்கள்தான் என் உயிரைக் காப்பாற்றி வந்தீர்கள். அல்லாவுக்கு கடன்பட்டிருப்பதைப் போல நான் உங்களுக்கும் கடன்பட்டிருக்கிறேன்.”

நான் மீண்டும் அழுதேன். எத்தனை பெரிய நெருக்கடியிலும் ஒருவரைப் பிரிந்து செல்வதென்பது வேதனை நிறைந்ததுதான். தப்பித்துப் போகும் அந்த சந்தோஷ வேளையிலும் என் மனம் முழுக்க துயரமே நிரம்பியிருந்தது.

தூரத்தில் ஹக்கீமின் குரல் கேட்கிறது!

நான் மஸராவிலிருந்து வெளியே காலெடுத்து வைத்தேன்.

ஆடுகள் கூட்டத்தோடு கதறின.

நான் திரும்பிப் பார்க்கவேயில்லை.

பார்த்திருந்தால், ஒருவேளை நான் அங்கிருந்து வந்திருக்கவே மாட்டேன்.

எனக்காக ஹக்கீமும் இப்ராஹிம் காதரியும் காத்துக் கொண்டிருந் தார்கள்.

நாங்கள் புறப்பட்டோம். புதிய ஒரு உலகை நோக்கி, புதிய ஒரு வாழ்வை நோக்கி.

# 31

வானத்தில் தீப்பிடித்து விட்டதைப்போல, அந்த ராத்திரி முழுவதும் நாங்கள் பதட்டத்துடன் ஓடிக்கொண்டேயிருந்தோம்.

மஸராவுக்கென்று தனி ரோடு எதுவும் கிடையாது. வண்டிகள் ஓடியோடி ஒரு டயர் பாதை உருவாகியிருந்தது. வழி தவறிப் போகாமலிருக்க நாங்கள் அதன் வழியாகத்தான் ஓட ஆரம்பித்தோம்.

அந்த வழி எங்கே போகிறதென்று எங்களுக்குத் தெரியாது. கண்ணெட்டும் தூரம்வரை நீண்டு கிடக்கும் மண் குன்றுகளுக்கிடையே வளைந்து, நெளிந்து, தொலையில் எங்கோவொரு மண் சரிவில் போய் மறைகிறது பாதை.

பால்வண்டிகள் போகும்போது அதிலிருந்து உயர்ந்தெழும்பும் தூசிப்படலத்தை மட்டுமே நான் பார்த்திருக்கிறேன். எப்படியானாலும் அந்தப் பாதை ஏதாவதொரு நெடுஞ்சாலையில் போய்த்தான் முடியும் என்று நாங்கள் உறுதியாக நம்பினோம். அது எத்தனை தொலைவில் கிடக்கிறது என்பதே எங்கள் சந்தேகம்.

நல்ல நிலாவெளிச்சம் இருந்ததால் ஓடுவது சிரமமாகவே தோன்றவில்லை. அல்லாவும் இயற்கையும் எங்களுடன்தான் இருக்கிறார்கள் எனத் தோன்றியது. வழியில் ஒரு பேச்சில்லை, முணுமுணுப்பில்லை- ஏன், பரஸ்பரம் ஒரு பார்வை கூட இல்லை.

ஓட்டம்... ஓட்டம்... ஓட்டம் மட்டுமே. எத்தனை தூரம் ஓடினாலும் இன்னும் பிடிக்கப்படாத தூரத்தை அடையவில்லை என்றொரு பதட்டம். யாரோ எங்களை பின் தொடர்ந்து வருவது போலொரு பீதி.

காற்றின் ஊளைச் சத்தம் கேட்கும் போதெல்லாம் அது அர்பாபுவின் வண்டிதானோ என்று நினைத்து நாங்கள் கலவரப்பட்டோம்.

அதனால் ஒவ்வொரு நிமிடமும் எங்கள் ஓட்டத்தின் வேகம் கூடிக்கொண்டிருந்ததேயொழிய, குறையவேயில்லை.

அப்படியே ஓடிக்கொண்டிருந்தபோது ஒரு இடத்தில் வண்டிப் பாதை இரண்டாகப் பிரிந்தது. இட வலமாக.

எதில் போனால் நெடுஞ்சாலையைத் தொடமுடியும்? குழம்பி னோம்.

நெடுநேர ஆலோசனைகளுக்கும், சந்தேகங்களுக்கும் முடிவில் இடப்பக்கப் பாதையில் ஓடுவது என்று நாங்கள் முடிவு செய்தோம்.

மீண்டும் எங்கள் ஓட்டம் தொடர்ந்தது. ஓடிக்கொண்டிருந்தபோது தொலை தூரத்தில் ஒரு வெளிச்சத் துணுக்கு எங்கள் கண்களில் தென்பட்டது. கூர்ந்து பார்த்தபோது அதுவொரு வண்டியின் வெளிச்சம் என்று புரிந்தது. அது ஆடி குலுங்கியபடியே வந்துகொண்டிருந்தது. என் மனம் குளிர்ந்தது.

ஆனால் இப்ராஹிம் காதரியோ எங்களை ஒரு மண் பாறைக்குப் பின்னால் ஒளிந்துகொள்ளச் சொன்னான்.

வண்டி எங்களை நெருங்கிக் கொண்டிருந்தது.

'அதிர்ஷ்டத்தை பரிசோதிக்கும் நேரமல்ல இது. ஒருவேளை வருவது நமது அர்பாபுக்களாக இருக்கலாம். இல்லையென்றால் அவர்களுக்குத் தெரிந்த வேறேதோ அரபிகள். அவர்களிடம் மாட்டிக்கொண்டால் நாம் அர்பாபுவின் கல்யாண மண்டபத்துக்கு இழுத்துச் செல்லப் படுவது உறுதி.'

நாங்கள் பாதையிலிருந்து விலகி சற்றுத் தொலைவிலிருந்த ஒரு பாறைக்குப் பின்னால் ஒளிந்து கொண்டோம். அந்த வண்டி உறுமிய படியே எங்களைக் கடந்து போனது. அது எங்களைக் கடந்தபோதுதான் தெரிந்தது அதுவொரு மினி லாரியென்று. அதை ஓட்டிக் கொண்டிருந்த வன் எங்களுடைய மஸராவுக்கு வழக்கமாக புல் கொண்டு வரும் ஒரு பட்டாணி.

"ஐயோ, அவனை எனக்கு நல்லாத் தெரியுமே!" இப்ராஹிம் தன் மார்பில் அடித்தான், "அவன் நம்மைக் காப்பாற்றுவான்."

அலறியபடியே நாங்கள் அந்த லாரியின் பின்னால் வெறி பிடித்த வர்களைப்போல் ஓடினோம்.

ஆனால் நாங்கள் வண்டிப்பாதையை அடைவதற்குள்ளாகவே அந்த லாரி வெகுதூரம் போய்விட்டிருந்தது.

அப்போது ஏற்பட்ட விரக்தியும், நிராசையும்... என்னுடைய விதியையும், அல்லாவையும் நான் சபித்தேன்.

அதிர்ஷ்டம் நம் கண்முன்னால் கடந்து செல்வதைப் பார்த்துக் கொண்டு நிற்பதை விடவும் துர்பாக்கியம் வேறென்ன இருக்கிறது?

கோபத்தால் நான் என் தலைமுடியைப் பிய்த்தெறிந்தேன். மார்பில் அறைந்து கொண்டேன்.

"ம்... சரி சரி. போனது போகட்டும். இனி நம்மால் அதைப் பிடிக்க முடியாது. அதை நினைத்துக் கவலைப்பட்டு என்ன ஆகப்போகிறது. அடுத்த வழியைப் பார்ப்போம்." இப்ராஹிம் காதரி சொன்னான்.

அங்கேயே நின்று அடுத்த வண்டிக்காக எங்கள் அதிர்ஷ்டத்தை சோதிக்க நாங்கள் முடிவு செய்தோம். அப்படியாக எதிர்பார்ப்பு நிரம்பிய ஆறு கண்கள் அந்த வண்டிப் பாதையையே பார்த்துக் கொண்டிருந்தன.

பாலைவனமோ ஆளற்ற சூனியத்துடன் மல்லாந்து கிடந்தது. நேரமோ ஓடிக்கொண்டிருக்கிறது.

நான் மனமுருகி பிரார்த்தனை செய்தேன்: "அல்லாவே...! எங்களுக்குத் தெரிந்த ஏதாவதொரு வண்டிக்காரன் இந்தப் பாதை வழியாக வருவதற்கு அருள் புரியுங்கள்..."

ஆனால் அந்த மினி லாரிக்குப்பிறகு அன்று ஒரு வண்டிகூட அந்தப் பாதையில் வரவேயில்லை.

ஓர் அதிர்ஷ்ட பரிசோதனைக்காக எங்கள் வாழ்க்கையை நீண்ட நேரம் அங்கேயே விட்டு வைக்க எங்களுக்குப் பயமாக இருந்தது. அப்போதைய நிலையில் அந்தக் காத்திருப்பு மிக அபாயகரமானது. எவ்வளவு முடியுமோ அவ்வளவு விரைவில் நெடுந்தூரம் போய்விட வேண்டிய கட்டாயத்திலிருந்தோம் நாங்கள்.

நேரம் வெளுத்து பூமியில் சூரியக் கதிர்கள் பட்டுவிட்டால் பாலைவனம் சட்டென்று உயிர்பெற்றுவிடும். அதன்பின்பு நாங்கள் மறைந்து கொள்ளக்கூட ஒரு இடம் இருக்காது.

காலையில் மஸராவுக்கு திரும்பி வரும் அர்பாபு எங்களை அங்கு காணாவிட்டால் துப்பாக்கியும், பைனாகுலருமாக வேட்டைக்குப் புறப்பட்டு விடுவான். பாலைவனத்தின் எந்த மூலையிலிருந்தாலும் அவன் எங்களைத் தேடிக் கண்டுபிடித்து விடுவான். அதன்பின் எங்கள் கதி? பயங்கரனுக்கு ஏற்பட்ட அதே கதிதான். அப்படிப்பட்ட ஒரு நிலை வந்துவிடவே கூடாது. எப்படியாவது தப்பித்துவிட வேண்டும்.

எப்படியாவது... தப்பித்தேயாக வேண்டும்...

நாங்கள் மீண்டும் ஓடத் தொடங்கினோம். இப்போது உங்களிடம் நானொரு உண்மையைச் சொல்லட்டுமா? உங்களை துர்பாக்கியம் சூழ்ந்திருக்கும்போது, நீங்கள் எடுத்துவைக்கும் ஒவ்வொரு அடியும் உங்களைத் தவறான பாதையில்தான் கொண்டு சேர்க்கும். இது என் அனுபவம்.

சொல்லப்போனால் அப்போது நாங்கள் புத்திசாலித்தனமாக ஆலோசித்திருந்தால், வண்டி போன அந்த திசையை நோக்கித்தான் ஓடியிருக்க வேண்டும். ஆனால் அப்போதைய பதட்டத்தில் நாங்கள் அதற்கு எதிர் திசையில் ஓடினோம். பீதியும், குழப்பமும் நமது சிந்தனையை முழுவதுமாக மழுங்கடித்துவிடும் என்பதற்குரிய சரியான உதாரணமே அந்த ஓட்டம். அந்தப் பைத்தியக்காரத்தனம்.

இப்படியெல்லாம் நடக்க வேண்டும் என்றுதான் என் தலையில் எழுதியிருக்கிறதே. நான் அந்த விதியை நோக்கித்தான் ஓடினேன் என்று இப்போது தோன்றுகிறது.

வண்டிப்பாதையைப் பிடித்துக் கொண்டு நாங்கள் எவ்வளவு முடியுமோ அவ்வளவு வேகமாக ஓடினோம். அர்பாபுவிடம் வண்டியிருக்கிறது. நாங்களோ கால்நடைகள். நாங்கள் ஒரு மணி நேரத்தில் ஓடும் தூரத்தை அர்பாபு ஐந்தே நிமிஷத்தில் தொட்டுவிடுவான். அதனால் இந்த ஒரு ராத்திரிக்குள் எத்தனை தூரம் போகமுடியுமோ அவ்வளவு தூரம் போயாக வேண்டும்.

விடிவதற்குள் பாதுகாப்பான ஒரு மறைவிடத்தைக் கண்டுபிடித்தாக வேண்டும். அப்படி ஓடிக் கொண்டிருந்தபோதுதான் எங்களுக்கு ஒரு விஷயம் புரிந்தது. இந்த பாலைவனத்தில் நாங்கள் தனியாக இல்லை. தொலைவில் அங்கங்கே ஏராளமான மஸராக்கள். அங்கேயும் எங்களைப்போன்ற துர்பாக்கியசாலிகள் ஆடுகளுக்கு காவலிருக்கிறார்கள். பாதையோரத்தில் அப்படிப்பட்ட மஸராக்கள் ஒன்றிரண்டை நாங்கள் பார்த்தோம்.

அதுவொரு ஆபத்தான கட்டம். காரணம், எல்லா மஸரா அர்பாபுக்களின் மகளுக்கும் இன்று கல்யாணம் இல்லையே...! அவர்கள் கூடாரத்திற்குள்தான் படுத்திருப்பார்கள். எங்களைப் பார்த்தால் எந்த பைத்தியக்கார அர்பாபுக்கும் தெரியும், நாங்கள் தப்பித்துப் போகும் ஓடுகாலிகள் என்று. எங்கள் தோற்றமும் அவசரமும் அப்படி இருந்தது. அதனால் நாங்கள் பாதையிலிருந்து சற்று விலகியே ஓடிக் கொண்டிருந்தோம். அப்படி ஓடுவதிலும் ஒரு சிக்கல் இருந்தது.

நல்ல நிலாவொளி, நாங்கள் ஓடிக்கொண்டிருப்பதோ வெட்டவெளியில். அதனால் எத்தனை தொலைவிலிருந்தும் எங்களை எவரும் பார்த்துவிட முடியும். மூன்று ஓடுகாலிகளைப் பார்த்து பாலைவனத்து ஆவிகள் என்று நினைப்பவன் சரியான பயந்தாங்கொள்ளியாகத்தான் இருக்க வேண்டும். அதனால் முடிந்தவரை ஒளிந்து ஓட வசதியாக பாறைகளுக்கும், மண் குன்றுகளுக்கும் அருகாகவே நாங்கள் ஓடிக் கொண்டிருந்தோம். ஆனால் அது எங்களை இன்னொரு ஆபத்தில் கொண்டு தள்ளியது.

எங்களுக்கு முன்னால் ஒரு பெரிய மணல் குன்று. கால்கள் வலிக்க ஏறி மறுபக்கம் சென்றபோது அது எங்களை ஒரு மஸராவுக்கு முன்னால் கொண்டுபோய் விட்டது.

நாங்கள் ஒளிந்துகொள்வதற்கு முன்னால் யாரோ எங்களைப் பார்த்துவிட்டார்கள். மட்டுமல்ல, அந்த ஓட்டத்திற்கிடையில், மணலில் உறங்கிக்கிடந்த யாரோ ஒருவனின் முதுகில் ஹக்கீம் மிதித்தும் விட்டான்.

அவன் அலறிக்கொண்டு எழுந்தபோது அவன் கண்முன்னால் மூன்று பயங்கர ஜீவிகள் ஓடிக்கொண்டிருக்கின்றன.

அவன் பயத்தில் 'திருடன்... திருடன்' என்று அலறத் தொடங்கினான்.

அப்போதுதான் அவனொரு ஒற்றையாள் இல்லை எனப் புரிந்தது. அவனுடைய அலறல் சத்தம் கேட்டு மஸராவுக்குள்ளிருந்து ஏனைய ஜீவிகளும் உயிர்த்தெழுந்தன. அவை எங்களைப் பிடிக்க விரட்டிக் கொண்டு வந்தன. நாங்களோ உயிரைக் கையில் பிடித்தபடியே காற்றாய் பறந்தோம். அந்த அமளி துமளியில் அங்கிருந்த அர்பாபுவும் தூக்கத்திலிருந்து எழுந்திருக்க வேண்டும். அரபியில் ஏதோவொரு அலறல் சத்தம் என் காதுகளைக் கிழித்துக் கொண்டு போனது.

திடீரென்று யாரோ என்னை பின்னாலிருந்து ஒரு உதை உதைத்தார்கள். நான் தலைகுப்புற மணலில் விழுந்தேன். அடுத்த நொடி எங்களுக்குப் பின்னால் ஒரு வெடிச் சத்தம்.

அப்போது மட்டும் நான் கீழே விழுந்திருக்காவிட்டால் அந்த குண்டு என்னை துளைத்து மறுபக்கம் மண்ணில் சென்று புதைந்திருக்கும்.

"எழுந்திருக்காதே!" தரையோடு தரையாய் கிடந்தபடியே இப்ராஹிம் முணுமுணுத்தான்.

ஓடிவந்தவர்கள் திகைத்தார்கள்.

'ஓடிக்கொண்டிருந்தவர்கள் திடீரென்று எப்படி மாயமாய் மறைந்தார்கள்?'

ஓடியது நிச்சயமாக ஆவிகள்தான் என்று அவர்கள் நினைத்திருக்க வேண்டும். அதன்பின் அங்குமிங்குமாக தேடுவதுபோல் ஏதோவொரு பாவனை செய்து விட்டு துப்பாக்கியால் அங்குமிங்குமாக ஒரு ரவுண்டு சுட்டுப் பார்த்துவிட்டு அவர்கள் தங்கள் மஸராவை நோக்கி திரும்பிப் போனார்கள்.

நாங்கள் மூவரும் தரையோடு தரையாக ஊர்ந்தபடியே ஒரு மணல் குன்றின் பின்பக்கமாக போய் ஒளிந்து கொண்டோம்.

அவர்கள் அனைவரும் திரும்பிப் போய்விட்டார்கள் என்று உறுதி செய்தபின் நாங்கள் மீண்டும் ஓடத்தொடங்கினோம்.

அந்த ஓட்டத்துக்கிடையில் அப்போது என்னை தரையில் தள்ளி விடத் தோன்றிய இப்ராஹிமின் சமயோஜித புத்திக்கு நான் நன்றி சொன்னேன்.

"நானா...? நான் அப்போது உன் பக்கத்திலேயே இல்லையே. அது மட்டுமல்ல, அப்போது ஒரு துப்பாக்கிக் குண்டை நான் எதிர்பார்க்கவும் இல்லை." அவன் ஆச்சரியப்பட்டான்.

அப்படியானால் அது ஹக்கீமாகத்தான் இருக்க வேண்டும்.

ஆனால் அவனும் அது தானில்லை என்று மறுத்தான்.

"அப்போ அது... யார்?"

நாங்கள் சந்தேகத்துடன் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டோம்.

அப்போதுதான், அந்த ஓட்டத்திற்கிடையே அமானுஷ்யமான ஒரு நான்காவது மனிதனும் எங்களைப் பின்தொடர்வதை நாங்கள் உணர்ந்தோம்.

என் உடல் சிலிர்த்தது. நன்றிப் பெருக்கில் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தோடியது.

# 32

குன்றும் மலையும் தாண்டி மேட்டிலும் குழியிலும் விழுந்து குண்டடிபட்ட பன்றியைப்போல் பிராண அவஸ்தையுடன் ஓடிய எங்கள் ஓட்டம் பொழுது புலர்வதற்கு சற்று முன்புதான் நின்றது.

நிலவு எப்போதோ இருட்டுக் குகைக்குள் போய் மறைந்து விட்டிருந்தது. ஆனாலும் வன்மம் நிறைந்த அந்த பாலைவன பூமியில் பைத்தியம் பிடித்தவர்களைப்போல் நாங்கள் ஓடிக்கொண்டேயிருந்தோம்.

"போதும்... போதும். இனி என்னால் ஒரு அடிகூட எடுத்து வைக்க முடியாது."

ஹக்கீம் தான் முதலில் ஓட்டத்தை நிறுத்தினான்.

"கொஞ்ச நேரம் ஓய்வெடுத்துவிட்டு ஓடலாம்." அவன் மூச்சு வாங்க தரையில் விழுந்தான்.

அப்படியொன்றும் எளிதாக எங்களைப் பிடித்துவிட முடியாத தொலைவுக்கு வந்து சேர்ந்துவிட்டோம் என்பது எங்களுக்குப் புரிந்திருந்தது.

அந்த நிம்மதியில் நானும் ஹக்கீமின் அருகில் போய் உட்கார்ந்தேன். உட்காரவில்லை....

அப்படியே ஒடிந்து விழுந்தேன்.

கால்கள் களைத்து குதிகால் தசை மேலேறிப் போயிருந்தது. பூமியைச் சுற்றிவந்த நாயைப்போல மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்கிக் கொண்டிருந்தது. வாயைத் திறந்து ஒரு வார்த்தைகூட பேசமுடியாத படிக்கு நாக்கு வறண்டு போயிருந்தது. மார்பெலும்பை உடைத்துக் கொண்டு 'இப்போ வெளியே வந்துவிடுவேன்' என்னும்படியாக

இதயம் படுவேகத்தில் துடித்துக் கொண்டிருந்தது. கண்களில் இருள் பரவிக்கொண்டிருந்தது.

அப்படியே உட்கார்ந்திருந்தபோது கொஞ்சம் படுத்தால் தேவலாம் எனத் தோன்றியது. பாம்போ பூரானோ வந்துவிடுமே என்றெல்லாம் சிந்திக்கவில்லை.

கொஞ்சம் படுக்க வேண்டும்... களைப்பைப் போக்க வேண்டும்... அதுமட்டும்தான். கைகளை விரித்தபடியே நான் தரையில் சாய்ந்தேன்.

ஆனால் அந்த பேய் ஓட்டம் இப்ராஹிமுக்குக் களைப்பை ஏற்படுத்தவில்லை என்று அவன் முகத்திலிருந்தே தெரிந்தது. அவனும் எங்களுடன் வந்து உட்கார்ந்து கொண்டான், சிறிய உடற்பயிற்சிக்குப் பின்பு ஆசுவாசமாக காற்று வாங்குவதைப்போல.

அவனது ஆஜானுபாகு தோற்றத்துக்கு முன்னால் நாங்கள் இரண்டு நாய்க்குட்டிகளைப் போல சுருண்டு கிடந்தோம்.

மறுநாள் காலையில் சூரியன் உதித்தான். சுதந்திரமான புத்தம் புதிய சூரியன். புது வாழ்க்கைக்குள் உதித்து வந்த செங்கதிர்.

இப்ராஹிம் கூப்பிடும் சத்தம் கேட்டுத்தான் நான் கண் விழித்தேன். அந்த அளவுக்கு நாங்களிருவரும் உறக்கம் என்னும் நீர்ச் சுழலுக்குள் சிக்கிப்போயிருந்தோம்.

ஒரு நிமிடம், நான் மஸராவில் இருப்பதாக நினைத்து விட்டேன். கூப்பிடுவது அர்பாபுதான் என்று நினைத்து திடுக்கிட்டேன்.

ஆனால் கண்ணைத் திறந்தபோது... என் முன்னால் மஸரா இல்லை, ஆடுகள் இல்லை, ஒட்டகங்களில்லை, அர்பாபு இல்லை, கூடாரமில்லை.

ஹக்கீம், இதோ என் பக்கத்தில் சுருண்டு கிடக்கிறான்.

அப்போதுதான் நானிருக்குமிடம் எனக்கு உறைத்தது.

நான் அவசர அவசரமாக ஹக்கீமை தட்டியெழுப்பினேன்.

"ஹக்கீம்... இங்கே பார்த்தாயா...? நாம இப்போ எங்கே வந்திருக்கோம் என்று... நரகத்தின் நாட்களெல்லாம் முடிந்து போய் விட்டன. இனி வேதனைகளில்லை. இனி என்றென்றைக்கும் நாம் சுதந்திர மனிதர்கள்.

"அல்லாவே, உனக்கு நன்றி! அண்ட சராசரங்களையும் காப்பவனே, நீ கருணை மிகுந்தவன். உன் அன்பு எல்லையற்றது."

நான் வானத்தைப் பார்த்துக் கண்ணீர் விட்டேன்.

மீண்டும் ஹக்கீமை உலுக்கினேன்.

ஆனால் அவனோ எனது கையை தட்டிவிட்டு விட்டு திரும்பி ஒருக்களித்துப் படுத்தான்.

பல காலத்திற்குப் பின்பு அனுபவிக்கும் சுதந்திரம். உறக்கம் தீரு மட்டும் உறங்கலாம் என்னும் சுதந்திரம். 'பாவம் உறங்கட்டும்.'

நான் அவனை அவன் உறக்கத்துக்கு விட்டுக்கொடுத்துவிட்டு. கண்களை அகலவிரித்தபடியே சுற்றுமுற்றும் ஆர்வத்துடன் பார்த்தேன்.

எங்கு பார்த்தாலும் சின்னஞ்சிறு குன்றுகளும், மணல் மேடுகளும் நிறைந்த வெட்டவெளி. மணல் மேடுகள் நிறைந்திருந்ததால் சற்று தொலைவுக்குமேல் வேறு எதையும் பார்க்க முடியவில்லை.

இப்ராஹிம் காதரி சற்று தள்ளியிருந்த ஒரு மணல் குன்றின் உச்சியில் நின்று கொண்டிருந்தான்.

"இப்ராஹிம், அங்கே பாதை ஏதாவது தெரிகிறதா...?"

நான் உரத்த குரலில் கேட்டேன். அவன் பதிலொன்றும் சொல்லாமல் என்னை அங்கே வரும்படி அழைத்தான்.

'அப்படியென்ன இருக்கிறது அங்கே' என்னும் எதிர்பார்ப்புடன் நான் அந்த மணல் மேட்டை நோக்கி நடந்தேன்.

ஆனால், அங்கே நான் பார்த்த காட்சி!

ஆச்சரியத்தால் நான் உறைந்துபோனேன்.

பாலைவனம்! ஒரு உண்மையான பாலைவனம்! முன்னும் பின்னும், வலப்பக்கமும் இடப்பக்கமுமாக கண்ணுக்கெட்டிய தூரம்வரை அனந்தமான மணல் பரப்பு. அடிவானம் முதல் அடிவானம்வரை அலையடித்துக் கொண்டிருக்கும் ஒரு மகா மண் சமுத்திரம்! பார்வையைத் தடுக்கும் ஒரு சிறுபொருள்கூட அங்கில்லை. ஒரு மரம், ஒரு செடி, ஒரு புல் பூண்டு... ஏன், ஒரு மண் குவியல் கூட அங்கில்லை.

அப்போதுதான் நாங்கள் எப்படிப்பட்ட இடத்துக்கு வந்து சேர்ந்திருக்கிறோம் என்னும் நினைப்பு என் மண்டைக்கு உறைத்தது. ராத்திரி ஓட்டத்திற்கிடையில் எப்போதோ எங்கள் கால்கள் கெட்டித் தரையை விட்டு துகள் மணலுக்குள் புதைந்ததை நாங்கள் கவனிக்கவேயில்லை. நடுக்கம் நிறைந்த பீதி என் மனதுக்குள் ஒரு பாம்பைப் போல் நெளியத் தொடங்கியது.

நான் இப்ராஹிம் காதரியின் முகத்தைப் பார்த்தேன். அவன் முகத்திலும் கவலை மண்டிக் கிடந்தது.

ஹக்கீமுக்கு மட்டும் அதன் பயங்கரம் இன்னமும் புரியவில்லை.

அவன் அப்போதும் உறங்கிக்கொண்டுதானிருந்தான். நானும் இப்ராஹிமும் கவலையுடன் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டோம்.

அல்லாவே... இப்போது நாங்கள் எங்கே வந்து சேர்ந்திருக்கிறோம்...? நாங்கள் எங்கிருந்து வந்தோம், இனி எங்கே போகவேண்டும்...?

நான் தேடிப்புறப்பட்ட புதிய உலகம் எங்கேயிருக்கிறது...? கிழக்கிலா, மேற்கிலா இல்லை, தெற்கிலா, வடக்கிலா? எந்த பக்கமாகப் போனால் இலக்கை அடையலாம்? யாருக்குத் தெரியும்?

எங்கு பார்த்தாலும் மணல்... மணல்... மணல். அதைத்தவிர வேறெதுவுமே அங்கில்லை.

அதுவே வேறொரு சந்தர்ப்பமாக இருந்திருந்தால், ஒரு கற்பனைக் காட்சியில் உருப்பெற்று வருவதைப் போன்ற அந்த மணல் காட்டின் அகண்டம் என்னை மகிழ்ச்சியின் உச்சத்துக்கே கொண்டு போயிருக்கும்.

ஆனால் அப்போது அந்த மணல் கடல் எனக்குள் அச்சத்தையே ஏற்படுத்தியது. அந்த பெருங்கடலைக் கடக்க ஒரு சின்னஞ்சிறிய படகு போதாது. ஒரு பெருங்கப்பலே வேண்டும்.

அப்படியானால்... கடவுளே... இந்த வெறுங்கைகளை வைத்துக் கொண்டு நாங்கள் எப்படி இந்த கடலைக் கடந்து கரையேறப் போகிறோம்? குடிக்க ஒரு சொட்டு தண்ணீர் இல்லாமல், சாப்பிட ஒரு கவளம் உணவில்லாமல்...! எத்தனை நாட்கள் எங்களால் தாக்குப்பிடிக்க முடியும்.

இன்னும் கொஞ்ச நேரத்தில் சூரியன் அதன் முழு சக்தியையும் இங்கே பாய்ச்ச ஆரம்பித்து விடுவானே! அதற்கு முன்னால் எங்களால் இங்கிருந்து தப்பித்துவிட முடியுமா?

கடவுளே... நீயே கதி. உன் மீது நாங்கள் வைத்துள்ள விசுவாசம் எங்களைக் காப்பாற்றட்டும்...!

"இப்ராஹிம், உனக்கு நினைவிருக்கிறதா? நேற்று ராத்திரி நாம் மேற்கு பக்கமாகத்தானே ஓடிக்கொண்டிருந்தோம். இனியும் அந்த பக்கமாகவே போவோம். எப்படியும் ஒரு பொது வழியில் சென்று சேராமலிருக்க மாட்டோம்." நான் சொன்னேன்.

அவனோ பதிலேதும் சொல்லாமல் ஆழ்ந்த சிந்தனையுடன் அங்குமிங்குமாக நடந்து கொண்டிருந்தான்.

நெடுநேரத்துக்குப் பின் அவன் உறுதியான குரலில் சொன்னான்: "நகரம் கிழக்கில்தான் இருக்கிறது. நாம் அதைக் குறிவைத்து நடப்போம்."

நாங்கள் ஹக்கீமையும் தட்டியெழுப்பினோம்.

அப்போதுதான் நான் அதைக் கவனித்தேன். ஹக்கீமின் உடம்பிலிருந்து ஏதோவொரு வீச்சம் வந்து கொண்டிருக்கிறது.

நான் மஸராவுக்குள் நுழைந்த தினத்தில் முகத்திலடித்த அதே வீச்சம். இதுநாள் வரையில் அது என் மூக்குக்கு பழகிப் போயிருந்தது.

ஆனால் இப்போது, மஸராவை விட்டு வெளியே வந்தபோது அது மீண்டும் அப்பட்டமாக என் முகத்திலடித்தது.

சொல்லப்போனால் என் உடம்பிலிருந்தும் அதைப்போலவே வீச்சம் வீசிக் கொண்டிருந்தது. ஆனாலும் அதை சுயமாக மணத்தறிய எனக்கு மேலும் சில நாட்கள் பிடித்தன.

நாங்கள் நடக்கத் தொடங்கினோம். சொல்லப்போனால் சந்தோஷத்தால் துள்ளிக் குதிக்க வேண்டிய நிமிடங்கள். மஸராவிலிருந்து தப்பிக்கும் ஆசை அதன் இறுதிக் கட்டத்தை நெருங்கிக் கொண்டிருக்கிறது.

இப்போது அர்பாபு மஸராவுக்கு திரும்பி வந்திருப்பான். என்னைக் காணாமல் கோபம் தலைக்கேறியிருக்கும். அப்போது நாங்கள் மூவருமே தப்பித்துவிட்டோம் என்று அவனுக்குத் தெரிய வரும்போது அவனுக்குப் பைத்தியமே பிடித்துவிடும். கோபம் மண்டையைப் பிளக்க அவன் எங்களைத் தேடி எங்கே போவான்?

'ஏ அர்பாபு, நீ எங்கே போய்த் தேடினாலும் நாங்கள் அகப்பட மாட்டோம். நீ தேடிக்கொண்டிருக்கும் வழியில் எங்குமே நாங்கள் இருக்கமாட்டோம். உன் கைபெட்டும் தூரத்திலிருந்து நாங்கள் வெகு தொலைவுக்கு வந்துவிட்டோம்.'

ஆனால்... உண்மையிலேயே நாங்கள் தப்பித்துத்தான் விட்டோமா? அப்படிச் சொல்லத்தான் முடியுமா? இந்த பாலைவனத்தைத் தாண்ட வேண்டும். எங்காவதொரு நெடுஞ்சாலையைக் கண்டுபிடிக்க வேண்டும். அங்கே ஏதாவதொரு வண்டி எங்களிடம் கருணை காட்டி எங்களை நகரத்தில் கொண்டு போய் சேர்க்க வேண்டும். அதுவரையிலும் தப்பி விட்டோம் என்று முழுமையாகச் சொல்ல முடியாது.

இதற்கிடையே ஏதாவதொரு அரபியின் கண்ணில் பட்டுவிட்டால்... முடிந்தது கதை. எங்கள் கோலத்தைப் பார்த்தவுடனேயே தெரிந்துவிடும் 'நாங்கள் மஸராவிலிருந்து தப்பித்து வந்திருக்கும் ஓடுகாலிகளென்று!' அதனால் சந்தோஷத்தைவிடவும் மனக்கிலேசமே மனம் முழுக்க.

ஆனாலும் எதிர்பார்ப்பு உந்த நாங்கள் நடந்து கொண்டிருந்தோம். முதல்நாள் இரவு ஓட்டத்தின் களைப்பெல்லாம் நீங்கி இப்போது நாங்கள் அதிக உற்சாகத்துடன் இருந்தோம்.

இப்போது நாங்கள் அடிமைகளல்ல, சுதந்திரப் பறவைகள் என்னும் உணர்வு எங்களுக்கு உத்வேகமூட்டியது. நாங்கள் எங்கள் பயணத்தைத் தொடர்ந்தோம்.

ஆனால் அதுவொரு மரண பயணத்திற்கான கால் சுவடு என்பதை அப்போது நாங்கள் அறிந்திருக்கவில்லை!

# 33

முந்தைய நாளின் பதட்டங்களெதுவும் இல்லாமல் உற்சாகத்துடன் இருந்தது எங்கள் நடை. அந்த பாலைவனச் சூட்டால் எங்களைத் தொடக்கூட முடியவில்லை. எத்தனையோ காலங்களாக நாங்கள் இதை தினமும் அனுபவித்து வருகிறோம். இந்த வெக்கையும், தாகமும் எங்களுக்கு சர்வ சாதாரணம்.

பல வருடங்களாக மஸராவில் இருந்து வரும் ஒருவனை பாலைவனத்தால் அத்தனை சீக்கிரமாகவொன்றும் தோற்கடித்துவிட முடியாது. மிகப்பெரிய பங்களாக்களில் வசித்து, எப்போதோ சில சமயம் பாலைவனத்தைச் சுற்றிப் பார்க்க வருபவர்கள்தான் அதன் சூட்டில் வெதும்பிப் போகிறார்கள்.

பாலைவனம் அதற்குத் தன்னை தயார்படுத்துவதற்குள் நாங்கள் எங்கள் இலக்கை அடைந்திருப்போம். எங்களுடன் அல்லாவும் இருக்கிறார். அந்த விசுவாசமும் தன்னம்பிக்கையுமே அந்த கொடும் பாலைவனத்தில் எங்களை வழிநடத்தின.

பாலைவனத்தின் ஒவ்வொரு காட்சியையும் அணுஅணுவாக அனுபவித்தபடியே நாங்கள் நடந்து கொண்டிருந்தோம். அது ஏதோவொரு திருவிழாவுக்குப் போவதைப் போல இருந்தது.

ஹக்கீம்தான் அதிக மகிழ்ச்சியில் இருந்தான். வழியில் காணும் ஒன்றைக்கூட விடமாட்டான். அது என்ன? இது என்ன? என்று அவனுக்கு அனைத்தையும் தெரிந்தாக வேண்டும்.

ஒரு குழந்தையின் அப்பாவித்தனத்தோடு அவன் இப்ராஹிமிடம் கேள்வி மேல் கேள்வி கேட்டுக் கொண்டேயிருந்தான். இப்ராஹிமும் சலிக்காமல் அதற்கு சுவாரசியமாக பதில் சொல்லிக் கொண்டே வந்தான்.

பாலைவனத்தைப் பற்றிய அவனுடைய அறிவு எனக்கு பிரமிப் பூட்டியது. அப்படியே நடந்து கொண்டிருந்தபோது ஒரு காட்சியைப் பார்த்து நாங்கள் அதிசயித்து நின்றோம்.

மணல் காற்று வீசி வீசி மண் படிவங்களாகிப்போன ஒரு பிரம் மாண்டமான வனபூமி! கற்பனையில் கூட கேள்விப்பட்டிருக்காத முற்றிலும் வித்தியாசமான ஓரிடம். மரங்களின் வடிவில் அந்த சமவெளி முழுக்க மணல் புற்றுகள்!

ஹக்கீம் ஆர்வத்துடன் அந்த மணல் புற்றுகளில் ஒன்றைக் கைகளால் தொட்டுப்பார்த்தான். அவன் கை பட்டதும் தான் தாமதம், அதிலிருந்து மணல் பொலபொலவென்று உதிர்ந்து விழ ஆரம்பித்தது. எந்த நூற்றாண்டின் மணல் காற்று இந்த வனபூமியின் மரங்களை இப்படி மணல் பிம்பங்களாக உருமாற்றியதோ என நான் கற்பனை செய்து பார்த்தேன்.

இந்த பாலைவனம் முழுவதுமே ஒரு அடர் வனமாக இருந்த காலத்தைப் பற்றியும், அதை மணல் காற்று மெல்ல மெல்ல அரித்து விழுங்கியதையும் நான் பீதியுடன் நினைத்துப் பார்த்தேன்.

இப்ராஹிம் எச்சரித்தான். "ரொம்ப நேரம் இங்கே நிற்க வேண்டாம். இது மிக ஆபத்தான இடம். எப்போது வேண்டுமானாலும் மணல் காற்று வீசியடிக்கலாம். அதிலிருந்து தப்புவது என்ற கேள்விக்கே இடமில்லை."

ஒரு பத்தடிதான் எடுத்து வைத்திருப்போம். சட்டென்று கண் முன்னால் ஏதோவொரு நிழலாட்டம். முதலில் அது கானல் நீராக இருக்குமோ என்றுதான் நினைத்தேன். ஏதோவொரு ரீங்கார சப்தம். இப்ராஹிம் எச்சரித்ததைப் போல் மணல் காற்றுதான் வந்துவிட் டதோ என்று கண்களை விரித்து பார்த்தபோது, சற்று தூரத்தில் காற்றில் தலையசைத்து நிற்கும் பூங்கொடிகளைப் போல ஏதோ வொன்று அங்குமிங்குமாக ஆடிக்கொண்டிருந்தது. மட்டுமல்ல, அது மெதுவாக எங்களை நோக்கி நகர்ந்து கொண்டுமிருந்தது.

இப்ராஹிம் பீதியால் அலறினான்.

"பாம்புகள்!"

அப்போதுதான் தெளிவாகத் தெரிந்தது. தலையாட்டியபடியே முன்னோக்கி நகர்ந்து வருகிறது ஒரு பெரிய பாம்புக் கூட்டம். கூட்டம் என்றால் அஞ்சோ பத்தோ இல்லை. ஆயிரக்கணக்கான பாம்புகள். மிகப் பெரிய இராணுவம் அணிவகுத்து வருவதைப்போல, பாலை வனத்தில் புழுதியைக் கிளப்பியபடி வேகமாக வந்து கொண்டிருந்தது பாம்புப்படை.

கனவில் கூட காணமுடியாத ஒரு காட்சி! படைக்கு முன்னால் தளபதியைப்போல படம் விரித்தபடியே ஒரு காட்டுவிரியன். அதன் பின்னால் பாம்புப் படைகளின் அணிவகுப்பு!

இப்ராஹிம் அலறினான். "மணலுக்குள் தலையைப் புதைத்துக் கொண்டு அசையாமல் அப்படியே கிடந்துவிடுங்கள். அதைத் தவிர இப்போது நம்மால் வேறெதுவுமே செய்ய இயலாது."

நெருப்புக் கோழிகளைப்போல் மண்ணுக்குள் தலை நுழைத்தபடியே நாங்கள் அசையாமல் கிடந்தோம். சீழ்க்கையொலி எங்களை நெருங்கிக் கொண்டிருந்தது. பயத்தால் என் உடல் சிலிர்த்தது. மூச்சை அடக்கிய படியே நான் மரக்கட்டைபோல் கிடந்தேன்.

அந்த ஆயிரத்தில் ஏதாவதொன்றின் பல் என் உடம்பின் ஏதோ ஓரிடத்தில் சற்றே உரசினாலும் போதும். பின் பத்தே பத்து நிமிடம் தான், எல்லாம் அடங்க. மனதுக்குள் அதி உச்சத்தில் அல்லாவின் நாமத்தை ஜெபித்தபடியே கிடந்தேன்.

பாம்புப் படை எங்கள் மீதாக வளைந்து நெளிந்து முன்னகர்ந்து கொண்டிருந்தது. அவை என்னை ஸ்பர்சிக்கும் போதெல்லாம் ஒரு தீக்கனலால் சூடு வைப்பதைப் போல் என் உடம்பு பொசுங்கியது.

பாம்புப் படை முழுவதும் எங்களைக் கடந்து போய்விட்டன என்று உறுதியான பின்பே நாங்கள் மண்ணுக்கடியிலிருந்து தலையை உயர்த்தினோம். எங்கள் உடம்பில் துணி மூடாமலிருந்த இடங்களெல் லாம் சாட்டையால் அடித்ததுபோல் விளாறு விளாறாக இருந்தது.

நீங்கள் இப்போது தான் முதல்முறையாக ஒரு பாலைவனத்துக்குள் வருகிறீர்கள் என்றால் வெகு சீக்கிரத்திலேயே இந்தப் பாலைவனம் ஒரு பாலைவனமே அல்ல என்று ஒரு முடிவுக்கு வந்துவிடுவீர்கள்.

சொல்லப் போனால் பாலைவனம் என்பது ஒரு வனம். பல்வேறு உயிரினங்கள் வாழும் ஒரு சரணாலயம். பாம்புகள், பூரான்கள், பல்லி கள், சிலந்திகள், பட்டாம்பூச்சிகள், கழுகுகள், செந்நாய்கள், முயல்கள், கிளிகள் என்று அனேகம் உயிரினங்கள்.

அவை ஒவ்வொன்றுக்குமே தனித்தனி பாதைகள், தனித்தனி நகரங்கள், தனிச் சட்டங்கள், தனி நாடுகள் உண்டு. மனிதனுக்கும், அவனுடைய சட்டங்களுக்கும் அங்கு இடமேயில்லை. மனிதனின் கட்டுப்பாடுகளை அவை பொருட்படுத்துவதேயில்லை. அவர்களே இந்தப் பாலைவனத்தின் வாரிசுகள். அவர்களுக்காக அல்லா உரு வாக்கிக் கொடுத்த பூமி. அல்லா அவர்களை அங்கே வாழ அனுப்பி யிருக்கிறான்.

நானோ அங்கே அத்துமீறி நுழைந்தவன். என் உடம்பில் ஏற்பட்ட சிறு கொப்புளங்கள் அவை தந்த சிறிய தண்டனை மட்டுமே!

பகல் அத்தனை சிரமமானதாகவொன்றும் இருக்காது. இரவில் தான் மிகுந்த எச்சரிக்கையாக இருக்க வேண்டும். பகலில் அங்கங்கே பொந்துகளில் பதுங்கிக் கிடப்பவையெல்லாம் இரவில் இரை தேடி வெளியே வந்துவிடும். பாலைவனப் பாம்புகள் மிகக் கொடிய விஷ முள்ளவை. பாம்புகளில் மட்டுமே ஐம்பதிற்கும் மேற்பட்ட இனங்கள்.

எங்கள் வழியில் உரிந்து கிடந்த எத்தனையோ பாம்புச் சட்டைகளைப் பார்த்தோம். அவை ஒவ்வொன்றையும் கையிலெடுத்து, அது எந்த பாம்பின் சட்டை என்று எங்களுக்கு சொல்லித் தருவான் இப்ராஹிம்.

அந்த பாம்பு கடித்தால் எத்தனை வினாடிக்குள் மரணம் தழுவும் என்பதைச் சொல்ல மறக்கவேமாட்டான். பாம்பு எதற்கு... ஒரு சின்னஞ்சிறு சிலந்தியோ, பூரானோ கடித்தால் கூட போதும். மரணம் நிச்சயம்.

பாலைவனத்திலும் ஆமைகள் உண்டு என்று உங்களுக்குத் தெரியுமா? அவை கடலாமை அளவுக்கு பெரிதாக இல்லாவிட்டாலும் நடுத்தரமாக இருக்கும். சூடு அதிகமில்லாத நேரங்களில்தான் அவை வெளியே வரும். நூறு வருடம் வரையிலும் வாழும் அவற்றின் உடலின் நாற்பது சதவிகிதமும் தண்ணீர்தான்.

பாலைவனக் கப்பல் என்று சொல்லப்படும் ஒட்டகங்களுக்குக்கூட மூன்று நாள்களுக்குகொருமுறை தண்ணீர் குடித்தாக வேண்டும். ஆனால் இந்த ஆமைகளோ ஆறுமாதத்துக்குத் தேவையான தண்ணீரை சேமித்து வைத்துக் கொள்ளும் திறன் படைத்தவை.

பாலைவனத்தில் நான் பார்க்க ஆசைப்பட்டு ஆனால் பார்க்காமலே போன ஒரு உயிரினம் நெருப்புக் கோழி தான். அது பாலைவன மணலில் தலை நுழைத்து நிற்கும் காட்சி எனக்கு இப்போதும் ஒரு கனவுதான்.

இருபத்தி ஐந்து கிலோமீட்டர் வேகத்தில் ஓடக்கூடிய, ஒட்டகத்தின் அடிவயிற்றைப் பற்றிப்பிடித்து அதன் வயிற்றுக்குள்ளிருந்து அனைத்தையும் உறிஞ்சியெடுக்கும், ஓர் உருளியைப் போல் பெரிதான ஒட்டகச் சிலந்தியைப் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன்.

ஆனால் நான் கேள்விப்பட்டதெல்லாம் வெறும் கட்டுக்கதைகளே என்று அவற்றை நேரில் பார்த்தபோது எனக்குப் புரிந்துவிட்டது.

பாலைவன மணலில் கால்கள் புதைய நடந்து கொண்டிருந்தபோது இப்ராஹிமே எனக்கு அவற்றைக் காட்டித் தந்தான்.

"இத்தனை சிறியவையா, இல்லை இல்லை, இவை குட்டிகளாகத் தான் இருக்கும்." டினோசர்களை மனதில் நினைத்து நான் அதிசயப் பட்டேன்.

இப்ராஹிம் சிரித்தான்.

இந்த பாவப்பட்ட ஜீவிகளைப் பற்றி யாரோ உருவாக்கிய கட்டுக் கதைகள். ஒட்டகத்தைப்போலவே இந்த கொடும் பாலைவனத்தில்தான் இதனுடைய போராட்ட வாழ்க்கையும் என்பதைத் தவிர மற்றவை யெல்லாம் வெறும் கற்பனையே.

பாலைவனத்தில் நாங்கள் பார்த்த மற்றொரு அற்புதம் பறக்கும் ஓணான்கள்.

கொளுத்தும் உச்சி வெயிலில் நடந்து கொண்டிருக்கும்போது

சட்டென்று கண்ணுக்கு முன்னால் ஏதோவொரு தங்க நிறம் மின்னி மறைவதைப் பார்த்தோம்.

அவை ஆவிகளையும் பூதங்களையும் போன்றவை. எங்கிருந்து வருகின்றன, எப்படி மறைகின்றன என்பதே தெரியாது. சூடிறங்கி நீர்வற்றிப்போன கண்களின் மாயக் காட்சியா அல்லது இத்தனை பிரகாசமான வெளிச்சத்தால் கண்களில் பட்டாம்பூச்சி ஏதும் பறக்கிறதா என்று சந்தேகமாக இருந்தது.

திடீரென்று மணலுக்குள் எங்கிருந்தோ தலைகாட்டும். பீதியால் நடுங்குவதைப்போல் தன் விழிகளை இட வலமாக உருட்டி விழித்து நம்மை ஒரு பார்வை பார்க்கும். சில நேரங்களில் அதன் பார்வை நெடுந்தூரம்வரை பாய்ந்து செல்வதைப் பார்க்க முடியும்.

எவரோ பின்னாலிருந்து நம்மீது கல்லெடுத்தெறிவது போல் தோன்றும். அப்படி நினைத்து நானே பல தடவை பின்னால் திரும்பிப் பார்த்திருக்கிறேன். அவை மணல் மடிப்புகளுக்கிடையிலிருந்து புறப்படும் அம்புகளைப்போல் வேகமாகப் பாயும். அப்போது கூட அவை ஓணானாக இருக்கும் என்று நான் நினைக்கவில்லை.

எப்போதோ ஒரு மணல் மேட்டின்மேல் ஏறிக்கொண்டிருந்தபோது மேட்டின் உச்சியில் அவை அங்குமிங்குமாக பறந்து விளையாடிக் கொண்டிருந்ததைப் பார்த்தேன். தங்க நிறத்தின் துள்ளலாட்டம். அது ஒரு மரக்கிளையில் அங்குமிங்குமாக தாவிப் பறக்கும் சிட்டுக் குருவிகளைப் போலிருந்தது.

நூற்றுக்கணக்கான ஓணான்கள் ஒரு மண் குளத்தில் கிடந்து கூடி கும்மாளமடிக்கின்றன. அவற்றுக்கு உண்மையிலேயே சிறகுகள் இருக்கிறதா, இல்லை வெறும் கால்களால்தான் பறக்கிறதா என்பதைத் தெரிந்து கொள்ள ஒன்றைப் பிடித்துப் பார்க்கலாம் என்று நினைத்தேன்.

ஆனால் நான் அவற்றைப் பிடிக்க எத்தனிப்பதற்குள்ளேயே அவையெல்லாம் சட்டென்று மாயமாய் மறைந்துவிட்டன. அத்தனை வேகம், அத்தனை விரைவு!

இந்த ஓணான்கள் தண்ணீரே குடிப்பதில்லையாம். இப்ராஹிம் சொன்னான்.

"ஓணான்களே, வேதனை நிறைந்த இந்தப்பயணத்திற்கிடையில் ஒரு நிமிட நேரம் அழகான காட்சி விரித்து எங்களை சந்தோஷப்படுத்திய தங்கநிற ஓணான்களே, தண்ணீரே குடிக்காமல் இந்த ஜென்மம் முழுவதும் உங்களால் உயிர் வாழ முடியுமென்றால், அந்த உயிரில் கொஞ்சம் எனக்கும் தாருங்களேன். எனது இந்த பாலைவனப் பயணம் எங்காவது ஓரிடத்தில் போய்ச் சேர்வது வரைக்குமாவது..."

பகல் மங்கி, தூசி படிந்திருந்தது. ஒரு பத்தடிக்கு அப்பால் என்ன இருக்கிறது என்றே தெரியவில்லை. அது எங்கள் நடைக்கு பெருத்த இடையூறாக இருந்தது.

ஆனாலும் நாங்கள் நடந்து கொண்டேயிருந்தோம். ஆகாயம்... வெயிலையல்ல, தீ நாளங்களையே எங்கள் மீது பாய்ச்சிக் கொண்டிருக்கிறது எனத் தோன்றியது. சூடு தாங்காமல் எங்கள் உடல் மெதுவாக வாடத் தொடங்கியது.

காலையில் நடக்க ஆரம்பித்தபோது இருந்த உற்சாகம் இப்போது வடிந்து போயிருந்தது. ஆனாலும் இப்ராஹிம் எங்களை உற்சாகப் படுத்திக் கொண்டேயிருந்தான்.

"இன்னும் ஒரு மைல்தான், அப்புறம் நாம் நெடுஞ்சாலையை அடைந்துவிடுவோம்."

எதிர்பார்ப்புதானே மனிதனை முன்னேறத் தூண்டுகிறது. நாங்கள் நடந்தோம். நடந்து கொண்டேயிருந்தோம். ஆனால் கண்முன்னால் மீண்டும் மீண்டும் பாலைவனமே வாய் பிளந்து கிடந்தது.

மணல்... மணல்... மணல் மட்டும்தான். அப்படியாக எங்கள் நடைப் பயணம் காலை, மதியம், மாலை என்று பல்வேறு பொழுதுகளையும் தாண்டிச் சென்றது.

ஆனால் நாங்கள் எதிர்பார்த்த இலட்சியம் மட்டும் இன்னும் வரவேயில்லை. எங்கள் தலைக்குமேல் மேற்கு நோக்கி ஊர்ந்து நகர்ந்த சூரியன், எங்களை அந்தப் பாலைவனத்தில் தனியே தவிக்க விட்டுவிட்டு, தான் மட்டும் ஓடிப்போய் அடிவானக் கனவுக்குள் முகம் புதைத்துக் கொண்டான்.

ஒரு துளி தண்ணீர்கூட நாக்கில் படாமல் ஒரு பகல் முழுவதும் ஓடியபின், மெல்ல இரவு வந்தது.

மூச்சிளைக்க நாங்கள் தரையில் துவண்டு விழுந்தோம்.

ஒரு பகல் முழுவதும் நடந்த பின்னாலும் இன்னமும் நம்மால் எங்கேயும் போய்ச் சேரமுடியவில்லையே என்னும் துயரத்தில் நான் கண்ணீர் விட்டு அழுதேன்.

ஹக்கீமும் என்னுடன் சேர்ந்து கொண்டான்.

எப்படியோ விதி நம்மை இந்த பாலைவனத்துக்குள் கொண்டு வந்து தள்ளிவிட்டது. இங்கே வந்து சேர்ந்த புதிதில் "விரும்பியோ விரும்பாமலோ எப்படியோ இந்த பாலைவன பூமிக்கு வந்து விட்டோம். வந்ததுதான் வந்தோம், இனி கொஞ்சம் பார்க்க அழகாக இருக்கும் ஒரு நல்ல பாலைவனத்தில் வாழ முடிந்தால், கடல்போல் மணல் பரந்து கிடக்கும் ஒரு பாலைவனத்தைப் பார்க்க முடிந்தால் எப்படியிருக்கும்?" என்று நான் ஆசைப்பட்டதுண்டு.

ஆனால் இந்த ஒரு நாளுக்குள்ளேயே பாலைவனம் எங்களை மிரட்டிப்போட்டுவிட்டது. பாலைவனத்தைக் குறுக்காகக் கடந்தவர்களின் கதைகளைப் பற்றி நாம் எப்போதோ கேள்விப்பட்டிருக்கிறோம்; படித்திருக்கிறோம். அவர்கள் நிகழ்த்திய சாகசங்களைப் படித்து மெய்சிலிர்த்திருக்கிறோம்.

ஆனால் அவர்களிடமெல்லாம் பாலைவனத்தைக் கடக்க நல்ல வலிமையான ஒட்டகங்கள் இருந்தன. பாலைவனத்தின் மூலை முடுக்குகளையெல்லாம் உள்ளங்கை ரேகை போல் அறிந்திருக்கும் உள்ளூர்வாசிகள் அவர்களின் உதவிக்கு இருந்தனர். அவர்களின் பை நிறைய உணவும், தோல் பை தளும்ப குடி தண்ணீரும் இருந்தன.

இவையெதுவுமே இல்லாமல் இந்த பாலைவனத்தை நீந்திக் கடக்க முயன்றவர்களில் எவருமே தம் அனுவத்தை வெளியுலகுக்கு சொல்ல முடியால் இந்த பாலைவனத்துக்குள்ளேயே மண்ணோடு மண்ணாகிப் போயிருக்க வேண்டும். நாங்களும் அவர்களைப் போன்றவர்கள் தானோ...

அல்லா ! சாகசத்திற்காக பாலைவனத்திற்குள் கால் வைத்தவர்கள் அல்ல நாங்கள். பரிசோதனைக்காகவும் நாங்கள் வரவில்லை. உயிர் வாழ வேண்டும். அதற்காக மட்டும்தான்.

எங்கள் மீது அன்பு கொண்டவர்களை மீண்டுமொருமுறை காண, எங்களை நினைத்து அவர்கள் கன்னத்தில் அருவியாய் வழியும் கண்ணீரை ஒரு முறை துடைக்க. அதற்கான முயற்சியில் நாங்கள் வழி தவறி இங்கே வந்துவிட்டோம்.

“அல்லா ! இனி நீ மட்டுமே, உன் வலிமை மட்டுமே, உன் பாதை மட்டுமே எங்களுக்குப் பாதுகாப்பு. எங்களை இந்த பாலைவனத்துக் குள்யேளே போட்டு எரித்து கொன்று விடாதே...!”

# 34

மறுநாள் பொழுது புலர்வதற்கு முன்பாகவே இப்ராஹிம் காதரி எங்களைத் தட்டி எழுப்பினான்.

"வெயிலேறுவதற்கு முன்னால் நடக்க ஆரம்பித்து விடுவோம், வாருங்கள்."

மணலில் கையூன்றி எழுந்தபோது யானைக்கால் வந்ததுபோல் கால்கள் வீங்கிப் போயிருந்தன, நீரும் போட்டிருந்தது.

ஆனாலும் அதைப் பொருட்படுத்தாமல் கால்களை இழுத்தபடியே நாங்கள் மணலில் கால்புதைய நடக்க ஆரம்பித்தோம்.

கொஞ்ச தூரம்கூட போயிருக்க மாட்டோம், சூரியன் கிழக்குச் சரிவில் தலைகாட்டினான். அன்றும் மணலைச் சுட்டெரிப்பதுதான் அவன் திட்டம் என்று எங்களுக்குப் புரிந்தது.

விளிம்புகள் வெளிறிப்போன ஒரு நீலக் கூடையை எங்கள் தலைக்கு மேல் கவிழ்த்து வைத்திருப்பதுபோல் தோன்றியது. பாலைவனத்தின் எங்கோ ஒரு மூலையில் ஆரம்பிக்கும் அந்த கூடையின் ஒரு விளிம்பு மெதுவாக உயர்ந்து, உயர்ந்து என் தலைக்குமேல் வரும்போது அதி உச்சமாகி, பின் மெதுவாக தாழ்ந்து தாழ்ந்து பூமியின் மற்றொரு மூலையில் சென்று முடிகிறது.

அந்தக் கூடைக்குள் அடைக்கப்பட்ட கோழிக்குஞ்சுகள் நாங்கள். அதை எப்படியாவது நிமிர்த்திவிட்டு வெளியேறிவிட வேண்டும். அதற்கு அந்த விளிம்பு வரையாவது போயாக வேண்டுமே...!

அதுவோ எத்தனை நடந்தாலும் எட்டமுடியாத விளிம்பாக அல்லவா விரிந்து கொண்டிருந்தது. எத்தனை நடந்தாலும் முடிவைக் காண முடியாத ஒரு அனந்தம். நிலத்தையும், சுட்டெரிக்கும் சூரியனை யும் தவிர வேறெதுவுமே அங்கில்லை.

அதன்பின் மணல். வெறும் மணல் மட்டுமே. பீதியால் எனக்கு தொண்டை அடைத்தது.

"பயப்படுவதற்கு ஒன்றுமில்லை", இப்ராஹிம் எங்களுக்கு ஆறுதல் சொன்னான்.

"நம் கண்ணால் வெறும் இரண்டரை மைல் தொலைவு வரைதான் பார்க்க முடியும். ஒருவேளை அதற்கு பக்கத்தில்தான் நாம் தேடும் பாதை ஓடிக்கொண்டிருக்கலாம். அதனால் மனம் தளர வேண்டாம். நம்பிக்கையுடன் காலை எட்டிப்போடுங்கள். ஒரு தடவை களைத்து சரிந்துவிட்டால் பின் இந்த பகல் முழுவதும் நாம் இந்த வெயிலுக் குள்ளேயே கிடக்க வேண்டியதாகிவிடும். அதனால் முடிந்தமட்டும் நடக்கப் பாருங்கள். விரைவிலேயே நாம் ஒரு பாதுகாப்பான இடத்தை அடைந்தாக வேண்டும்."

நாங்கள் மீண்டும் நடக்க ஆரம்பித்தோம். கொஞ்ச தூரம் தான் போயிருப்போம். எங்கள் கண் முன்னால், எப்போதோ அந்த பாலை வனத்தில் ஓடியிருந்த ஒரு நதியின் உறைந்துபோன அடையாளங்களைப் பார்த்தோம்.

நான் ஆச்சரியத்தின் உச்சத்துக்கே போனேன். இந்த மணல் காட்டின் நடுவில், இந்த பாலைச் சூட்டின் அடி ஆழத்தில் ஒரு காலத் தில் நுங்கும் நுரையுமாக ஒரு நதி கரை புரண்டு ஓடிக்கொண்டிருந்தது என்பதை நினைக்கும் போதே எனக்குள் மயிர்க்கூச்செறிந்தது.

அங்கேயொரு நதி ஓடியிருந்ததற்கான அத்தனை அடையாளங் களும் அப்பட்டமாக இருந்தன. முன்பொருகாலத்தில் புராதன மனிதன் ஒருவன் இந்த நதிக்கரையில் வந்து நிற்பதாகவும், ஆற்றைக் கடக்கும் முயற்சியில் அவன் தண்ணீரில் அடித்துச் செல்லப்படுவ தாகவும் நான் கற்பனை செய்து பார்த்தேன்.

அந்த மனிதன் தண்ணீரில் மூழ்கி இறந்த அதே இடத்தில்தான் இப்போது நான் ஒரு துளி தண்ணீருக்காக தொண்டை வறள அலைகிறேன்.

ஒரே நதிக்கரைதான். ஆனால் கடந்த காலத்தின் புதிர் முடிச்சில் நிகழ்ந்ததாக கருதும் அந்த நிமிடத்துக்கும், இப்போதைய எனது நிலைக் கும்தான் எத்தனை தூரம்! அதற்கிடையே நிகழ்ந்த மாற்றங்கள் தான் எத்தனை... எத்தனை...?

அந்த நதி நீர் வற்றி மெல்ல வறள்வதையும், அதன் கரையில் வாழ்ந்திருந்த உயிர்த் தொகுதிகள் மெல்ல மடிந்து வீழ்வதையும் என்னால் பார்க்க முடிகிறது. அதன் கரையில் நின்ற பெருமரத்தின் கிளைகள் தண்ணீருக்காக ஆகாயத்தை நோக்கி அலறும் சத்தம் இப்போதும் என் காதுகளில் எதிரொலிக்கிறது.

காலமே... உன் முகம்தான் எத்தனை விசித்திரமானது!

எங்கள் நாக்கில் கடைசியாக ஒரு சொட்டு தண்ணீர் விழுந்து இரண்டு இரவுகளும், ஒன்றரை பகலும் கடந்து போயிருந்தது. தாகத்தாலும், களைப்பாலும் கண்கள் பஞ்சடையத் தொடங்கியிருந்தன.

அரை மயக்கத்தில் கால்கள் தள்ளாட நடந்து கொண்டிருந்தோம். இனிமேல் தாக்கு பிடிக்கவே முடியாது என்ற நிலைக்கு வந்துவிட்டோம்.

"தண்ணீர்... தண்ணீர்..." ஹக்கீம் அழத் தொடங்கினான்.

"அனாவசியமாக தண்ணீரை அள்ளிக் குடித்த பழக்கத்தால் வந்த வினை இது. ஆகாரமும் தண்ணீரும் இல்லாமல் ஒரு மனிதனால் பதிநான்கு நாட்கள்வரை எந்தவித கஷ்டமுமில்லாமல் உயிர் வாழ முடியும். அல்லாவை தொழுது விட்டு நடக்க பார்." இப்ராஹிம் கோபத்துடன் கர்ஜித்தான்.

ஆனால் ஹக்கீமோ வழிநெடுக "தண்ணீர்... தண்ணீர்..." என்று அரற்றிக் கொண்டே வந்தான்.

சற்று தொலைவுதான் நடந்திருப்போம், அவன் திடீரென்று என் கையைப் பலமாகப் பிடித்தான்.

"முடியலண்ணா... என்னால் இனி ஒரு அடி கூட எடுத்து வைக்க முடியாது. நீங்க நடங்க. நான் இங்கேயே கிடந்து விடுகிறேன்."

அதைக்கேட்டு நானும் ஹக்கீமைத் திட்டினேன்.

"ஹக்கீம்... சோர்ந்து விடாதே. இன்னும் கொஞ்ச தூரம்தான்... நட... அல்லாஹு அக்பர்! அல்லாஹு அக்பர்!" நான் அவனுக்குச் சொல்லிக் கொடுத்தேன்.

அவன் அதைத் திரும்பச் சொன்னான். "அல்லாஹு அக்பர்!"

அந்த அழைப்பு எங்களுக்கு ஏதோவொரு சக்தியைத் தந்தது. அந்த வேகத்தில் நாங்கள் மேலும் கொஞ்ச தூரம் நடந்தோம்.

ஆனாலும் சற்று நேரத்திற்கெல்லாம் எங்கள் உற்சாகம் மீண்டும் வறளத் தொடங்கியது. கால்கள் தள்ளாடின. அதற்கு மேலும் எங்களைச் சுமந்து செல்ல எங்கள் கால்களுக்கு வலுவில்லாமல் போய்விட்டது.

தன் களைப்பை அது வீக்கமாகவும், வேதனையாகவும் வெளிக் காட்டியது. மட்டுமல்ல மணல் சூடு தாங்காமல் காலில் அங்கங்கே வெடிப்புகளும் தோன்ற ஆரம்பித்தன. ஆனாலும் பல்லைக் கடித்த படியே நாங்கள் முன்னேறிக்கொண்டிருந்தோம்.

ஆனால் சற்று நேரத்திற்குள்ளேயே இனி எங்களால் ஒரு அடி கூட எடுத்து வைக்க முடியாது என்ற நிலை வந்தபோது, பீதியால் நாங்கள் நடுங்கினோம்.

சற்று நேரத்திற்கெல்லாம் ஹக்கீம் மயங்கி தரையில் சரிந்தான்.

அவன் விழக் காத்திருந்தவனைப்போல நானும் 'தொபீர்' என்று அவன் பக்கத்தில் விழுந்தேன்.

இப்ராஹிம் எங்கள் மீது கோபப்பட்டான். "உட்காராதீர்கள். எழுந்து வாருங்கள். இது உங்களை மேலும் சோர்வடையவே செய்யும். இதனால் உங்கள் களைப்பு ஒருபோதுமே தீராது. இது உங்கள் உடம்பிலுள்ள கடைசி சொட்டு தண்ணீரையும் உறிஞ்சி யெடுத்து விடும். மணலில்

கிடந்து இப்படி வறுபடாமல் சற்றே பொறுமையுடன் காத்திருங்கள். இன்னும் சற்று நேரத்தில் மணல் குளிர்ந்துவிடும். பாலைவனம்தான் வெகு சீக்கிரத்திலேயே குளிர்ந்துவிடுமே! அப்போது தாராளமாக படுத்துக் கொள்ளுங்கள். இதுவரை நாம் பட்ட கஷ்டங்கள் எதுவும் வீணாகிவிடக்கூடாது. இன்னும் கொஞ்ச நேரம்தான்..." இப்ராஹிம் கெஞ்சினான்.

"நீ போடா துரோகி...!" ஹக்கீம் கோபத்துடன் முகத்தில் அறைந்து கொண்டான்.

"நீ எங்களைக் கொல்லத்தான் இங்கே கூட்டிக்கொண்டு வந்தாயா? இதுதான் நீ எங்களுக்கு தந்த வாக்குறுதியா? இதைவிட அந்த மஸரா எத்தனையோ மேல். இதை விடவும் எத்தனையோ நல்லவன் அந்த அர்பாபு. என்னால் முடியவில்லை. நான் இங்கேயே கிடந்து சாகப் போகிறேன். நீ வேண்டுமானால் தப்பித்து போ..."

அந்த இரண்டு நாள் பயணத்திற்கிடையில் முதன்முதலாக இப்ராஹிம் காதரியின் கண்கள் நிறைவதை நான் பார்த்தேன். எதுவும் செய்ய இயலாத கையற்ற நிலையில் அந்த பாலைவன சுடு மணலில் முழந்தாளிட்டு அவன் வானத்தை நோக்கி தன் கைகளிரண்டையும் அகல விரித்து பிராத்தனை செய்யத் தொடங்கினான்.

பாலைவனம் தகித்துக் கொண்டிருந்தது. அது அல்லாவின் எண்ணெய்ச் சட்டிக்குள் கிடப்பதாகவே எனக்குத் தோன்றியது. ஆனாலும் அத்தனை தொலைவு நடந்த களைப்புக்கு அந்த படுக்கை ஆசுவாசமாகத்தான் இருந்தது.

ஆரம்பத்தில் சற்று நேரம் அந்த சூடு தாங்க முடியாமல் இருந்தது. வானிலும் சூடு, மணலிலும் சூடு. ஆனால் சற்று நேரமாக அப்படியே கிடந்தபோது, உண்மையாகச் சொன்னால் அந்த சூடு எனக்கு இதமாக இருப்பதாகவே தோன்றியது. அப்போது நானும், பாலைவனமும், வெயிலும் ஒரே சூட்டில் தகித்துக் கொண்டிருந்தோம்.

இன்னமும் அடங்காமலிருந்தது இந்த சனியன் பிடித்த தாகம் மட்டும்தான். அதை விரட்ட ஒரு வழியும் தெரியவில்லை. அப்போது வாய்க்குள்ளிருந்த கடைசி துளி உமிழ் நீரும் அடித்தொண்டையை விட்டு வறண்டு போயிருந்தது.

ஓட ஆரம்பிப்பதற்கு முன்னால் குப்பியில் கொஞ்சம் தண்ணீர் எடுத்துவர மறந்து போனோமே என்று நான் புலம்பினேன். சிந்தனையனைத்தும் வடிந்துபோன ஒரு கணத்தில் அல்லவா நாங்கள் ஓடத் தொடங்கியிருந்தோம்... இனி என்ன செய்வது? வருவது வரட்டும்.

இப்ராஹிம் சொன்னது உண்மைதானென்று விரைவிலேயே எங்களுக்குப் புரிந்து போனது. உடம்பின் சோர்வு கூடிக்கொண்டிருந்ததேயொழிய, களைப்பு தீரவேயில்லை. மட்டுமல்ல அது என்னை மெதுவாக மயக்க நிலைக்கு இழுத்துச் செல்ல ஆரம்பித்தது. எனக்கு கண்கள் இருட்ட ஆரம்பித்தது. தலைச்சுற்றியது. இரண்டு தடவை

வாந்தியெடுத்தேன்.

சற்று நேரத்தில் ஹக்கீமும் வாந்தியெடுத்தான்.

இப்ராஹிம் தான் போட்டிருந்த அங்கியைக் கழற்றி எங்கள் தலைக்கு மேல் ஒரு நிழல் பந்தல் போட முயன்றான்.

ஆனால் அவன் முயற்சி பலிக்கவில்லை.

அவன் எங்களை தூக்கி வைக்க முயன்றான், முடியவில்லை. நாங்கள் மயங்கிச் சரிந்துகொண்டிருந்தோம். இரண்டு அனாதைப் பிணங்களைப்போல நானும் ஹக்கீம் அந்த பாலைவனத்தில் வாடிப் போய்க் கிடந்தோம்.

இப்ராஹிம் நினைத்திருந்தால் எங்களை அப்படியே விட்டுவிட்டு அவன் மட்டும் ஓடிப்போயிருக்கலாம். ஆனால் அவனோ இரவு நாங்கள் கண் திறக்கும் வரையில் எங்கள் பக்கத்திலேயே காவலாக உட்கார்ந்திருந்தான்.

ராத்திரி கண் திறக்கும்போதே தாகத்தால் என் தொண்டை கமறியது. தண்ணீருக்கு எங்கே போவது?

"அல்லா... ஊரில் நான் எவ்வளவு தண்ணீரை வீணடித்திருக்கிறேன். இப்போது ஒரு சொட்டு தண்ணீருக்காக ஏங்குகிறேனே. என் தேசத்தின் மகத்துவம் இப்போதுதான் எனக்குப் புரிகிறது. அந்த ஊதாரித்தனத் துக்குரிய தண்டனை தானோ இது... அல்லா! என்னை மன்னியுங்கள்."

தண்ணீர்... அது எத்தனை விலைமதிப்பானது என்பதை இப்போது தான் நான் புரிந்து கொண்டேன்.

# 35

மொழி, மத வேற்றுமையில்லாமல் எல்லா எழுத்தாளர்களுமே பாலைவனத்தை ஞானத்தின் உறைவிடமாகவும், ஆன்ம உணர்வின் தோரணவாயிலாகவுமே வர்ணித்திருக்கிறார்கள்.

பாலைவன வாழ்க்கையும், அலைச்சலும் தலைக்குள் 'ஞான வெடிப்பை' சிருஷ்டிக்கின்றன என்று அவர்கள் சொல்கிறார்கள். ஆனால் இந்தப் பாலைவனமோ எனக்குள் அப்படிப்பட்ட எந்த விதமான உணர்வையும் தரவில்லை.

மூன்று வருடங்களுக்குமேல் நான் பாலைவனத்தில் இருந்திருக் கிறேன். ஒரு தடவை அதை நீந்திக் கடக்கவும் முயற்சி செய்திருக்கிறேன். அப்போதெல்லாம் துயரத்தையும், நிராசையையும் தவிர பாலைவனம் எனக்கு வேறொன்றையும் தரவில்லை.

உண்மையாகவே ஆன்ம ஞானம் தேடி வருபவர்களுக்கு மட்டும் தான் பாலைவனம் அதை பரிசளிக்குமோ என்னவோ? நானோ அப்படி எதைத் தேடியோ வந்தவனில்லையே; எப்படியோ வந்து அகப்பட்டுக் கொண்டவன். அதனால் எனக்கு ஞானம் தேவையில்லை என்று அது முடிவு செய்திருக்கும்.

அதற்கு மேலும் இரண்டு தினங்கள் நாங்கள் திக்கு தெரியாமல் அந்த பாலைவனத்திலேயே அங்குமிங்குமாக அலைந்து கொண்டி ருந்தோம். எங்கும் போய்ச் சேரவில்லை; எங்களைக் காப்பாற்ற எவரும் வரவுமில்லை. நாங்கள் களைத்துப்போனோம். பழுத்த மணலில் நடந்து நடந்து கால் பாதங்கள் வெடித்துவிட்டன. முட்டுவரை நீர் ஏறிப்போயிருந்தது. தாங்க முடியாத நீற்றல். வலி, சுள்ளென்று தரிப்பு.

நேரம் நடுப்பகல். அதுவரை அமைதியாக நடந்து கொண்டிருந்த ஹக்கீம் திடீரென்று பைத்தியம் பிடித்தவன் போல் "தண்ணீர்... தண்ணீர்..." என்று அலறியபடியே முன்னோக்கி ஓடினான்.

'தண்ணீரா... கடவுளே இங்கேயா...!' மனதில் ஒரு அல்ப நம்பிக்கை துளிர்விட, நான் அவன் ஓடிய திசையை ஆர்வத்துடன் பார்த்தேன்.

ஆனால் அதுவொரு சாதாரண கானல் நீர்தான் என்று அத்தனை நாள் பாலைவன வாழ்க்கையால் என்னால் வெகு எளிதில் யூகிக்க முடிந்தது.

நான் அவனை நிற்கும்படிச் சொன்னேன்.

ஆனால் அவனோ அதை காதிலேயே வாங்காமல், பைத்தியம் பிடித்தவன் போல தண்ணீர்... தண்ணீர்... என்று அலறியபடியே ஓடிக் கொண்டேயிருந்தான்.

நானும் இப்ராஹிமும் ஓடிப்போய் அவனைப் பிடித்து நிறுத்தினோம்.

நாங்கள் பார்த்தபோது... கடவுளே, அவன் வாயிலிருந்து நுரையும் பதையுமாக வழிந்து கொண்டிருந்தது. மூக்கிலிருந்து இரத்தம் வேறு. என் சட்டையால் நான் அதைத் துடைத்தெடுத்தேன். அவனை வற்புறுத்தி தரையில் உட்கார வைத்தோம். தனக்கு தலை சுற்றுவதாக அவன் எப்போதோ என்னிடம் சொல்லியிருந்தான்.

சற்று நேரத்திலேயே அவன் ஏதேதோ சேஷ்டைகள் செய்ய ஆரம்பித்தான், பேய் பிடித்தவன் போல. அதற்கிடையே திடீரென்று துள்ளியெழுந்தவன் மணல் சிதற மீண்டும் ஓடத் தொடங்கினான். கொஞ்ச தூரம்தான் ஓடியிருப்பான், தொபீர் என்று தலைகுப்புற மணலில் விழுந்தான். பின்பு தொண்டை வெடிக்க கதறி அழுதான். அவனைத் தூக்க போன எங்களை அடிக்க வந்தான். அவனுடைய சேஷ்டைகள் பைத்தியமாக மாறத் தொடங்கியிருந்தது.

அப்போது அவன் தரையிலிருந்த சுடு மணலை அள்ளி தன் வாய்க்குள் திணிக்கத் தொடங்கினான். நானும் இப்ராஹிமும் அதைத் தடுக்க எவ்வளவோ முயன்றோம். ஆனால் அவனோ வெறி பிடித்தவனைபோல் எங்களை விலக்கிக் கொண்டு, சூடு மணலை அள்ளி அள்ளி வாய்க்குள் திணித்துக் கொண்டேயிருந்தான். சற்று நேரத்திற்கெல்லாம் குடல் சரிய அனைத்தையும் வாந்தியெடுத்தான்... எதுவும் செய்ய இயலாமல் நாங்கள் திகைத்துப் போய் நின்றோம்.

வாந்தியெடுத்து வாந்தியெடுத்து ஒரு கட்டத்தில் ஹக்கீமின் வாயிலிருந்து இரத்தம் கொட்ட ஆரம்பித்தது. அவன் அடிபட்ட பாம்பைப்போல் மணலில் வளைந்து நெளிந்தான். அவன் கண்கள் உப்பி வெளியே பிதுங்கின. அவன் மூக்கிலும் வாயிலுமிருந்து நுரையும், பதையுமாக வழிந்து கொண்டிருந்தது. நுரை செஞ்சிவப்பாக இருந்தது.

"இப்ராஹிம்... ஏதாவது செய்... அவன் என் ஹக்கீம்... என் பிரிய ஹக்கீம். அவன் இப்போ செத்துப் போய்விடுவான். இப்ராஹிம்... ஏதாவது செய்" நான் கெஞ்சினேன்.

"அல்லா... என் இறைவனே, அண்ட சராசரங்களையும் காப்பவனே, என்னுடைய ஹக்கீமுக்கு எதுவும் ஆகிவிடக் கூடாது... அவனை எப்படியாவது காப்பாற்றி விடு..." நான் நெஞ்சிலடித்தபடியே கதறினேன்.

அண்ணாந்து வானத்தைப் பார்த்தேன். சுட்டெரிக்கும் சூரியன் மட்டுமே. நான் அழுது கொண்டே இப்ராஹிமை நோக்கி ஓடினேன்.

“இப்ராஹிம்...! ஏதாவது செய்.”

என் கதறலைக் கேட்ட பிறகும் நிச்சலனமாக இருந்த இப்ராஹிமை நான் கோபத்தில் அடித்து உதைத்தேன். அவன் முகத்தில் காறித் துப்பினேன். சபித்தேன்.

“ஹக்கீமை அல்லாவின் விருப்பத்துக்கு விட்டுக் கொடுப்பதைத் தவிர நம்மால் வேறொன்றும் செய்யமுடியாது, நஜீப்...” அவன் ஈனஸ்வரத்தில் முனங்கினான்.

அதுவரையில் நான் அப்படியொரு இப்ராஹிமை பார்த்ததே யில்லை.

என் பொறி கலங்கியது... நான் கண்களை மூடிக்கொண்டு தரையில் முழந்தாளிட்டேன்.

உயிருக்காக துடித்துக் கொண்டிருந்த ஹக்கீமை என்னால் பார்க்க முடியவில்லை. அவனது முக்கலும் முனகலும் என் நெஞ்சை அறுத்தது. கொஞ்ச நேரத்திற்கெல்லாம் அவனிடமிருந்த சத்தமெல்லாம் அடங்கியது.

நான் பயத்துடன் மெதுவாக அவனைநோக்கி திரும்பினேன். அவன் என்னையே வெறித்துக் கொண்டிருந்தான். ஏதோ சொல்ல முயற்சிக்கிறான். நான் அவனை நோக்கி ஓடினேன்.

“என் செல்லமே ஹக்கீம்... ஒண்ணுமில்லடா உனக்கு...”

நான் அவன் தலையை எடுத்து என் மடிமேல் வைத்தேன். அவன் கண்கள் ஒருமுறை அசைந்தது. பின் சட்டென்று அது நிச்சலனமானது.

என் தலைக்குள் ஒரே இருட்டு. என் உடல் சோர்ந்தது. நான் மயங்கிச் சரிந்தேன்.

கண் திறக்கும்போது நான் இப்ராஹிம் காதரியின் தோளில் ஒரு வேதாளத்தைப் போல தொங்கிக்கொண்டிருக்கிறேன்.

பாலைவனமோ பெருஞ்சீற்றத்துடன் அனலை வாரி வீசிக் கொண்டிருந்தது. சொல்லப்போனால் தீ நிரப்பிய மணல் காற்று. ஒரு அடி கூட எடுத்து வைக்க முடியாத அவஸ்தை. ஆனால் இப்ராஹிமோ இவையெதையுமே பொருட்படுத்தாமல் என்னையும் தூக்கிக் கொண்டு அதி வேகத்தில் ஓடிக் கொண்டிருக்கிறான். அவன் ஏன் இப்படி பைத்தியம் பிடித்தது போல ஓடுகிறான் என்று எனக்கு புரியவேயில்லை. ஆனாலும் அந்த தோளிலிருந்து இறங்க முடியாத அளவுக்கு நான் துவண்டுபோயிருந்தேன்.

அப்போது திடீரென்று என் கண்ணுக்கு முன்னாலிருந்த மணல் மேட்டுக்கு அப்பால் ஏதோவொரு சலனம் தென்பட்டது.

நான் ஆச்சரியத்துடன் அதையே உற்றுப் பார்த்தேன். சட்டென்று எனக்கு பிடி கிடைத்தது. சலனம் மணல் மேட்டுக்கு அப்பாலில்லை; மணல் மேடே ஆடுகிறது.

ஆழ்கடலிலிருந்து ஒரு பேரலை உயர்ந்தெழும்பி வருவதைப்போல, ஒரு மணல் அலை பாலைவனத்தின் விளிம்பிலிருந்து ஆர்ப்பரித்து வந்து கொண்டிருந்தது. அதற்குப் பின்னால் மேலும் பல மணல் சிற்றலைகள்.

நான் ஏதோவொரு ஒரு கடற்கரையில் நிற்பதாகத்தான் அப்போது எனக்குத் தோன்றியது.

அது சற்று முன்பு வரை நாங்கள் பார்த்திருந்த எல்லா காட்சிகளையும் அப்படியே புரட்டிப் போட்டபடியே முன்னேறிக்கொண்டிருந்தது.

மணல் சிகரங்கள் எங்கள் கண் முன்னால் உடைந்து வீழ்கின்றன. சில மேடுகள் காற்றோடு காற்றாக மறைந்து போகின்றன.

"கண்களை இறுக மூடிக்கொள்." இப்ராஹம் அலறினான்.

அவன் என்னை கீழே இறக்கிவிட்டு தன் மார்பில் என்னை சாய்த்து நிறுத்தினான்.

"அசையாதே!"

நாங்கள் ஒருவரையொருவர் கட்டிப்பிடித்துக் கொண்டு அப்படியே நின்றோம்.

ஒரு சில வினாடிகளில் அந்த மணல் அலையின் நுனிநாக்கு எங்களைத் தீண்டியது. முகம், கை, கால் என்று உடம்பு முழுவதையும் அனல் பொரியும் மணல் துகள்கள் சுட்டெரித்துக் கொண்டு போவதை வேதனையுடன் அனுபவித்தேன்.

எத்தனை நேரமாக அந்த மண் குகையில், அப்படியே நின்று கொண்டிருந்தோம் எனத் தெரியவில்லை. காற்று அடங்கிவிட்டது எனத் தோன்றியபோதுதான் நான் மெதுவாகக் கண்களைத் திறந்தேன்.

என்னைக் கட்டி பிடித்தபடி ஒரு மண் சிலை! சுற்றுப்புறம் முழுவதுமே கலைந்து சிவந்து போயிருந்தது. எதையுமே பார்க்க முடியவில்லை. எங்கும் மணல் மூடிக் கிடந்தது. நாங்களிருவரும் இடுப்புவரை மண்ணுக்குள் புதைந்து போயிருந்தோம்.

அதை விடவும் என்னை வியப்பிலாழ்த்தியது என் கண்முன்னாலிருந்த ஒரு மணல் குன்று அப்படியே துடைத்து எடுக்கப்பட்டிருந்ததுதான். அதற்கு பதிலாக நாங்கள் ஓடி வந்த இடத்தில் இப்போது ஒரு புதிய மணல் குன்று உயர்ந்து நிற்கிறது.

துயரம் தாங்காமல் நான் வாய்விட்டு அழுதேன். எனது ஹக்கீமை அந்த மணல் ம்லை அப்படியே கபளீகரம் செய்து விட்டிருந்தது.

# 36

பெரும்பாடுபட்டு அந்த மணல் குவியலிலிருந்து வெளியே வந்த இப்ராஹிம் என்னையும் ஒருவிதமாக அதிலிருந்து வெளியே எடுத்தான். அவன் மறுபடியும் என்னைத் தூக்கிக் கொண்டு நடக்க முயன்றபோது, நான் அவனைத் தடுத்தேன்.

“என்னை இங்கேயே விட்டுவிடு இப்ராஹிம். நீயாவது தப்பித்து போ... ஹக்கீம் இல்லாமல் நான் எங்கேயும் வரமாட்டேன். எனக்கு தப்பிக்க வேண்டாம். நாங்களிருவரும் ஒன்றாகச் சேர்ந்து வந்தவர்கள். இப்போது அவனில்லாமல் என்னால் ஊருக்குத் திரும்பிப் போக முடியாது.

அவனுடைய அம்மாவின் கேள்விக்கு நான் என்ன பதில் சொல்வேன். அவனுடைய சகோதரியின் பார்வை என் நெஞ்சை அறுக்குமே.

அவர்களுக்கெல்லாம் நான் என்ன பதில் சொல்வேன்? என்னை இங்கேயே விட்டுவிடு. நானும் ஹக்கீம் இருக்கும் இடத்துக்கே போய்ச் சேர்ந்து விடுகிறேன்...”

நான் ஹக்கீம் புதையுண்ட மணல் குன்றை நோக்கி ஓட ஆரம்பித்தேன்.

“உன்னை இங்கே தொலைத்துவிட்டு போவதற்காகவா அல்லா என்னை அந்த மஸராவுக்கு அனுப்பி வைத்தார்? ஹக்கீமைத்தான் என்னால் காப்பாற்ற முடியவில்லை. ஆனால் இப்போது என் உயிரைக் கொடுத்தாவது உன்னை நான் காப்பாற்றுவேன்.”

வலுக்கட்டாயமாக அவன் என்னை தோளில் தூக்கிக் கொண்டான். அவனைத் தடுக்கும் சக்தி எனக்கில்லை. வாடிய பச்சிலைத் தண்டு போல் நான் அவனுடைய தோளில் துவண்டு கிடந்தேன். சிறு குழந்தையைப் போல் என் கண்ணிலிருந்து கண்ணீர் வழிந்தது.

இப்ராஹிமோ எதையுமே பொருட்படுத்தாமல் முன்னோக்கி நடக்கத் தொடங்கினான்.

பசி, தாகம், பீதி. கண்ணுக்குள் ஊசிக் குத்துவது போல் வலி. என் இதயத் துடிப்பே எனக்கு தெளிவாகக் கேட்டது. நேரம் செல்லச் செல்ல அது குறைந்து கொண்டே வந்தது. என் சுவாசமும் மட்டுப்படத் தொடங்கியது. நாக்கோ அசைக்க முடியாமல் வறண்டு போய்க் கிடந்தது.

என்னைச் சுற்றிலும் இருள். வெறும் இருள் மட்டுமே. தலையிலிருந்து சூடு பறக்கும் ஆவி வெளியேறிக் கொண்டிருக்கிறது. அது என் நினைவை மேலும் கலங்கடித்தது. ஹக்கீமின் அவஸ்தையை நோக்கி நானும் மெதுவாகத் தள்ளப்பட்டுக் கொண்டிருக்கிறேன்.

இன்னும் கொஞ்ச நேரம்தான். விடைபெறும் வேளை நெருங்கிக் கொண்டிருக்கிறது.

என் மீது அன்பு செலுத்தியவர்களையும், நான் விரும்பியவர் களையும் ஒரு முறை நினைத்துப் பார்க்க முயன்றேன்.

உம்மா, ஸைனு, ஹக்கீம் ... ம்...ஹூம்... எவருமே என் மூளைக் குள்ளிருந்து வெளிவரவில்லை.

ஆனால் மஸராவிலிருந்த ஆடுகள் ஒவ்வொன்றாக என் கண் முன்னால் வரத் தொடங்கின. நபீல், கசாப்பு ராவுத்தர், புல்லுக்காரி ரமணி, மேரி மைமுனா, இண்டிப்போக்கர், நண்டு ராகவன், பருப்பு விஜயன், சக்கி, அம்மணி, கௌஸூ, ரஃபத்...

மனிதரை விடவும் என்மீது அதிகமாக அன்பு காட்டியவர்கள் அவர்கள்தான்.

அவர்களெல்லோரும் என்னை வழியனுப்பி வைத்தார்கள்...

மாலை போய் இரவு வந்தது.

நாங்கள் சோர்வுடன் மணலில் கிடந்தோம்.

பரஸ்பரம் ஒரு வார்த்தைகூட பேசிக் கொள்ளாமல். ஒரு முழு இரவு அப்படியே எங்களைக் கடந்து போனது. அந்த இரவை நான் தாண்டுவேனா என்ற நம்பிக்கை எனக்கில்லை. ஆனால் அந்த இரவையும் நான் கடந்தேன். மறுநாள் காலையிலும் நான் உயிரோடி யிருந்தேன்.

# 37

காற்று ஓய்ந்து, அதிகாலை அமைதியாக இருந்தது.

கண் திறந்தபோது எதிரே மணல் மேடுகள். அவை அலைகளற்ற கடல்போல அமைதியாகக் கிடந்தது.

நாங்கள் மெதுவாக எழுந்தோம். பரஸ்பரம் ஒரு வார்த்தைகூட பேசிக்கொள்ளவில்லை.

எதிர்பார்ப்போ, ஆசையோ எதுவுமில்லை; எல்லாம் நசித்துப் போன ஒரு நிர்விகார நிலை.

இனி எங்காவது ஓரிடத்தில் போய் விழுந்தால் போதும்... விழ வேண்டும் என்பதுகூட இல்லை. தாமதிக்காமல் மடிந்து போய்விட வேண்டும். இந்த தாகத்தையும், வெப்பத்தையும் இனி என்னால் தங்கவே முடியாது.

“ஏ அல்லா...! ஹக்கீமை இந்த நரகத்திலிருந்து விடுவித்தது போல என்னையும் இங்கிருந்து வேகமாக அழைத்துப் போய்விடு...”

நாங்கள் மணலில் கால் புதைய மெதுவாக நடக்க ஆரம்பித்தோம். என்னால் தரையில் கால் வைக்கவே முடியவில்லை. நான் பாதி இறந்தவனைப் போலாகியிருந்தேன்.

“உன்னை என் தோளில் தூக்கிக் கொள்கிறேன்.” இப்ராஹிம் எத்தனையோ தடவை சொல்லிப் பார்த்தான். ஆனால் நான் அதற்கு சம்மதிக்கவேயில்லை.

எனக்குத் தெரியும், இந்த பகல்தான் என்னுடைய கடைசி பகல் என்று. அந்த அளவுக்குத்தான் என்னிடம் உயிர் எஞ்சியிருக்கிறது. நடந்தால் வெகு சீக்கிரத்திலேயே மடிந்துவிடலாம் என்னும் ஆசையில் தான் நான் நடக்க ஆரம்பித்தேன்.

கொஞ்ச தூரம்தான் நடந்திருப்போம்... மணலில் ஏதோ உயிரினங்களின் கால் தடங்கள்; எவருக்குமே தெரியாமல் இரவில் காலாற நடந்ததன் அடையாளங்கள்!

அவை எங்கே செல்கின்றன என்று இப்ராஹிம் அதன் பின்னாலேயே நடந்து போய் பார்த்தான். அவையோ நீண்டு, நீண்டு எங்கோ சூனியத்தை நோக்கிப்போனது. அதுதான் இந்தப் பாலைவனத்தின் மிக கடுமையான பகுதி என்றுணர்ந்த இப்ராஹிம், என்னை அதற்கு எதிர்திசையில் போகுமாறு சொன்னான்.

நேரம் உச்சிப்பகல்.

அப்போது திடீரென்று எங்கள் முன்னால் ஒரு பல்லி! நல்ல கொழுத்த பல்லி!

"பல்லி!" அலறிக் கொண்டே இப்ராஹிம் அதன் பின்னால் ஓடினான்.

ஒரு பல்லியிடம் அதிசயப்பட அப்படி என்ன இருக்கிறது?"

நான் எதுவுமே புரியாமல் அவன் ஓடுவதையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தேன். அரை மயக்கம்... எந்த நிமிடமும் கீழே விழுந்து விடலாம்...

"நஜீப் இங்கே பார்த்தாயா...? உண்மையிலேயே அதுவொரு பல்லிதான்." இப்ராஹிமின் குரல் படு உற்சாகத்துடனிருந்தது.

"அதற்கென்ன இப்போது...?" நான் புருவத்தை சுருக்கினேன்.

"பாலைவனத்தில் ஒரு பல்லி என்றால்.. உனக்குத் தெரியுமா நஜீப்-பக்கத்தில் எங்கோ ஓரிடத்தில் தண்ணீர் அம்சம் இருக்கிறது என்று அர்த்தம்." அவன் சந்தோஷத்தில் அலறினான்.

"உண்மையாகவா . . .?" நான் எனது கடைசி நம்பிக்கைக்குள் கண் திறந்தேன்.

"ஆமாம்..." அவன் தலையாட்டினான்.

"இனி மேல்தான் நாம் மிகுந்த எச்சரிக்கையாக இருக்க வேண்டும். நமது ஒவ்வொரு சுவடும் மிகக் கவனமாக இருக்கவேண்டும். மறுபடியும் நாம் பாலைவனத்துக்குள்ளேயே திரும்பிப் போய்விடக்கூடாது. இது நமக்கு கிடைத்துள்ள கடைசி வாய்ப்பு." இப்ராஹிம் அழுத்தமாகச் சொன்னான்.

அதன்பின் நாங்கள் மிகவும் கவனமாக நடந்தோம். ஒவ்வொரு அடியெடுத்து வைக்கும் போதும் நாங்கள் பல்லிகளைத் தேடினோம். அவை தாவிப்போன திசையைப் பார்த்து நாங்களும் நடந்தோம். அப்படியே நடந்து நடந்து நாங்கள் ஒரு மணல் குன்றின் உச்சியை அடைந்தபோது...

பளீரென்று தெரிந்தது–

தொலைவில் பச்சைத் தலைப்பாக்கள்!

பேரீச்சை மரக் கூட்டங்கள்...

சின்னஞ்சிறு காட்டுச் செடிகள்...

தண்ணீரின் அடையாளங்கள்...

அதன்பின் நான் ஓடினேனா அல்லது வானத்தில் பறந்தேனா என்றே தெரியவில்லை. என்னிடமிருந்த சோர்வெல்லாம் எங்கோ போய் மறைந்துவிட்டன. யானைக்கால் வந்ததுபோல் வீங்கியிருந்த என் கால்களையும் இழுத்துக் கொண்டே நான் அதை நோக்கி அசுரத்தனமாக ஓடினேன். கால்கள் வெடித்து இரத்தம் வழிந்து கொண்டிருந்தது. நானோ எதையும் பொருட்படுத்தும் நிலையில் இல்லை.

இப்ராஹிம் காதரி எனக்கு பின்னால் வந்து கொண்டிருந்தான். மரணத்துக்கு ஆசைப்பட்ட அந்த கணத்திலும் என் உணர்வுக்குள் ஒன்றிப்போயிருந்த உயிராசையை நினைத்து இப்போதும் எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது.

ஒரு வேளை அந்த ஆசைதான் என் உயிரை அதன் கடைசி விளிம்பிலும் பிடித்து வைத்திருந்ததோ?

அங்கு எங்கேயோ ஓரிடத்தில் தண்ணீர் அம்சம் இருக்கிறது என்று என் உள்ளுணர்வு சொல்லியது.

படர்ந்து கிடந்த செடிகளுக்கிடையே நான் பைத்தியம் பிடித்தவன் போல் ஓடினேன்.

என் தலையைச் சுற்றிலும் ஓராயிரம் தேனீக்கள் பறப்பது போலொரு முழக்கம். என் கண்களிலிருந்து புகை வளையங்கள் வெளியேறிக் கொண்டிருக்கின்றன.

ஹக்கீம் தன்னுடைய கடைசி நிமிடங்களில் காட்டிய சேஷ்டைகளின் பொருள் இப்போதுதான் எனக்குப் புரிபடத் தொடங்கியிருக்கிறது.

தாகத்தால் பைத்தியமாவது.

நான் அதை நோக்கி வேகமாக போய்க் கொண்டிருக்கிறேன்.

இலக்கில்லாமல் நான் அங்குமிங்குமாக ஓடிக் கொண்டிருந்தேன்.

ஆனால், இப்ராஹிமோ ஒவ்வொரு அம்சத்தையும் மிக கவனமாக பார்த்தபடியே வந்து கொண்டிருந்தான். எங்கே பச்சை அதிகமிருக்கிறது என்று பார்த்தான்; மண்ணில் எங்கே நனைவு இருக்கிறது என்று தேடினான்.

கடைசியில்... அவன் கண்டுபிடித்தே விட்டான் – செடிக் கூட்டங் களுக்கிடையில் ஒரு சின்னஞ்சிறிய தண்ணீர்க் குட்டை!

அவன் கைகளை அகலமாக விரித்துக் கொண்டு ஆகாயத்தை நோக்கி அலறினான்.

"அல்லாஹ் அக்பர்! தண்ணீர்! தண்ணீர்! தண்ணீர்! அல்லாஹ் அக்பர்!"

தலைக்குள் தீ மூண்டிருந்த என் காதுக்குள் அந்த குரல் கேட்டது

தான் தாமதம், நான் குரல் வந்த திசையை நோக்கி வெறி பிடித்தவன் போல் பாய்ந்தேன்.

அங்கே... இப்போது நிஜமாகவே என் கண் முன்னால் தண்ணீர். செடிகளுக்கிடையே ஒரு சிறிய ஊற்று!

நான் அந்த குட்டையை நோக்கி பாய்ந்தேன்.

ஆனால் இப்ராஹிமோ என்னை சட்டென்று பின்னால் இழுத்து தள்ளினான்.

"குடிக்காதே" என்று அலறினான்.

என் கண்கள் கோபத்தால் கொப்பளித்தது. என் இரத்தத்தில் வெறி ஏறியது. நான் என் முழு சக்தியையும் ஒன்று திரட்டி அவன் பிடரியில் ஓங்கி ஒரு அறை விட்டேன்.

எதிர்பாராத அந்த அடியால் அவன் திகைத்துப் போனான். நான் தண்ணீரை நோக்கி ஓடினேன்.

சட்டென்று இப்ராஹிம் என் காலைப்பிடித்து தரதரவென்று மணலில் இழுத்துக் கொண்டு போய் என்னை, மணலில் அழுத்தி பிடித்துக் கொண்டான்.

"சீ... துரோகி! என்ன விடுடா. தாகம் பொறுக்கமுடியவில்லை, எனக்கு தண்ணீர் குடிக்கணும்." நான் சீறினேன்.

ஆனால் அவன் தன் பிடியை விடவில்லை. நான் கதறினேன். "கடவுளே... நீ ஏன் எனக்கு இப்படி ஆசை காட்டுகிறாய். என்னை தண்ணீர் குடிக்க விடாத இந்த துரோகியை நீ மின்னலை அனுப்பி கொன்று விடு. இந்த துரோகியுடனா நான் இத்தனை நாட்களாக நடந்து வந்தேன்.

இவன் முதலில் ஹக்கீமைக் கொன்றான். இப்போது என்னையும் கொல்லப்போகிறான். அந்த ஊற்று நீர் முழுவதையும் தான் ஒருவனே குடித்து தீர்க்கப் போகிறான். நாக்கை நனைக்க எனக்கு ஒரு சொட்டு தண்ணீர்கூட கிடைக்காது. நான் சாகும் முன்னால் ஒருமுறையாவது கொஞ்சம் தண்ணீர் குடித்து பார்க்கணும். அதன் ருசி எப்படியிருக்கும் என்று எனக்கு ஒரு தடவையாவது குடித்துப் பார்க்கணும்." நான் அலறினேன். மணலில் கிடந்து துடித்தேன்.

அப்போது இப்ராஹிம் மெதுவாக அந்த தண்ணீரை நோக்கி நடக்க ஆரம்பித்தான். அவனுடன் எழுந்து போக என் உடம்பில் தெம்பில்லை.

ஆசை ஆசையாக கிடைத்த தண்ணீர் முழுவதையும் அவன் ஒருவனே குடித்து தீர்ப்பதை பார்க்க சகிக்காமல் நான் என் கண்களை மூடிக் கொண்டேன்.

அப்போது, என்ன இது... சட்டென்று என் உதட்டில் ஒரு ஈரத் துளி.

நான் கண்களைத் திறந்து பார்த்தேன்.

என் பக்கத்தில் இப்ராஹிம்.

அவன் கையில் நனைந்த ஒரு துணித் துண்டு.

அவன் அதை மிக மெதுவாக என் உதட்டில் வைக்கிறான்.

நான் ஆசையுடன் வாயை அகலமாகத் திறந்தேன்.

அதிலிருந்து ஒரு துளி தண்ணீர் என் நாக்கில் பட்டதுதான் தாமதம், வலியால் நான் துடித்துப் போய்விட்டேன்.

அமிலம் பட்டதுபோல் நாக்கு பொசுங்கியது.

அவன் என் வாய்க்குள் ஈரத் துணியை முறுக்கிப் பிடித்தான்.

அதிலிருந்து சொட்டு சொட்டாக தண்ணீர் என் நாக்கில் விழத் தொடங்கியது.

அப்போது வலி தாங்காமல் நான் அலறினேன். அவன் மறுபடியும் போய் துணியில் தண்ணீரை நனைத்து வந்தான்.

இப்போது நாக்கிலிருந்து தண்ணீர் மெதுவாக தொண்டைக்குள் இறங்கத் தொடங்கியது. அது நகர்ந்த இடமெல்லாம் கடுமையான எரிச்சல். பின் அது மெதுவாக வழிந்து வயிற்றுக்குள் போய்ச் சேர்ந்தது.

அதன்பின் பல தடவை துணியை தண்ணீரில் நனைத்து வைத்த போதுதான் அந்த எரிச்சல் மெதுவாக அடங்கியது. இப்போதுதான் உண்மையிலேயே எனக்கு தாகம் எடுக்க ஆரம்பித்தது.

இப்ராஹிம் என்னை மெதுவாக அந்த நீருற்றுக்கு பக்கத்தில் கூட்டிக் கொண்டு போனான். தன் கைகளால் தண்ணீரை வாரி யெடுத்து என் வாயில் ஊற்றினான்.

நான் என் ஆசைதீருமட்டும் தண்ணீர் குடித்துக் கொண்டே யிருந்தேன்.

காய்ந்து வறண்டு கிடந்த என் ஒவ்வொரு செல்லுக்குள்ளும் அந்த ஈரம் மெதுவாக படர்ந்து செல்வதை நான் ஆனந்தத்துடன் அனுபவித்தேன்.

என் தாகமெல்லாம் அடங்கியதும் நான் ஆயாசத்துடன் அப்படியே மண்ணில் சரிந்தேன்.

அப்போதுதான் இப்ராஹிம் முதன்முதலாக தனது வாய்க்குள் நனைந்த அந்த துணியை திணிக்க ஆரம்பித்தான்.

எனது நன்றி கெட்டத்தனத்தை நினைத்து நான் வாய்விட்டு அழுதேன்.

# 38

அதற்கடுத்த ரெண்டு மூன்று தினங்களும் நாங்கள் அந்த மரத் திட்டைக்குள்ளேயே அடைந்து கிடந்தோம்.

தாகம் ஏற்பட்டபோதெல்லாம் ஆசை தீர தண்ணீரை அள்ளிக் குடித்தோம். வயிறு தெவிட்ட பேரீச்சம் பழங்களைப் பறித்துத் தின்றோம். நேரம் காலம் தெரியாமல் படுத்து உறங்கினோம். அத்தனை நாட்களாக உடம்பில் அப்பிப் போயிருந்த களைப்பையெல்லாம் கழுவித் துடைத்தோம்.

ஆனாலும் காலிலிருந்த வலியும் வேதனையும் மட்டும் கொஞ்சமும் குறையவில்லை. அந்த மூன்று நாட்களிலும் காலையில் மரத் திட்டையிலிருந்து வெளியே போகும் இப்ராஹிம் காதரி, பகல் முழுவதும் எங்கெங்கோ அலைந்து திரிந்துவிட்டு மாலையில்தான் இருப்பிடத்துக்கு திரும்பி வருவான்.

எங்காவது ஒரு மனித முகம் தட்டுப்படாதா? தப்பிப் பிழைக்கும் வழி ஏதாவது தென்படுகிறதா? நாங்கள் இப்போது எங்கே வந்து சேர்ந்திருக்கிறோம்?

மனதில் அலையடிக்கும் கேள்விகளுக்கு அவன் வெளியே விடை தேடிக் கொண்டிருந்தான்.

'நானும் உன்னுடன் வருகிறேன்' என்ற எனது கோரிக்கையை முதல்நாளே அவன் நிராகரித்துவிட்டான்.

"பாலைவனத்தில் வெகு சீக்கிரமே வாடிப்போகும் பூ நீ. ஒரு பாதுகாப்பான பாதையைக் கண்டுபிடிப்பது வரையில் நீ இந்த மரத்திட்டைக்குள்ளேயே ஓய்வெடு."

வழிதவறிப்போகும் சாத்தியங்கள் மிகுந்த ஆபத்தான திசைகளை நோக்கி அவன் நடந்து போனான். 'திரும்பி வந்தால் ஆச்சு' என்னும் ஆபத்தான முயற்சி.

ஒரு வேளை இப்ராஹிம் திரும்பி வராவிட்டால் எனது நிலை...?

இந்தப் பாலைவனத்துக்குள் தன்னந்தனியனாக!

எனக்குள் நடுக்கம் பரவியது.

அவன் திரும்பி வரத் தாமதமாகும் போதெல்லாம் நான் தவித்துப் போய்விடுவேன். தனித்து விடப்படுவதைக் குறித்து என்னால் நினைத்தே பார்க்க முடியவில்லை. தொலைவில் எங்காவது அவன் தலை தென் படுவது வரை நான் நிலைகொள்ளாமல் தவித்துக் கொண்டிருப்பேன்.

இப்ராஹிம் வெளியே போனபிறகு நான் அந்த மரத்திட்டைக் குள்ளேயே அங்குமிங்குமாக நடப்பேன்.

பொதுவாக பாலைவனச் சோலை என்றால் அது பல ஏக்கர் விஸ்தீரணத்துக்குப் பரந்து கிடக்கும் ஒரு பச்சை ஓவியம்.

காட்டு அரபிகளோ, வழிப்போக்கர்களோ அங்கு வந்து ஓய்வெடுத்துப் போவது வழக்கம். ஆனால் நாங்கள் இருந்ததோ ஒன்றிரண்டு பேரீச்சை மரங்கள் ஒப்புக்குத் தலையாட்டிக் கொண்டிருந்த ஒரு சின்னஞ்சிறு மரத்திட்டை.

உலகின் மிகச் சிறிய பாலைவனச்சோலை இதுதான் என்றே நான் சொல்லுவேன். அதிகம் போனால் சுமார் ஒன்றரை ஏக்கர் பரப்பு. அதற்குள் ஒரு தண்ணீர் குட்டை. அதைச் சுற்றிலும் குடை விரித்தபடி நான்கைந்து பேரீச்சை மரங்கள். அங்குமிங்குமாக பெயர் தெரியாத சில கள்ளிச் 'செடிகள்.

சுற்றிலும் அ...கன்ற மணல் பெருவெளி.

இதுவரையில் எவருமே கண்டுபிடிக்காத ஒரு சின்னஞ்சிறு பாலைச் சோலை!

கடவுளின் சொந்த ஏடன் தோட்டம்.

கடவுளின் சொந்த ஏடன் தோட்டம். எங்களுக்காகவே அல்லா அவசர அவசரமாக சிருஷ்டித்த பாலை வனப் பச்சையம்...!

மூன்றாம் நாள் நடுப்பகலில் முகங்கொள்ளாச் சிரிப்புடன் இப் ராஹிம் ஓடோடி வந்தான்.

ஏதோவொரு துருப்புச் சீட்டு அவன் கண்களில் தட்டுப்பட்டிருக்க வேண்டும்.

நான் நொண்டிக்கொண்டே அவனருகில் போனேன்.

"என்ன இப்ராஹிம்... ஏதாவது வழி தெரிந்ததா?"

"ஆமாம் நஜீப், நாம் வாழ்க்கையின் அருகில் வந்துவிட்டோம்."

இப்ராஹிமின் குரலில் உற்சாகமிருந்தது.

"இன்று நான் மணல் காடுகளுக்குள் மூன்று கல் அடுப்புகளைப் பார்த்தேன். அங்கு மனிதர்கள் யாரோ வந்து போயிருக்கிறார்கள். அந்தக் கல் அடுப்பில் தீ மூட்டி சமையல் செய்த அடையாளங்கள் தெரிகின்றன. அதுவொரு அதிர்ஷ்டத்தின் அடையாளம்."

மறுநாள் அதிகாலையிலேயே நாங்கள் அந்த இடத்தைக் குறி வைத்து நடக்கத் தொடங்கினோம். இனிமேலும் அந்த மரத்திட்டைக் குள்ளேயே அடைந்து கிடப்பதால் எந்த பிரயோஜனமும் இல்லை என்பதை நாங்கள் புரிந்திருந்தோம்.

எங்கள் வாழ்க்கையை மீண்டும் அல்லாவின் கைகளில் ஒப்படைத்து விட்டு எங்கள் பயணத்தைத் துவக்கினோம்.

நடந்தோம், நடந்தோம், நடந்து கொண்டேயிருந்தோம்...

கொஞ்ச நேரத்திலேயே இப்ராஹிம் சொன்ன கல் அடுப்புகளை நானும் பார்த்தேன். அது மணல் அதிகமில்லாத ஒரு கட்டாந்தரை. அந்த இடத்தை அங்குலம் அங்குலமாக அலசியபோது மங்கலான ஒரு வழித்தடம் அங்கிருப்பது எங்கள் கண்களில் பட்டது.

அந்த வழியில் அவ்வப்போது வண்டிகள் வந்துபோனதன் அடை யாளங்களும் தென்பட்டன.

மனித வாசத்தின் அடையாளங்கள்! அது நகரவாசிகள் எப்போதோ வந்துபோகும் ஒரு உல்லாசப் புள்ளியாக இருந்திருக்கலாம்.

அப்படியானால் இந்த பாதை நிச்சயமாக எங்களை ஒரு பாது காப்பான இடத்திற்குத்தான் கொண்டுபோய் சேர்க்கும். அது உறுதி!

எங்கள் வாழ்க்கை மீண்டும் நம்பிக்கையில் துளிர்விட்டது.

இதயம் துடிக்க, நாங்கள் ஆர்வத்துடன் அந்த வழிப்பாதையில் நடக்க ஆரம்பித்தோம். பாதையின் ஒவ்வொரு வளைவிலும், ஒவ்வொரு குன்றுக்குப் பின்னாலும் நாங்கள் ஒரு மனிதத் தலையை எதிர் பார்த்தபடியே நடந்து கொண்டிருந்தோம்.

ஆனால் அந்த பாதையோ எங்களை ஏதோவொரு சூனியத்திற் குள்தான் இழுத்துக்கொண்டு போனது.

அப்போது... அது என்ன...?

மணல் மேட்டின் நடுவே, அணிலின் முதுகு கோடு போல ஒரு நீ...ண்ட கோடு!

வெகு தூரத்தில் வைத்தே நான் அந்தக் கோட்டைப் பார்த்து விட்டேன்.

நாங்கள் பரவசத்துடன் அதை நோக்கி வேகமாக ஓடினோம். எனது சந்தேகம் சரிதான்!

அதுவொரு வண்டித் தடமேதான்!

“எனக்கு நல்வழிகாட்ட வந்த இறைவனே, என் எஜமானனே... இந்த வண்டித்தடத்தின் பொருள்தான் என்ன...? ஏதோவொரு மனித உயிர் இந்த இடம்வரை வந்து போயிருக்கிறது என்பதுதானே...?

அப்படியானால் இதற்குப் பக்கத்தில் எங்கோதான் ஒரு மனிதப் பாதை செல்கிறது. மனித வாசம் அருகில் எங்கோதான் இருக்கிறது.

காரிருட்டின் நடுவில் சுடர் வீசும் நம்பிக்கையென்னும் கைவிளக்காகவே எங்களுக்கு அது தெரிந்தது.

நாங்கள் அந்த வண்டிப்பாதையைத் தொடருவதென்று தீர்மானித்தோம். அது நிச்சயமாக எங்களை வாழ்க்கையின் மறுமுனைக்கு கொண்டுபோய் சேர்த்துவிடும் என்று நாங்கள் உறுதியாக நம்பினோம்.

இது வெறுமொரு மனித வண்டிச்சக்கரம் அல்ல.

நிச்சயமாக இது அல்லாவின் காலடித்தடமே தான்.

இது விடுதலைக்கான வழிகாட்டிதான், சந்தேகமேயில்லை!

"அல்லாவே நன்றி, ஓராயிரம் நன்றிகள்... ஒருகோடி நன்றிகள்." என் குரல் நடுங்கியது.

ஆனாலும் மனதிற்குள் சிறு பதட்டம் இருக்கத்தான் செய்தது.

காற்றின் ஒரு சிறு சலனம் கூட போதும்... எங்கள் நம்பிக்கையையெல்லாம் சிதறடிக்க.

எங்கள் முன்னால் ஒளிர்ந்து கொண்டிருக்கும் அந்த வண்டித்தடம் எங்கள் கண்முன்னாலிருந்து என்றென்றைக்குமாக மாயமாய் மறைந்து போய்விடும்.

ஆனால் இன்று அல்லா எங்களுடன் அல்லவா இருக்கிறார். காற்றை மூச்சு விடக்கூட அவர் அனுமதிக்கமாட்டார். எங்கள் சோர்வையெல்லாம் மறந்து நாங்கள் அந்த வண்டித்தடத்தின் மீதாக ஓடத் தொடங்கினோம்.

கால் வீக்கம், பழுப்பு, நீர், வலி, வேதனை... எதுவுமே என் நினைவிலில்லை. காற்று கண் திறப்பதற்கு முன்னால் நாங்கள் எங்கள் பாதையை அடைந்தாக வேண்டும்.

நாங்கள் ஓட ஓட அந்தப் பாதையும் வளர்ந்து கொண்டே போனது. அதற்கிணையாக எங்கள் நம்பிக்கையும் நீண்டு கொண்டிருந்தது.

நம்பிக்கையென்னும் அஸ்தமிக்காத சிறு வெளிச்சத்தைப் பின் தொடர்ந்து நாங்கள் எத்தனை தூரம் ஓடினோம் என்றே தெரியவில்லை. அந்தி சாயும் வரையிலும் அது தொடர்ந்து கொண்டிருந்ததாகத்தான் தோன்றுகிறது.

எங்கள் இலக்கை நெருங்கி விட்டோம் என்று உள்ளுணர்வு கிடந்து அடிக்கத் தொடங்கியது.

ஆனால், இப்போது... இது என்ன? நாள் முழுவதும் பிணம்போல் உறங்கிக் கிடந்த இந்த காற்றுக்கு இப்போது என்ன வந்தது...?

ஒரு நிமிடத்திற்குள் அசுர வேகமெடுத்து காற்று குதியாட்டம் போடத் தொடங்கிவிட்டதே...!

அதன் வேகத்துக்கு ஈடு கொடுக்கமுடியாமல் அந்த வண்டிச்சக்கரம் எங்கள் கண் முன்னாலேயே வேகமாக மறைந்தது.

துயரத்தில் தொண்டை அடைக்க, நாங்கள் விக்கித்து நின்றோம். சற்று நேரத்திலேயே காற்றின் கோபம் கொஞ்சம் அடங்கியது.

ஆனால்...

எங்களைச் சுற்றிலும்... மீண்டும் அதே அனந்தமான சூன்யம். பொட்டல் பரவெளி. மணல்... மணல் மட்டுமே.

அதைப் பார்த்து நான் அடிவயிற்றிலிருந்து குரலெடுத்து அழுதேன், வானத்தைப் பார்த்து சபித்தேன்.

"போதும்... கடவுளே, போதும். என்னை விட்டுவிடு. இந்த விளையாட்டிலிருந்து என்னை எப்படியாவது விடுவித்து விடு. என் உடம்பில் இனி சக்தியில்லை. இந்த பரிகாசத்தை என்னால் சகித்துக் கொள்ளவே முடியவில்லை..."

"சோர்ந்து போகாதே நஜீப், வா... நாம் நடப்போம்." அலறினான் இப்ராஹிம்.

நானோ அதை காதிலேயே வாங்கிக் கொள்ளாமல், மணல் அலையில் கவிழ்ந்து கிடக்கும் ஒரு கப்பலின் சிதிலத்தைப்போல் கால்களைப் பரப்பியபடியே அந்த மணலில் மல்லாந்து விழுந்தேன். மீண்டுமொரு இரவு கண்ணீரில் கரைந்து போனது.

# 39

பொழுது இன்னமும் விடியவில்லை.

ஏதோவொரு வித்தியாசமான சத்தத்தைக் கேட்டு நான் திடுக்கிட்டு கண் விழித்தேன்.

என் காதுகள் விடைத்தன.

சத்தம் எதுவுமில்லை.

என்னுடைய கற்பனையாக இருக்கும்.

நான் மீண்டும் கண்களை மூடினேன்.

இப்போது மீண்டும் அதே சத்தம்.

நான் வாரிச் சுருட்டி எழுந்தேன்.

பாலைவனமோ தனது கோபத்தையெல்லாம் வீசியெறிந்துவிட்டு அமைதியாக உறங்கிக் கொண்டிருந்தது.

வெகு தூரத்திலுள்ள நுண்ணிய சத்தத்தைக்குகூட துல்லியமாகக் கேட்குமளவுக்கு நிசப்தம்.

நான் என் உணர்வையெல்லாம் காதில் குவித்து கூர்ந்து கேட்டேன்.

சரக்கு வண்டிகள் நீளமான நெடுஞ்சாலையில் வேகமாகப் பாயும்போது டயரிலிருந்து ஒரு வித்தியாசமான சத்தம் வெளிப்படும்.

இரவின் நிசப்தத்தில் ஊரில் வைத்து நான் பலமுறை அந்த வித்தியாசமான சத்தத்தைக் கேட்டிருக்கிறேன்.

சந்தேகமேயில்லை. இது தொலைவில் எங்கோ பாய்ந்து கொண்டிருக்கும் ஒரு வண்டிச் சத்தமேதான்.

சத்தம் இடைவிட்டு இடைவிட்டு கேட்டுக் கொண்டிருந்தது.

என் கண்ணுக்கு முன்னால் நடுத்தர உயரமுள்ள ஒரு மணல்மேடு.

என் உள்ளுணர்வு என்னை ஏமாற்றாவிட்டால்...

இந்தச் சத்தம் சோர்ந்துபோன என் மனதின் மாயக் காட்சியாக இல்லாவிட்டால்...

நிச்சயமாக இந்த மணல் மேட்டுக்குப் பின்னால் ஒரு நெடுஞ்சாலை போய்க்கொண்டிருக்கிறது. அதில் வண்டிகள் வேகமாக பாய்ந்து கொண்டிருக்கின்றன. சந்தோஷத்தால் என் கால்கள் வெடவெட வென்று நடுங்கியது.

"இப்ராஹீம்... இப்ராஹீம்..."

நான் பெருங்குரலெடுத்து அலறினேன்.

"இதோ நாம் வந்து விட்டோம்... வந்துட்டோம்..."

சந்தோஷத்தில் என் குரல் குழறியது.

நான் இப்ராஹிம் படுத்திருந்த இடத்தை நோக்கி ஓடினேன். ஆனால்... அங்கே அவனைக் காணவில்லை.

நான் சுற்றும் முற்றும் பார்த்தேன், எங்கேயும் அவனில்லை.

இவன் எங்கே போய்த் தொலைந்தான்?

"இப்ராஹீம்... இப்ராஹீம்...!"

நான் அங்குமிங்குமாக நடந்துகொண்டே உரத்த குரலில் அவனைக் கூப்பிட்டேன். பதிலே இல்லை.

இவன் எங்கே போய்த் தொலைந்தான். அப்படியென்ன உறக்கம் அவனுக்கு?

நான் மனதுக்குள் அவனைத் திட்டித் தீர்த்தேன்.

"இப்ராஹீம்... இப்ராஹீம்..."

நான் மீண்டும் மீண்டும் கூப்பிட்டுக்கொண்டேயிருந்தேன்.

ஆனால் என் அழைப்புகளெல்லாம் பதிலேதுமின்றி பாலைவனத்தின் அகண்டத்துக்குள் எங்கோ போய் மறைந்தன.

சற்று நேரத்திற்கெல்லாம் பாலைவனத்தின் கிழக்கு முனையின் விடியலின் முதல் வெளிச்சம் விழுந்தது. இருள் பதுங்கி ஒளியத் தொடங்கியது. மணல்வெளியும், குன்றுகளும் கண் முன்னால் விரியத் தொடங்கின.

அந்த வெளிச்சத்தின் உதவியால் நான் மீண்டும் இப்ராஹிமைத் தேடி அங்குமிங்குமாக ஓடினேன். அவன் எங்குமே இல்லை.

பக்கத்திலிருந்த மணல் மேட்டில் ஏறி நின்று சுற்றும் முற்றும் பார்த்தேன். எங்குமே அவன் தலை தட்டுப்படவில்லை.

நெடுநேரத் தேடலுக்குப் பின்புதான் எனக்குள் அந்த உண்மை உறைத்தது.

இப்ராஹிம் காதரி என்னும் எனது வழிகாட்டி, என் ரட்சகன் என்றுமே பார்க்க முடியாதபடிக்கு என் வாழ்க்கையிலிருந்து மறைந்து

போய்விட்டான்.

எங்கே... எப்படிப் போனான் என்று தெரியாதபடிக்கு, எந்தச் சுவடும் இல்லாமல் காற்றோடு கரைந்து போய் விட்டான்.

'இந்த பூமியின் கடைசி மனிதன் நான்' என்னும் வெறுமையும், துக்கமும் எனக்குள் பீறிட்டது.

மணலில் மண்டியிட்டு நான் வாய்விட்டுக் கதறி அழுதேன்.

"ஆனாலும் இப்ராஹிம்... என்னை நீ இப்படி அனாதையாக தவிக்க விட்டுவிட்டு மாயமாய் மறைந்திருக்க வேண்டாம்.

எங்கே போனாய் நீ?

அத்தனை கஷ்டங்களுக்கும், வேதனைகளுக்கும் நடுவிலும் இத்தனை நாட்களாக நாம் ஒன்றாகத்தானே இருந்தோம். இதோ இன்னும் சற்று நேரத்தில் நாம் புதிய வாழ்க்கையை சுவாசிக்கப் போகிறோம்.

அதோ அங்கேயொரு நெடுஞ்சாலை ஓடிக்கொண்டிருக்கிறது. இந்த நேரத்தில் நீ... நீ எங்கே போனாய்?

நேற்றிரவு உனக்கு என்ன நேர்ந்தது?

என்னிடம் ஒரு வார்த்தைகூட சொல்லாமல் போய்விட்டாயே?" நான் புலம்பினேன்.

சற்று நேரத்திற்கெல்லாம் வெயில் சுட்டெரியத் தொடங்கியது. வேறு வழியெதுவும் தெரியாமல் நான் மெதுவாக எழுந்து நடக்க ஆரம்பித்தேன். இத்தனை நாளாகத் தோன்றாத களைப்பு இப்போது என் காலைச் சுற்றியது, எத்தனை நடந்தாலும் எங்குமே போய்ச்சேர முடியாது என்பதைப்போல. அந்த அளவுக்கு தனிமை என்னை அரித்து சிதிலமாக்கியிருந்தது.

எப்படியோ ஒருவழியாக சூரியன் அஸ்தமிக்கும் வேளையில் நான் அந்த நெடுஞ்சாலைக்குப்போய்ச் சேர்ந்தேன்.

அது அப்படியொன்றும் பரபரப்பான சாலையில்லை. எப்போதாவது ஒன்றிரண்டு வண்டிகள் கடந்து போய்க் கொண்டிருந்தன.

பெரும்பாலானவை சரக்குடன் போய்க்கொண்டிருக்கும் டிரைலர் லாரிகள்.

அவ்வப்போது ஒன்றிரண்டு சொகுசுக் கார்கள்.

பெரும் பிரயத்தனத்துடன் ரோட்டோரமாக நின்றபடியே நான் சீறிப்பாயும் வண்டிகளைப் பார்த்து கை காட்டினேன்.

ஆனால் அவையெல்லாமே என்னை அலட்சியப்படுத்தி விட்டு அதனதன் இலக்கை நோக்கி விரைந்து கொண்டிருந்தன.

ஒவ்வொரு வண்டியும் என்னைக் கடக்கும் போதெல்லாம் 'இதோ... அடுத்த வண்டி என்னை நிறுத்தி ஏற்றிக் கொண்டு போகும்' என்னும் நப்பாசையுடன் நான் விடாமல் வரும் வண்டிகளுக்கெல்லாம்

கை காட்டிக் கொண்டேயிருந்தேன்.

ஆனால் என்ன செய்வது?

அதிர்ஷ்டம் என் பக்கம் இல்லையே?

ஒரு வண்டிக்காரன்கூட என் மீது கருணை காட்டவில்லை.

இல்லையில்லை, அப்படியில்லை. ஒரு வண்டிக்காரனின் மனதில் கூட அல்லா அப்படிப்பட்ட ஓர் ஆணையை பிறப்பிக்கவில்லை.

அப்படியாக நான் அனாதையாக விரட்டப்பட்ட மற்றொரு இரவும் வந்து சேர்ந்தது.

# 40

விடிந்ததும் நெடுஞ்சாலையில் மீண்டும் வண்டிகள் போகத் தொடங்கின. வண்டிகளுக்கு கை காட்டி, கை காட்டி சலித்துப்போன நான் ஒரு கட்டத்தில் என்னையுமறியாமல் சாலையின் நடுவுக்கே போய் விட்டேன்.

ஆனாலும் நேற்றைய இரவைப் போலவே இன்றும் வண்டிகள் என்னை அலட்சியப்படுத்தி விட்டு விலகி ஓடின.

இதில் ஆச்சரியப்படுவதற்கு எதுவுமில்லை. அப்படியிருந்தது என் தோற்றம். அதைப் பார்த்து யார் தான் தங்கள் வண்டியை நிறுத்து வார்கள்?

மூன்று வருட மஸரா வாழ்க்கை. அதன்பின் உயிரை கையில் பிடித்துக் கொண்டு எத்தனை நாட்கள் அந்த பாலைவனத்துக்குள் அலைந்து திரிந்திருக்கிறேன். என்னைப் பார்க்கும் எவருமே என்னை மனிதன் என்றே சொல்லமாட்டார்கள். அந்த அளவுக்கு நான் விகாரமாகிப்போயிருந்தேன்.

இப்போது எனக்கு தாங்க முடியாத பசி, தாகம். மரத்திட்டை யிலிருந்து வெளியேறி மூன்று நாட்களுக்கு மேல் ஆகிப்போயிருந்தது.

வாழ்க்கையின் வெகு அருகில் வந்துவிட்டபோதிலும், அது என்னை விட்டு விலகி ஓடுவதை என்னால் தாங்கிக்கொள்ளவே முடியவில்லை.

இத்தனை தூரம் வந்தபிறகும் அல்லாவின் கருணை என் மீது விழவில்லையே என்பதை நினைக்கும்போது எனக்கு என் மேலேயே வெறுப்பு வந்தது.

அந்த அளவுக்கு நான் அப்படியென்ன பாவம் செய்துவிட்டேன்? கண்ணீர் வழிய நான் மார்பில் அடித்துக்கொண்டு கதறி அழுதேன்.

“ஏ அல்லா, நீ என் இரண்டு தோழர்களையும் பாலைவனத்தில் வைத்து பறித்துக் கொண்டாய். ஹக்கீமை நீர் வற்றி வறண்டு போகச் செய்தாய். இப்ராஹிமை காற்றோடு காற்றாக கரைத்துக் கொண்டு போய்விட்டாய். இப்போது என்னை இங்கே கொண்டு வந்து நிறுத்தி யிருக்கிறாய். இனியும் இந்த பாவத்திடம் என்ன வேண்டும் உனக்கு? சொல்...”

அந்தக் கேள்வி விடை தெரியாமல் எனக்குள்ளேயே உறைந்து போனது.

நிமிடங்கள் நடுப்பகலுக்குள் ஓடிக்கொண்டிருந்து. அவ்வப்போது சில வண்டிகள் மட்டுமே என்னைக் கடந்து போய்க் கொண்டிருந்தன.

அப்போது தொலைவில் ஒரு சொகுசுக் கார் சீறிப் பாய்ந்து வருவதைப் பார்த்தேன். அதற்கு கை காட்டுவதால் ஒரு பிரயோஜனமும் இல்லை.

லாரிக்காரர்கள்கூட தலையை வெளியே நீட்டி ஒரு பரிதாப பார்வையை என்மீது வீசிவிட்டு போகும்போது இந்த சொகுசுக் காரா எனக்காக நிற்கப்போகிறது?

ஆனாலும் ஏதோவொரு உள்ளுணர்வு... நான் அந்தக் காரைப் பார்த்து அனிச்சையாய் கை காட்டினேன்.

அதுவும் என்னைக் கடந்து போனது.

ஆனால்... அது என்ன?

என் கண்ணையே என்னால் நம்ப முடியவில்லை.

என்னைக் கடந்து போன கார் சற்று தொலைவில் பிரேக் அடித்து நிற்கிறது.

நான் கை காட்டியதைப் பார்த்துதான் அது நின்றதா? இல்லை வேறு ஏதாவது காரணமா...?

ஒரு நிமிடம் திகைத்து நின்ற நான், பின் அந்தக் காரை நோக்கி வேகமாக ஓடினேன்.

வண்டிக்குள் நாகரிகமாக உடையணிந்த ஒரு அழகிய அரபி.

கண்ணாடியை இறக்கிக் கொண்டே அவர் என்னிடம் எதுவோ கேட்டார்.

என்ன பதில் சொல்வது?

எனக்கு எதுவுமே புரியவில்லை.

இல்லையில்லை... சொல்வதற்கு என்னிடம் எதுவுமேயில்லை.

“கருணை நிறைந்த அரபியே, நேற்றிலிருந்து எத்தனை வண்டிகள் என்னைக் கடந்து போயிருக்கின்றன. அவற்றில் ஒன்றுகூட எனக்காக பிரேக் போடவில்லை.

என் பக்கத்தில் நிறுத்தி ‘நீ யார்...? உனக்கு என்ன வேண்டும்? நீ எங்கிருந்து வருகிறாய்...?’ என்று ஆறுதலாக ஒரு கேள்விகூட கேட்க

வில்லை. என்னைப் பார்த்ததும் உங்களுக்கு மட்டும் பிரேக்கில் கால் அழுத்த ஏன் தோன்றியது? அது நான் செய்த புண்ணியம்தான். போதும்... எனக்கிது போதும்."

நான் கண்ணீர் விட்டு அழுதேன்.

அதைப் பார்த்த அரபி அதன்பின் என்னிடம் எதுவுமே கேட்க வில்லை.

எனக்காக கார் கதவை திறந்து விட்டவர். வலுக்கட்டாயமாக என்னை பின் சீட்டில் ஏற வைத்தார்.

கார் ஒரு சீறலுடன் பாயத் தொடங்கியது.

அந்த சொகுசுக் காரின் வழுவழுப்பான சீட்டில் அழுக்கடைந்த என் உடம்பை சாய்க்கவே எனக்கு கூச்சமாக இருந்தது. அதனால் நான் அந்த சீட்டின் விளிம்பில் ஒட்டியும் ஒட்டாமலுமாக உட்கார்ந் திருந்தேன்.

வண்டி கொஞ்ச தூரம்தான் போயிருக்கும். அப்போது காரின் ஏ.ஸி.யை ஆஃப் செய்த அரபி, கார் கண்ணாடிகளை மெதுவாக கீழிறக்கிவிட்டார்.

என் உடம்பிலிருந்து கிளம்பிய வீச்சமே அதற்குக் காரணம் என்று எனக்குப் புரிந்தது.

அவர் நினைத்திருந்தால் அப்போதே என்னை காரிலிருந்து இறக்கி விட்டிருக்கலாம். ஆனால் அவரிடமிருந்து ஒரு அலட்சியப் பார் வையைக்கூட நான் பார்க்கவில்லை.

அந்த மகானிடம் நான் கொஞ்சம் தண்ணீர் கிடைக்குமா என்று கேட்டேன். அவர் ஒரு தண்ணீர் நிரம்பிய பாட்டிலை என்னிடம் நீட்டினார்.

அதை நான் ஒரே மூச்சில் குடித்துத் தீர்த்தேன்.

"இன்னமும் வேண்டுமா?" அவர் பரிவுடன் மீண்டும் கேட்டார்.

நான் 'ஆமாம்' என்று தலையசைத்தேன்.

மீண்டும் ஒரு பாட்டில் தண்ணீர்.

நான் அதையும் மடக் மடக்கென்று குடித்துத் தீர்த்தேன். என்றாலும் என் தாகம் அடங்கவில்லை.

ஆனால் மீண்டும் ஒரு தடவை அவரிடம் தண்ணீர் கேட்க எனக்குத் தயக்கமாக இருந்தது.

நான் சீட்டில் மெதுவாக முதுகை சாய்த்தேன். காரின் வேகத்துடன் என் களைப்பும் சேர்ந்து கொள்ள வெகு விரைவிலேயே நான் உறங்கிப் போனேன். அதனால்தான் அந்த பயணம் எத்தனை நீண்டது என்று என்னால் அனுமானிக்கவே முடியவில்லை.

இருள் கவிந்து கொண்டிருந்தபோது கார் ஒரு நகரத்துக்குள் நுழைந்தது. அதன் பிரேக் குலுக்கலில் திடுக்கிட்டு கண் விழித்த நான்

சுற்றும் முற்றும் திகைப்புடன் பார்த்தேன்.

பெரிய பெரிய கட்டிடங்கள். எங்கே பார்த்தாலும் ஆட்கள். கூச்சல், நெரிசல்... அதற்குள்ளாக ஊர்ந்து சென்ற வண்டி ஒரு இடத்தில் சாலையோரமாக நின்றது.

அரபி திரும்பி என்னைப் பார்த்தார், 'இறங்கிக் கொள்' என்பதற்கான அடையாளம் அது என்று எனக்குப் புரிந்தது.

அத்தனை நேரமாக என்னை சகித்துக்கொண்ட அந்த மகானுக்கு நான் எப்படி நன்றி சொல்வேன்?

அந்த பரந்த மனதிற்கு பரிசாக ஒரு துளி கண்ணீரையே என்னால் கொடுக்க முடிந்தது. நான் ஒரு வார்த்தைகூட பேசவில்லை.

வண்டியிலிருந்து இறங்கிய நான் கார் கதவை மெதுவாக சாத்தினேன்.

என்னை அந்த நகரத்தின் நடுவில் தனியாக விட்டுவிட்டு அந்த கார் வேகமாக எங்கோ போய் மறைந்தது.

காரணமேயில்லாமல் நான் கேவிக் கேவி அழுதேன்.

பணக்காரனின் வண்டியிலும் சில வேளைகளில் அல்லா பயணம் செய்வார் என்று எனக்கு அப்போதுதான் புரிந்தது.

# 41

ஏதுவுமே புரியாமல் நான் கொஞ்ச நேரமாக அந்த இடத்திலேயே நின்று கொண்டிருந்தேன். போவோர் வருவோரெல்லாம் என்னை ஏதோவொரு வினோதப் பிராணியைப் பார்ப்பதுபோல் அரு வெறுப்புடன் பார்த்துக் கொண்டுபோனார்கள்.

நான் தெருவோரமாக மெதுவாக நடக்க ஆரம்பித்தேன்.

அதுவொரு சந்தை. தெரு நீ...ண்டு கிடந்தது. காய்கறிகளும் பழங் களும் மலைபோல் குவித்து வைக்கப்பட்டிருந்தன. அவற்றின் மண மெல்லாம் கலந்த ஒரு கதம்ப நெடி சந்தையெங்கும் வீசிக்கொண்டி ருந்தது.

சாரி சாரியாக சென்று கொண்டிருக்கும் அரபிகள். அவர்களுக் கிடையே கறுத்த பர்தாவுக்குள் கண்கள் மட்டும் தெரிய பெண்கள்.

இந்திய வியாபாரிகள், எங்கு பார்த்தாலும் சளசளவென்று வியா பாரப் பேச்சுகள்.

இவற்றுக்கிடையே விகார ரூபனாக நான்.

என்னைக் கடந்து செல்லும் ஒவ்வொருவருமே ஒரு நிமிடம் நின்று 'இது என்ன?' என்பதுபோல் என்னை ஒரு பார்வை பார்த்துவிட்டு, தங்கள் உடம்பு என்மீது பட்டுவிடாதபடி மிகுந்த கவனத்துடன் விலகிப் போனார்கள்.

அதைப் பார்த்து எனக்கு கொஞ்சம்கூட வருத்தம் வரவில்லை. சொல்லப்போனால் அப்போது எனக்கே என் மீது நாற்றமடித்தது.

பசி வயிற்றைப் புரட்டியது. என் கையிலோ சல்லிக்காசு கூட இல்லை. எனது அத்தனை நாள் கல்ஃப் வாழ்க்கையில் பணம் ஒரு தேவை என்று உணரும் முதல் சந்தர்ப்பம் அது.

மஸராவிலோ அர்பாபுவின் குபூஸ் தின்னக் கிடைக்கும். அதற்கு பணம் எதுவும் கொடுக்க வேண்டாம். அர்பாபு பார்க்காத வேளையில் ஆடுகளின் தீவனத்தைக் களவாடித் தின்னலாம். அதற்கும் பணம் தேவையில்லை.

ஆனால் இந்த நகரத்திலோ...! சாப்பாடு வேண்டுமென்றால் பணம் கொடுத்தாக வேண்டும். பணமில்லாமல் எப்படி சாப்பிடுவது?

பிச்சையாவது எடுக்கலாம் என்று நினைத்து நான் ஒன்றிரண்டு கடைகளுக்குள் செல்ல முயன்றேன். ஆனால் என்னை பார்த்ததுமே கடை முதலாளிகள் சொறி பிடித்த நாயை விரட்டுவது போல் என்னை விரட்டியடித்தார்கள்.

பசியெடுத்த ஓநாயைப்போல் நான் அந்த சந்தைக்குள்ளேயே சுற்றிச் சுற்றி வந்தேன். கொஞ்ச நேரத்திலேயே எனக்கு தலை சுற்ற ஆரம்பித்தது, கண்கள் இருளத் தொடங்கின. பெரும்பாடுபட்டு ஒன்றிரண்டு அடிகள்தான் எடுத்து வைத்திருப்பேன்.

அப்போது ஒரு கடை வாசலில் மலையாளத்தில் ஒரு போர்டு தொங்கியது: 'மலபார் ரெஸ்ட்டாரண்ட்.'

அதைப் பார்த்ததும் இனம் புரியாத மகிழ்ச்சியால் என் இதயம் துடித்தது. என் மொழி தெரிந்த, நான் சொல்வதைப் புரிந்து கொள்ளக் கூடிய யாரோ ஒருவன் அங்கிருப்பான், நிச்சயமாக. வருவது வரட்டும் என்ற வறட்டு தைரியத்துடன் நான் அந்த கடையை நோக்கி கால்களை எட்டிப் போட்டேன்.

கடை வாசலில் கால் வைத்து மட்டுமே நினைவிலிருக்கிறது. கடை வாசலிலேயே நான் மயங்கி விழுந்தேன்.

# 42

எல்லா அரபி நகரத்திலும், எந்த நேரத்திலும் உதவியென்று ஓடிச் செல்ல நிழல் தரும் ஆலமரமொன்று இருக்கும். அதன் நிழலில் களைப்பாறும் ஒரு மனிதக் கூட்டமும் அங்கிருக்கும்.

பத்தா சந்தையின் அப்படிப்பட்ட ஒரு மலையாளி ஆலமரமான குஞ்ஞிக்காயின் ஹோட்டலுக்கு முன்னால்தான் நான் மயங்கி விழுந்திருந்தேன்.

அல்லாவின் கருணையைத்தான் கொஞ்சம் நினைத்துப் பாருங்கள்.

அறிமுகமேயில்லாத அந்தச் சந்தையில் ஊரும் திசையும் தெரியாமல் திக்கு முக்காடிக்கொண்டிருந்த நான் எங்காவது ஒரு மூலையில் போய் மயங்கி விழுந்திருக்கலாம்.

அந்த பயங்கர உருவத்துக்குள் கிடந்த என்னை ஒருத்தர்கூட திரும்பிப் பார்த்திருக்கமாட்டார்கள்.

ஆனால் நான் போக வேண்டியது குஞ்ஞிக்காவிடம்தான் என்று செய்தது அல்லா அல்லவா!

மயங்கி விழுந்தேன், அவ்வளவுதான்.

பாக்கியுள்ளதையெல்லாம் அவன்தான் குஞ்ஞிக்காவின் இதயத்தில் ஒளித்து வைத்திருந்தானே!

எனக்கு நினைவு திரும்பியபோது நான் குஞ்ஞிக்காவின் அறையில் கிடந்தேன்.

அங்கே வந்த மூன்றாம் நாள்தான் எனக்கு நினைவு திரும்பியதாம்.

உணர்வு திரும்பியபோது என் உடம்பிலும் கை கால்களிலும் பயங்கர வலி.

என்னுடைய கையில் ஒரு ட்ரிப் ஏறிக்கொண்டிருந்தது.

நான் கிடப்பது ஆஸ்பத்திரியிலா என்றொரு சந்தேகம் எனக்குள். என்னைச் சுற்றிலும் மலையாளிகள் இருப்பதைப் பார்த்து நான் உடைந்து அழுதேன்.

குஞ்ஞிக்கா என்னுடைய கைகளைப் பிடித்து ஆறுதல் சொன்னார்.

அந்த மூன்று நாட்களுக்குள் பத்தா மலையாளிகளுக்கிடையில் நானொரு பேச்சுப்பொருளாகிப் போயிருந்தேன்.

நான் கண் திறந்துவிட்டேன் என்று கேள்விப்பட்டதுமே அவர்களில் பலரும் என்னைப் பார்க்க அறைக்கு ஓடோடி வந்தார்கள்.

வந்தவர்கள் வெறும் கையுடன் வரவில்லை. ஆப்பிள், ஆரஞ்சு, சாத்துக்குடி, திராட்சை... என்று ஒவ்வொருவரின் கையிலும் ஒரு பார்சல்.

அவர்கள் எல்லோருமே எனது கதையைத் தெரிந்துகொள்ளும் ஆர்வத்துடனிருந்தார்கள்.

எனக்கு அந்த பயங்கர வடிவம் எப்படி வந்து சேர்ந்தது? நான் எப்படி அங்கே வந்து சேர்ந்தேன்...?

எல்லோருடைய முகத்திலும் ஆர்வம் கொப்பளித்துக் கிடந்தது. ஆனாலும் என்னிடம் அதை எப்படிக் கேட்பது என்று தயக்கம்.

மேலும் இரண்டு நாட்கள் சென்ற பின், மீண்டும் ஒருதடவை டாக்டர் வந்து பரிசோதித்துவிட்டு போன பிறகு, ஒரு நாள் ராத்திரி குஞ்ஞிக்கா மெதுவாக என்னிடம் அதைக் கேட்டார்.

“எனக்கொரு கண்ணாடி தருவீர்களா?”

“கண்ணாடி எதற்கு?” குஞ்ஞிக்கா கேட்டார்.

“எனக்கு என்னையே ஒரு தடவைப் பார்க்கணும்.”

அங்கிருந்தவர்கள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள்.

எல்லோரும் உறுத்துப் பார்க்கும், எல்லோரின் பரிதாபத்துக்கும் ஆளான என்னையே, எனக்கு ஒரு தடவை பார்க்கவேண்டும்.

அங்கிருந்தவர்களில் யாரோ ஒருவர் ஓடிப்போய் ஒரு சிறிய கண்ணாடியைக் கொண்டு தந்தார்.

படுக்கையில் கிடந்தபடியே, வெகு காலத்திற்குப் பின்னால் நான் என்னைப் பார்த்தேன். பார்த்துக்கொண்டேயிருந்தேன்- வெகு நேரமாக.

சொல்லப்போனால் உண்மையில் எனக்கு என்னையே அடையாளம் தெரியவில்லை. கண்ணாடியில் நான் பார்த்தது எனக்கு அறிமுகமேயில்லாத முற்றிலும் புதிய ஒரு அன்னியனை.

ஒட்ட வெட்டியிருந்த தலைமுடி, மழுங்க ஷேவ் செய்யப்பட்டிருந்த கன்னம்.

கண்ணாடியில் நான் பார்த்தது ஊரிலிருந்து புறப்பட்டு வந்த அந்த நஜீபையல்ல. இது வேறேதோ ஒரு அன்னியன்!

கறுத்து மெலிந்து, ஒட்டிய கன்னமும், துருத்திய பல்லுமாக காட்சியளித்த ஒரு விகார ரூபம்.

அது மட்டும் வேறொரு சந்தர்ப்பமாக இருந்திருந்தால், கண்ணாடியில் பார்த்த உருவம் நான்தான் என்று எவரேனும் சொல்லியிருந்தால் சத்தியமாக நான் நம்பியிருக்கவே மாட்டேன்.

அன்று கடை வாசலில் மயங்கி விழுந்த என்னை குஞ்ஞிக்காயும், ஹோட்டல் தொழிலாளர்களுமாகச் சேர்ந்து கடைக்குள் தூக்கிப்போய் எனக்கு தண்ணீரும் சாப்பாடும் தந்தது, பின்பு அறைக்குள் கொண்டு போய் படுக்க வைத்தது, பத்தா சந்தையில் குஞ்ஞிக்காயின் அன்பு சகோதரர்கள் எல்லோரும் சேர்ந்து என்னைக் குளிப்பாட்டியது, ஒரு பார்பரை அறைக்கு வரச் சொல்லி என் தாடி மீசையையெல்லாம் மழித்தெடுத்தது, ஒரு டாக்டரை அழைத்து வந்து என்னை பரிசோதித்தது, மருந்துகள் தந்தது என்று குஞ்ஞிக்கா ஒரு கதைபோல எல்லாவற்றையும் எனக்கு சொல்லித்தந்தார்.

ஆனால் எனக்குள், என் ஆழ் மனதில்கூட அந்த நினைவுகளின் பதிவு இல்லவேயில்லை.

அவை எல்லாவற்றுக்கும் ஈடாக என் கண்ணீரைத் தவிர திருப்பிக் கொடுக்க என்னிடம் எதுவுமில்லை.

அப்போது எனக்குள் ஒரேயொரு வருத்தம்தான் இருந்தது.

என்னுடைய முடியையும் தாடியையும் மழிப்பதற்கு முன்னால் அவர்கள் என்னையொரு புகைப்படமாவது எடுத்திருக்கலாமேயென்று.

என்னுடைய பயங்கர வடிவத்தில் என்னை நான் ஒருதடவைகூட பார்த்ததில்லை.

என் மஸரா வாழ்க்கையின் சுவடுகளை உங்களுக்கு காட்டித் தருவதற்கு என் வாழ்க்கை அனுபவங்களைத் தவிர, என் நினைவுகளைத் தவிர இப்போது வேறெதுவும் என் கையில் இல்லை.

நான் அந்த தேசத்திற்குள் போனேன் என்பதை மெய்ப்பிக்கும் என்னுடைய பாஸ்போர்ட் கூட அர்பாபுவின் கைகளில் மாட்டிக் கொண்டது.

"இன்று எத்தனாம் தேதி...?" சுற்றியிருந்தவர்களைப் பார்த்துக் கேட்டேன்.

"பதிமூணு."

"என்ன மாசம்...?" அவர்கள் புருவம் சுருங்கியது.

"ஆகஸ்ட்".

"வருஷம்...?" அவர்களுக்கு ஆச்சரியமாக இருந்தது.

"ஆயிரத்தி தொள்ளாயிரத்தி தொண்ணூற்றியஞ்சு."

என்னைப்படைத்த என் இறைவனே...!

நான் நெஞ்சில் கைவைத்து அலறினேன்.

பின என் மனதிலும், விரலிலுமாக காலத்தைக் கூட்டிப்பார்த்தேன்.

மூணு வருஷம், நாலு மாசம், ஒன்பது நாட்கள்!

கேட்டுக்கொண்டிருந்தவர்கள் சிலையாகிப் போனார்கள்.

இரண்டு மூன்று நாட்களுக்குப்பிறகு என்னால் நடக்க முடியும் என்ற நிலை வந்த போது குஞ்ஞிக்கா என்னை அந்த அறையிலிருந்து வேறொரு அறைக்கு கூட்டிக் கொண்டுபோனார்.

அங்கே ஒரு டெலிபோன் இருந்தது. குஞ்ஞிக்கா என்னை அதற்கு முன்னால் கொண்டுபோய் இருத்தினார்.

"ம்... ஊருக்கு கூப்பிடாண்டாமா? உம்மாவின் குரலையும், பீவியின் குரலையும் கேட்காண்டாமா?"

நான் உடைந்து அழுதேன்.

என்னுடைய வீட்டில் டெலிபோன் இல்லை. நான் பக்கத்துவீட்டு டெலிபோன் நம்பரை குஞ்ஞிக்காயிடம் சொன்னேன்.

அத்தனை நாட்களில் ஒருமுறைகூட கூப்பிடாத அந்த டெலிபோன் நம்பர் எப்படி என் நினைவில் இருந்தது என்பது இன்று வரை எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. (பம்பாயிலிருந்த போதுதான் நான் அந்த நம்பருக்கு கடைசியாக கூப்பிட்டிருந்தேன்.)

குஞ்ஞிக்கா நீண்ட நேரம் அந்த போனுடன் மல்லுக் கட்டினார்.

ஆனாலும் ஊருக்கு கனெக்ஷன் கிடைக்கவேயில்லை.

கடைசியாக ஒரு முயற்சியில் மறுமுனையில் பெல்லடித்தது.

குஞ்ஞிக்கா அவசர அவசரமாக போனை என் கையில் தந்தார். நான் யார் என்பதை அந்த வீட்டுக்காரர்களிடம் சொல்லி புரிய வைப்பதற்குள் நான் படாத பாடு பட்டுவிட்டேன்.

நான் யார் என்று புரிந்தபோது அந்தப் பக்கம் ஒரு நிமிடம் சத்தமே இல்லை. கனத்தம் மௌனம்.

"இத்தனை காலமாக நீ எங்கிருந்தாய் நஜீப்?" அவர்கள் கேட்டார்கள்.

என்ன பதில் சொல்வேன் நான்?

என்னைப் பற்றி ஊரில் உலா வருவதற்கான வாய்ப்புள்ள கதை களைப் பற்றி நான் நினைத்துப் பார்த்தேன்.

"ஒரு பதினஞ்சு நிமிஷம் கழிச்சு கூப்பிடு. நான் உன் பொஞ்சாதியக் கூட்டிக் கொண்டு வாரேன்." அவர்கள் சொன்னார்கள்.

அந்த பதினஞ்சு நிமிடத்திற்கு, அதற்கு முன்னாலிருந்த மூன்றரை வருடங்களை விடவும் நீளம் அதிகமிருந்ததாக இப்போது எனக்குத் தோன்றுகிறது.

காத்திருந்து கா...த்...திருந்து இறுதியில் குஞ்ஞிக்கா மீண்டும் டெலிபோனை சுழற்றத் தொடங்கினார்.

அந்த தடவை அதிக நேரம் முயற்சிக்க வேண்டியது வரவில்லை.

பெல் அடித்தது.

குஞ்ஞிக்கா போனை எனது கையில் வைத்தார்.

நான் 'ஹலோ' என்று ஒரு வார்த்தை சொன்னதுதான் தாமதம், மறுமுனையில் என் ஸைனுவின் ஓவென்ற அலறல் சத்தம் என் காதுகளில் வந்து மோதியது.

அதன்பின் டெலிபோனில் எங்கள் அழுகைச் சத்தம் மட்டுமே. அவள் என்னிடம் எதுவும் கேட்கவில்லை.

என் மனதை அவள் புரிந்திருக்க வேண்டும்.

சற்று நேரத்திற்குப் பின் அவள் அழுகையை அடக்கிக்கொண்டு சொன்னாள்: "நம்முட நபீல் இந்த வருஷத்திலிருந்து நர்சரிக்கு போகத் தொடங்கியிருக்கிறான். அவன பார்க்காண்டாமா...? எப்போ வாரீய...? மச்சான்... பின்ன ஒரு விஷயம், நம்மட உம்மா போய்ச் சேர்ந்துட்டாக... போன வருஷம். உங்களைப் பற்றி ஒரு தகவல்கூடத் தெரியாம நெஞ்சுடஞ்சு..."

அதன் பின்பு எதையும் கேட்கும் சக்தி எனக்கில்லை.

நான் போனை கீழே வைத்தேன்.

என் நெஞ்சு அடைத்தது.

கைகளால் முகத்தை மூடிக்கொண்டு வாய்விட்டு அழுதேன்.

குஞ்ஞிக்கா என் முதுகைத் தடவி ஆறுதல் சொன்னார்.

"ஏ நஜீப், என்ன இது? நீ படாத கஷ்டமா? எல்லாவற்றையும் தாண்டி வந்தவன் தானே நீ? உனக்குத் தெரியாததா. எல்லாம் அந்த கடவுள் தருவதுதான்னு நினச்சுக்கோ. அவனிடம் கேள்வி கேட்க நமக்கு உரிமையில்லையே."

குஞ்ஞிக்காயின் அன்பை உண்டபடியே நான் அந்த அறையில் மூன்று மாதங்களைக் கடத்தினேன்.

நாளடைவில் என் உடம்பிலிருந்த காயங்களெல்லாம் மெதுவாக ஆறின. நீர் வற்றி கால் முன்பு போலானது. நான் மெல்ல என் பழைய நிலைக்கு வந்தேன்.

அதற்கிடையில் அவ்வப்போது குஞ்ஞிக்காயிடமும், தோழர்களிடமும் நான் என் கதையைச் சொன்னேன்.

பலரும் அதை 'இது நம்பவே முடியாத கதை' என்று சொல்லி அலட்சியப்படுத்தினார்கள். வெகு சிலர்தான் அதை நம்பினார்கள். நம்பியவர்களும் இப்ராஹிம் காதரி மாயமானதை மட்டும் நம்பாமல் எஞ்சிய எனது கதையை நம்பினார்கள்.

அவர்களுடைய சந்தேகத்திலும் நியாயம் இருக்கிறது.

ஆனால் என்னாலும் அதைப்பற்றி மிகச் சரியான விளக்கம் எதுவும் கொடுக்க முடியவில்லை.

இப்ராஹிம் காதரி, எனது ரட்சகன். பாலைவனத்தில் என் மீட்பன். எனது மூஸா நபி. என்னை வாழ்க்கையின் வாசல்படிவரை கொண்டு வந்து சேர்த்துவிட்டு அந்த இரவில் எங்கே போய் மறைந்தான்...?

உங்களைப் போலவே எனக்கும் அது புரியாத புதிர்தான்.

நான் குணமடைந்து கொண்டிருந்தபோதுதான் குஞ்ஞிக்காயின் அறைக்கு ஹமீதும் அபயம் தேடி வந்தான்.

அறையில் அவனுடைய பேச்சுத்துணை எனக்கு பெரிய ஆறுதலாக இருந்தது. குஞ்ஞிக்காயும், தொழிலாளர்களும் ஹோட்டலுக்குப் போய்விட்டால், பின் அந்த பிளாட்டில் தனியாக இருக்கும் வெறுமையை நான் ஹமீதின் துணையுடன்தான் விரட்டியடித்தேன். அது எனக்கு சந்தோஷமளித்தது.

அதன் பின்புதான் பல நாள் ஆலோசனைகளுக்கும், பலருடைய அறிவுரைகளுக்கும், பல விதமான கணக்கு கூட்டல்களுக்கும் முடிவில், இனியும் தாமதிக்காமல் நாங்களிருவரும் போலீஸின் பிடியில் அகப்படுவது என்று தீர்மானமாயிற்று. அதன்படியே நாங்கள் சிறைக்கு வந்து சேர்ந்தோம்.

# 43

ஒவ்வொரு முகத்திலும் தன் பார்வையை படரவிட்டபடியே அர்பாபு மெதுவாக முன்னோக்கி வருகிறான். அவன் ஒவ்வொரு அடியெடுத்து வைக்கும்போதும் என் இதயம் மார்புக் கூட்டிலிருந்து வெளியேறி மூச்சுக் குழாயில் வந்து அடைத்தது.

இனி மீண்டுமொரு மஸரா வாழ்க்கையா...?

என்னால் அதை கற்பனை செய்துகூட பார்க்க முடியவில்லை. 'வேண்டாம்... என்னால் தாங்க முடியாது. என் மீது கருணை காட்டுங்கள் இறைவா.' என் மனம் வெந்து துடித்தது.

ஆனாலும் ஹமீதைப் போல் நான் வாய்விட்டு கதறவில்லை. என் முழு தைரியத்தையும் வரவழைத்துக் கொண்டு, அர்பாபு என் அருகில் வரும் அந்த கணத்தை எதிர்பார்த்தபடியே நின்று கொண்டிருந்தேன்.

அந்த காத்திருப்பு ஒரு யுகம் போல் நீண்டு கிடந்ததாக இப்போது தோன்றுகிறது.

கடைசியாக இதோ அர்பாபு என் முன்னால் வந்தே விட்டான்.

வந்தவன் சில கணங்கள் என் முகத்தையே கூர்ந்து பார்த்தான்.

அவன் கண்களில் ஒரு பாலைவனப் புயல் தாண்டவமாடிக் கொண்டிருந்தது. அதன் கோரப் பற்கள் எனக்கு அச்சமூட்டின.

ஆனாலும் நான் என் பயத்தை வெளிக்காட்டாமல், யாரையோ ஒரு அன்னியனைப் பார்ப்பதுபோல் இயல்பாக இருக்க முயன்றேன். என் முகத்தில் எந்த விதத்திலும் பதட்டத்தின் சுவடுகள் தெரிந்து விடக்கூடாது என்பதில் நான் வெகு கவனமாக இருந்தேன். எந்த வினாடியும் அவன் என் மீது கை வைக்கக்கூடும் என்ற நடுக்கம் உடலுக்குள் ஊற்றாய் பெருகத் தொடங்கியது.

சற்று நேரத்தில் என் முகத்திலிருந்து தன் பார்வையை அகற்றிய அர்பாபு, என் தோளில் ஒரு தட்டு தட்டிவிட்டு, என்னைத் தெரியாதது போல் அடுத்தவன் பக்கம் நகர்ந்தான்.

அப்போதுதான் எனக்கு மூச்சு வந்தது.

ஆனாலும் என்னைத் தேடி வந்த அர்பாபுவிடம் திடீரென்று அப்படியொரு மனமாற்றம் ஏற்பட என்ன காரணம்?

எனக்கு ஒன்றுமே புரியவில்லை.

அற்புதம், மகா அற்புதம். அதைத்தவிர வேறென்ன சொல்ல!

ஆனாலும் என் உள்ளத்தில் சந்தேகம் என்னும் தீக் கங்குகள் சிலவற்றை வாரியிறைத்து விட்டுத்தான் அர்பாபு அந்த சிறையிலிருந்து வெளியே போனான்.

அன்றைய அரபி பரேடு முடிந்து, எனக்குத் தெரிந்த ஒரு அரபி போலீஸ்காரனிடம் பேசிக் கொண்டிருக்கும்போது, இப்போது வந்து போனவன் என்னுடைய அர்பாபு என்றும்,அவன் என்னை இழுத்துக் கொண்டு போகாததற்கு அல்லாவின் கருணையைத் தவிர வேறெதுவும் இல்லை என்றும் நான் சொல்லிக்கொண்டிருந்தேன்.

அதற்கு அந்த போலீஸ்காரன் சொன்ன பதிலைக் கேட்டு நான் திடுக்கிட்டுப் போனேன்.

"அவன் என்னுடைய விசாக்காரனாக இல்லாமல் போய்விட்டான். இல்லையென்றால் நான் அவனை என்னுடைய மஸரா வாசல் வரையிலும் தரதரவென்று இழுத்துக் கொண்டு போயிருப்பேன்" என்றல்லவா உன் அர்பாபு சொல்லிவிட்டுப் போனான்.

இது பிடிக்க வந்த ஆளை உடன் கொண்டு போகாமல் வெறும் கையுடன் திரும்பி போகும் தோல்வியை மறைக்க சொன்னதா...? இல்லை, உண்மையிலேயே அர்பாபு உள்ளம் பொசுங்கும் அந்த உண்மையைத்தான் சொல்லிவிட்டு போயிருக்கிறானா?

அப்படியானால்... வேறொருவருடைய விசாவில் வந்திறங்கிய என்னை அந்த சூழ்ச்சிக்கார அர்பாபு ஏர்போர்ட்டிலிருந்து கடத்திக் கொண்டா போயிருந்தான்?

ஏ, அல்லா, நீ என்னை வேறு எவருடைய விதியிலோ தள்ளி விட்டிருக்கிறாய் இல்லையா...?

அது உண்மைதான் என்பதை நிரூபிக்கும் விதத்தில் பிற்பாடு அந்த கருவாற்றாக்கார மச்சான் என் தலைமேல் அடித்து ஆணையிட்டு சொன்னான்: "நான் அனுப்பியது ஆடு மேய்ப்பதற்கான விசாவே இல்லை. அதுவொரு கன்ஸ்ட்ரக்ஷன் கம்பெனியின் ஹெல்ப்பர் விசா."

யாருக்குத் தெரியும், யார் சொல்வது உண்மையென்று.

அதனால் அதைப்பற்றி மேன்மேலும் சிந்தித்து என் தலையைப் புண்ணாக்கிக்கொள்ள நான் விரும்பவில்லை.

அப்படியொரு மஸரா வாழ்க்கை வாழ வேண்டும் என்பது என் தலைவிதி.

நாம்தான் இப்போது அதையெல்லாம் தாண்டி வந்து விட்டோமே..!

இனிமேலும் அதையே நினைத்துக் கொண்டிருந்தால் ஒரு வேளை எனக்கு பைத்தியம் பிடித்தாலும் பிடித்துவிடலாம்.

அப்படியே மூன்று வாரங்கள் கழிந்தன.

இதற்கிடையே ஏதாவதொரு போலி பேப்பருடன் அர்பாபு மீண்டும் என்னைத் தேடி வந்துவிடுவானோ என்னும் பதட்டத்துடனேயே நான் நாட்களை நகர்த்திக் கொண்டிருந்தேன்.

ஆனால் அதன் பிறகு அர்பாபு மறுபடியும் அங்கு வரவேயில்லை. வேறேதோவொரு அப்பாவி அவன் கைகளில் மாட்டியிருக்க வேண்டும். அந்த பரிதாப ஜீவனுக்கு அல்லாஹ் கருணை காட்டட்டும்.

வழக்கமான ஒரு அரபி பரேடுக்கு அடுத்த நாள் எம்பஸி ஆட்கள் வந்தார்கள். வழக்கம் போலவே நாங்கள் வரிசைகட்டி நின்றோம். வழக்கம்போலவே ஒவ்வொரு பெயராக வாசித்தார்கள். வழக்கம் போலேவே எதிர்பார்ப்பு எதுவுமில்லாமல் விட்டேத்தியாக நான்.

சட்டென்று என்னுடைய பெயரைக் கூப்பிட்டதுபோல் ஒரு பிரமை.

ஒரு நிமிடம் நான் திடுக்கிட்டேன்.

என்னுடைய பெயரைத்தான் கூப்பிட்டார்களா...? அல்லது அது என்னுடைய வெறும் பிரமை தானா...? இல்லை அது என் பெயரே தானோ...?

நான் குழம்பிக் கொண்டிருந்தபோது அவர்கள் மீண்டும் கூப்பிட்டார்கள்.

நஜீப் முகமது.

இப்போது அது எனக்கு தெளிவாகக் கேட்டது.

அது என்னுடைய பெயரேதான்.

இதயம் துடிக்க நான் வரிசையின் முன்னால் போய் நின்றேன்.

அப்போது என் வரிசையிலிருந்து ஒரு சந்தோஷ முழக்கம் கேட்டது.

காரணம், அந்த சிறையின் 'சீனியர் சிட்டிசன்' நான்தான்.

அன்று எங்களில் எண்பது பேருக்கு இந்தியா போக 'ஃப்ரீ அவுட் பாஸ்' கிடைத்தது.

சட்டத்திற்குப் புறம்பாக அங்கு இருப்பவர்களை அரசாங்கச் செலவிலேயே சொந்த நாட்டிற்கு திருப்பியனுப்பும் நடவடிக்கையின் ஒரு பகுதிதான் அது.

அதனால் எனக்காக விமான டிக்கெட் எடுக்கும் சிரமம் குஞ்ஞிக் காவுக்கு ஏற்படவில்லை. அப்படியே எடுக்க வேண்டியது வந்தாலும்

தயங்காமல் எடுக்கும் அளவுக்கு பரந்த மனசு படைத்தவர் தான் குஞ்ஞிக்கா.

எங்களை கூட்டிக்கொண்டு போவதற்கான பேப்பர்கள் தயாரா வதற்குள் கிடைத்த சிறிய இடைவெளியில் நான் அங்கிருந்தவர்கள் எல்லோரிடமும் விடைபெற்றுக் கொண்டேன். சிலருக்கு ஆறுதல் சொன்னேன். போலீஸ்காரர்களிடமும் வணக்கம் சொல்லி விடை பெற்றேன்.

வார்டனின் அறையில் எங்களிடம் பல்வேறு பேப்பர்களில் கை யெழுத்து வாங்கினார்கள்.

அதன்பின் எங்கள் கைகளில் விலங்கு பூட்டி, அறையின் ஒரு மூலையில் வரிசையாக நிற்கச் செய்தார்கள்.

நடுப்பகல் நேரத்தில் ஒரு பஸ் வந்து எங்களையெல்லாம் ஏற்றிக் கொண்டு நேராக ஏர்போர்ட்டுக்குப் போனது.

ஏர்போர்ட்டின் சிறப்பு வாசல் வழியாக நேரடியாகவே நாங்கள் உள்ளுக்குள் கொண்டு செல்லப்பட்டுவிட்டோம்.

அதனால் குஞ்ஞிக்காவை ஒருதடவை கூப்பிட்டு தகவல் சொல்லக் கூட என்னால் முடியாமலாகி விட்டது. யாராவது போய் விஷயத்தை அவரிடம் நிச்சயமாக சொல்லியிருப்பார்கள்.

ஆனாலும் நேரில் ஒருதடவை அவரை பார்க்காமலேயே வந்து விட்டோமே என்னும் வருத்தம் இப்போதும் என் நெஞ்சில் வடுவாக இருக்கிறது.

இந்த உலகின் ஏதாவதொரு மூலையிலிருந்து குஞ்ஞிக்கா இதை படிப்பாரென்றால், அந்த தவறுக்கு குஞ்ஞிக்கா என்னை பொறுத்தருள வேண்டும் என்று நான் இதயப்பூர்வமாக வேண்டிக் கொள்கிறேன்.

இரவு, எங்களுக்கான விமானம் தயாரானது.

எம்பஸி ஆட்கள் எங்கள் ஒவ்வொருவரிடமும் ஒரு 'போர்டிங் பாஸ்' தந்தார்கள். அதன்பின் ஒரே கூட்டமாக எங்களை விமானத்தை நோக்கி அழைத்துப்போனார்கள்.

அது விலங்கணிந்த எண்பது ஆடுகளை ஒரு மஸராவுக்குள் விரட்டிக் கொண்டு போவதைப்போலிருந்தது எனக்கு.

அதில் ஒரு ஆடு, நான்.

நஜீப்.

ஆடு ஜீவிதம்!

# பின்குறிப்பு

"நீ ஒரு தடவை அவரைப் போய் பார். முடிந்தால் அவரைப்பற்றி ஏதாவது எழுது."

நண்பன் சுனில் ஏதேச்சையாக ஒரு நாள் என்னிடம் சொன்ன போதுதான் நான் முதல் முதலாக நஜீபைப் பற்றி கேள்விப்பட்டேன். இது, நாம் வழக்கமாக கேட்கும் கல்ஃப் கதைகளில் ஏதோவொன்றுதான் என்று நான் அசட்டையாக இருந்தேன். ஆனால் சுனிலோ என்னை நச்சரித்துக்கொண்டேயிருந்தான். "உனக்கு ஒரு தடவை அந்த நஜீபைப் போய் பாத்தால் தான் என்ன, அவருடைய கதையைக் கேளு, உனக்குப் பிடித்திருந்தால் அதைப்பற்றி ஏதாவது எழுது, பிரச்சனை வருவதற்கு முன்னாலேயே முணுக்கென்று கூம்பிப் போகும் நம்மைப் போன்றவர்களுக்கு அவர் ஒரு மகா அனுபவம்."

அப்படித்தான் ஒரு நாள் நான் நஜீபைப் பார்க்க போனேன். அமைதியான தோற்றம். "அதெல்லாம் நடந்து எத்தனையோ காலங்களாகி விட்டன. பலதும் மறந்தே போய்விட்டது..."

அந்த அனுபவங்களைப் பற்றி கேட்டபோது நஜீப் வெகு சங்கோஜத்துடன் சொன்னார். நான் விடாமல் வற்புறுத்திய போதுதான் அவர் மெதுவாக தன் கடந்த காலத்தைப் பற்றி பேசத் தொடங்கினார். மறந்து போய்விட்டதாக அவர் அது வரையிலும் நினைத்துக் கொண்டிருந்த சம்பவங்களெல்லாம் ஒவ்வொன்றாக அவரது கண்களிலிருந்து இறங்கி வர ஆரம்பித்தன. அதன் வேகத்தைப் பார்த்து நான் திகைத்துப்போனேன்.

அதன் பின் பலதடவை அவரைப் போய்ப் பார்த்தேன். பலமணி நேரம் அவரைப் பேச வைத்தேன். அந்த அவல வாழ்க்கையின் ஒவ்வொரு கணத்தையும் மிகக் கவனமாக பதிவு செய்தேன். அப்போது தான் எனக்கொன்று புரிந்தது. இதுவரை நாம் கேட்டிருந்த கதைகளெல்லாம் எத்தனை போலியானதென்று.

நஜீபை முதல்முதலாக பார்க்கப்போகும்போது, அவருடைய அனுபவத்தையெல்லாம் ஒரு கதையாக எழுதவேண்டும் என்ற திட்டமெதுவும் என் மனதில் இல்லை. வாழ்க்கையில் இப்படிப்பட்ட சில அத்தியாயங்களைக் கடந்துபோன ஒரு மனிதரின் அனுபவத்தைத் தெரிந்துகொள்வோமே என்னும் ஆர்வம் கலந்த குறுகுறுப்பு மட்டுமே அப்போது எனக்குள் இருந்தது.

ஆனால் நஜீபின் அனுபவங்களைக் கேட்க கேட்க என்னால் அதைப்பற்றி எழுதாமலிருக்க முடியவில்லை. கல்ஃபில் இலட்சக்கணக்கான மலையாளிகள் இருக்கிறார்கள். எத்தனையோ இலட்சம் பேர் இங்கு வந்து போகிறார்கள். ஆனால் அவர்களில் எத்தனை பேருக்கு இங்குள்ள பாலைவனத்தின் தீவிரத்தைப் பற்றித்தெரியும்? நஜீபின் வாழ்க்கை மீது வாசகர்களுக்கு சுவாரசியமூட்ட நான் அப்படியொன்றும் ஜோடனைகள் செய்யவில்லை. அவையெதுவும் இல்லாமலேயே வாசகர்களை கட்டிப்போடும் வாசிப்புத் தரம் கொண்டது அவரது வாழ்க்கை.

இது நஜீபின் கதையல்ல–

அவருடைய வாழ்க்கை!

ஆட்டு வாழ்க்கை – ஆடு ஜீவிதம்!

ஆடு மனிதன்!

இது மல்லாந்து கிடக்கும் பாலைவனத்தில் உருவான அனலடிக்கும் அனுபவக் கதை. அரைஜாண் வயிற்றுக்காக வீட்டையும், நாட்டையும் பிரிந்து மணல் காட்டுக்குப்போய் அகப்பட்டுக்கொண்ட நஜீப் ஸ்பரிசம், வாசனை, அன்பு, ஆசை என்ற மனித நிலைகளை முற்றிலுமாகப் பறிகொடுத்துவிட்டு ஆட்டுக்கிடையில் ஒரு ஆடாகவே மாறிப்போன அவலம் மனம் கசியச் செய்கிறது. 2010 கேரள சாகித்ய அகாடமி விருது பெற்ற இந்நாவல் வித்தியாசமான ஒரு வாசக அனுபவத்தை தருகிறது.






உயிர்மை
பதிப்பகம்
₹140
ISBN-978-93-81095-36-2
www.uyirmmai.com